# தமிழில் நவீனத்துவம், பின் - நவீனத்துவம்

ஞானி

காவ்யா
பெங்களூர் - 560 038

நூல் : தமிழில் நவீனத்துவம், பின் நவீனத்துவம்
ஆசிரியர் : ஞானி (கி. பழனிச்சாமி)
உரிமை : ஆசிரியருக்கு
முதற்பதிப்பு : டிசம்பர், 1997
வெளியீடு : லட்சுமி சுந்தரம்
காவ்யா, 16 - 17 வது குறுக்குத் தெரு,
இந்திரா நகர், 2 வது தளம்,
பெங்களூர் - 560 038
ஒளி அச்சு : ஜி.எம்.சிஸ்டம்
10 வது வீதி, காந்திபுரம்,
கோயமுத்தூர் - 641 012.
அச்சாக்கம் : மா பிரிண்டர்ஸ்
பெங்களூர்
பக்கங்கள் : 20 + 172
விலை : ரூ. 50.00

**TAMIZHIL NAVEENATHUVAM, PIN-NAVEENATHUVAM**
(Modernism and Post Modernism in Tamil)

© GNANI (Ki. PALANISAMY)
First Edition : December 1997
Published by : LAKSHMISUNDARAM
KAAVYA, 16,17th E Cross.
Indira Nagar, II Stage,
Bangalore - 560 038
Laser Typeset : G.M. Systems,
10th Street, Gandhipuram,
Coimbatore - 641 012
Printers : Maa Printers, Bangalore
Pages : 20 + 172
Price : Rs. 50.00

# பதிப்புரை

திரு. ஞானி அவர்கள் வானம்பாடிகளுள் ஒருவர். படைப்பிலக்கியவாதி, திறனாய்வாளர், பத்திரிக்கை ஆசிரியர் என்பதோடு மார்க்சியவாதி என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். சங்க இலக்கியம் தொடங்கி நவீன இலக்கியம் வரை ஈடுபாடு உள்ளவர். எதையும் எளிமையாக, தெளிவாக, இனிமையாக, எழுதும் ஆற்றல் கொண்டவர்.

இவரது நூலை வெளியிடுவதில் காவ்யா மகிழ்ச்சி கொள்கிறது. தமிழின் அனைத்து வீரியங்களையும் அவற்றின் வீச்சுகளோடும் வீறுகளோடும் எவ்வித வேறுபாடுகளும் காட்டாமல் வெளியிட்டு வருவதில் காவ்யா ஆர்வம் கொண்டுள்ளது. இது தன் தொகுப்பு நூல்களில் ஆண்டுதோறும் இவரது ஒரு கட்டுரையையாவது தொடர்ந்து வெளியிடுவதில் அக்கறை கொண்டு வருகிறது. இப்பொழுது தான் முதலில் இவரது முழுமையான நூலை வெளியிடும் வாய்ப்பைப் பெற்றுள்ளது. இதற்கு நண்பர் திரு. ஞானிக்கு நன்றி சொல்ல வேண்டும்.

இந்நூலில் தமிழில் நவீனத்துவம், பின்-நவீனத்துவம், மார்க்சியம், மரபு, மெய்யியல் ஆகியவற்றை மிக இலகுவாக, சிக்கு சிடுக்கு இல்லாமல் விவரித்துள்ளார். இந்த தொகுப்பிலுள்ள தமிழில் நவீனத்துவம், பின்-நவீனத்துவம் என்ற முதல் கட்டுரையின் தலைப்பை இந்த நூலுக்கு தலைப்பாக இட்டுள்ளோம். இவரது நடை தெளிந்த வற்றாத நீரோட்டமே. வாசகர்கள் வாங்கி உதவுக.

**காவ்யா சண்முக சுந்தரம்**

பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்களின் கடிதங்களிலிருந்து :

கொழும்பு
15.6.1997

என் பெருமதிப்புக்கும் அன்புக்குமுரிய ஞானி அவர்கட்கு,

மதுரையில் தங்களைச் சந்தித்ததை ஒரு கொடையாகவே கருதுகிறேன். தங்களின் அர்ப்பணிப்புணர்வும், உண்மை பற்றிய தேடல் நேர்மையும் என்னைச் சிலிர்க்க வைத்தன. தங்கள் முயற்சிகள் வெல்க, சிறக்க என்று வாழ்த்துவது எமது கடமையென்று கருதுகிறேன்.

...

தங்கட்குத் திருவும் சீரும் பொலிக.
மிக்க அன்புடன்
**கா. சிவத்தம்பி**



30.6.1997

நிகழ் கட்டுரைகளை ஒன்றன்பின் ஒன்றாக படிக்க தொடங்கி உள்ளேன். சிறு பத்திரிக்கைக்கு (Little Journal) அப்பாலே சென்று 'Journal' ஆகவே தொழிற்படும் நிலையை நிகழின் பல இதழ்களில் காண முடிகிறது.

...

தங்களை நேரிற் சந்தித்தமை மிகுந்த மனநிறைவைத் தந்தது. நங்கள் எல்லோரும் தமிழில் வாழ்கிறோம். அது தரும் திருப்தி அளப்பரியது.

அன்புடன்,
**கா. சிவத்தம்பி**

# அணிந்துரை

மனித குலம் பல நூற்றாண்டுகளாக வளர்த்து வந்த தத்துவம், விஞ்ஞானம், நடத்திய போராட்ட அனுபவங்கள் ஆகியவற்றைச் சாறு பிழிந்து மார்க்சிய மூலவர்கள் 19 ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் உருவாக்கிய கோட்பாடே மார்க்சியம். எதேச்சதிகாரமும், காலனிச் சுரண்டலும் உச்சத்தை நோக்கிப் படுவேகமாக வளர்ந்து கொண்டிருந்த காலம் அது. அடிமைகளை வைத்திருப்பதில் பெருமைப்பட்ட காலம். காட்டுமிராண்டித்தனமாக நாடுகளையும் மனிதர்களையும் அடிமைப்படுத்தி அதிகாரம் செய்வது நாகரீகம் என்று நினைத்த காலம். அன்பை வளர்க்கவேண்டிய மதங்கள் அதிகாரத்துக்குத் துணை நின்ற காலம். உழைக்கும் மனிதன் மிருகங்களிலும் கேவலமாக மதிக்கப்பட்ட - நசுக்கப்பட்ட காலம். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் பிரஞ்சுப் புரட்சியின் விடியல் கோஷங்கள் ரத்தத்தில் மூழ்கடிக்கப்பட்ட காலம். சுரண்டும் கூட்டத்தினுள் பிறந்த ஜனநாயகத்துக்குச் சிறகு முளைக்காத காலம்.

எந்தச் சிந்தனை ஆனாலும் சரி, காலத்துக்குள்ளும் சூழலுக்குள்ளும் தான் உருவாகிப் பரிணமிக்கிறது. மார்க்சியமும் அவ்வாறே. தன் காலத்தின் நிலைமைகளைக் கணக்கில் எடுத்து, அன்றைய மனிதகுல விடுதலைக்காக மார்க்ஸ், தன் ஆயுதத்தை வடிவமைத்துக் கூர் தீட்டி மக்கள் கையிலே தந்தார். போர்முறைகளை வகுத்தார். தானே முன்னின்று போரிடவும் செய்தார். 20 ஆம் நூற்றாண்டுப் பூமியின் முகத்தைப் பழைய உலகம் கற்பனை செய்து பார்த்திராத அளவில் மார்க்சியம் மாற்றி அமைத்தது. ஏகாதிபத்தியங்கள் நொறுங்கின. அடிமைச் சங்கிலிகள் அறுந்தன. மனித குலம் இதுவரை கண்டிராத பெரும் பாய்ச்சலில் முன்னேறிற்று.

ஆனால் மனித குலத்துக்கு ஏற்பட்ட வளர்ச்சியோடு மார்க்சியம் தன்னை வளர்த்துக் கொள்ளவில்லை. புதிய சூழலுக்குத் தக்கவாறு அது உடனுக்குடன் தன்னைத் தகவமைத்துக் கொள்ளவில்லை. வளர்ச்சி குன்றி, ஆற்றல் குறைந்து, அது சுருங்கத் தொடங்கிற்று.

உலகம் முழுவதும் உள்ள அறிஞர்கள் கவலை கொண்டார்கள் புதிய காலச்சூழலில் உள்ள புதிய மனிதனுக்குக்கேற்ப மார்க்சியத்தைப் புதுமைப்படுத்தக் கடுமையாக முயன்றார்கள். மார்க்சியத்தினுள் அறவியலின் ஆதிக்கத்திற்குச் சமதையாக அறவியலின் எழுச்சியையும் ஏற்படுத்த முனைந்தார்கள். உலக மனிதனின் முகத்தை எழுதும் வெறியில், உள்ளூர் மனிதனின் முகத்தை அழித்துவிடக்கூடாது

என்றார்கள். சமூக இலட்சியங்களின் மீதே கவனம் குவிந்து, வாழ்வின் சராசரித் துளிகள் பொருள் இழந்துவிடக்கூடாது என்றார்கள். விஞ்ஞான, தொழில் நுட்ப ஆதிக்கத்தால் சுற்றுச்சூழல் சிதைந்துவிடக் கூடாது என்றார்கள். இயந்திரங்களின் ஆதிக்கத்தால் மனிதன் இயற்கைக்கு மட்டுமல்ல, தனக்குத் தானேயே முற்றிலும் அந்நியமாகிப் போய்விடக் கூடாது என்றார்கள். அதிகாரத்தின் இறுக்கத்தில் வாழ்வு சாறு இழந்து சக்கையாகிவிடக் கூடாது என்றார்கள். சமூக வாழ்வை மேம்படுத்த என அதிகாரத்தைக் கைப்பற்றுபவர்களை அந்த அதிகாரமே போதை ஏற்றிப் பாழ்படுத்திவிடுகிறது, எனவே புரட்சியாளர்கள் அதிகாரத்தைக் கைப்பற்றுவதை விட மக்கள் இயக்கத்தில் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்கிறார்கள்.

இவ்வாறாகப் பல சிந்தனைக் கூறுகளை மார்க்சியத்தில் கலந்து மார்க்சியத்தைப் புதிய மனிதனுக்குப் புதிய சூழலில் ஒளி தரும் பேராற்றலாக வளர்த்தெடுக்க முனைந்தார்கள் - முனைந்து கொண்டிருக்கிறார்கள். உலகெங்கும் நடந்து கொண்டிருக்கும் காரியம் இது.

இந்தியாவைப் பொறுத்த வரையில் மார்க்சியம் தொடர்பான நம் பிரச்சனைகள் இன்னும் சிக்கலானவை. மேற்கும் கிழக்கும் பல அம்சங்களில் வேறுபட்டவை. முக்கியமாக மார்க்ஸ் குறிப்பிடும் ஆசிய உற்பத்தி முறை இங்கு பரவலாக உள்ளது. விஞ்ஞானத்தின் ஆதிக்கம் இங்கு குறைவு. தொழிலாளி வர்க்கத்தின் எண்ணிக்கையும் குறைவு. வளமான பூமி, வகைவகையான உயிரினங்கள், தாவரங்கள். இயற்கையோடு இயைந்து வாழ்வதற்கு ஏற்ற அருமையான சுற்றுச்சூழல். எளிமையையும் துறவையும் வாழ்வின் பிரிக்க முடியாத அம்சங்களாக ஏற்றுக்கொண்ட பாரம்பரியத்துக்குரிய மக்கள். நீண்ட வரலாறு, ஆழ்ந்து விரிந்து செல்லும் கலை இலக்கியங்கள், சமயங்கள், மனித வாழ்வுக்கு ஆன்மீகப் பொருள் தேடும் ஆழமான முயற்சிகள். இவற்றை எல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளாவிட்டால் மார்க்சியம் இங்கே வேர்பிடிக்கச் சிரமப்படும்.

மார்க்சியத்தைக் கீழை மண்ணுக்கு ஏற்ற வகையில் வடிவமைக்கும் முயற்சிகளும் இங்கே நடந்துகொண்டு இருக்கின்றன. சீனாவில் மாவோ, இந்தியாவில் எம்.என்.ராய் எனச் சிலரைச் சொல்லலாம். தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் மண்ணுக்கு ஏற்ற மார்க்சியம் வடிவமைக்க சிங்காரவேலரும், ஜீவாவும் செய்த முயற்சிகள் குறிப்பிடத்தக்கவை. இன்று இந்த முயற்சியில் மேலும் பலர் இறங்கியுள்ளனர். இவர்களில் குறிப்பிடத்தக்க ஒருவர் கோவை ஞானி என்று அன்போடு அழைக்கப்படுகின்ற கி. பழனிச்சாமி

அவர்கள். ஒரு போராளி, கவிஞர், விமர்சகர், இதழாளர், ஆய்வாளர், தத்துவ ஆசிரியர் எனப் பல பரிமாணங்களில் தமிழ் கூறும் நல்லுலகம் முழுவதும் ஆழமான தாக்கங்களை ஏற்படுத்தி வருகின்றவர் இவர். எளிமை, இனிமை, உண்மை, இவற்றின் உருவம் இவர். மார்க்சியம், தமிழ்க் கலை இலக்கியம், தத்துவம், மனித வாழ்வின் மேன்மை, மகத்துவம் என்று வளரும் சிந்தனைகளுக்குள்ளே தன்னை இடைவிடாமல் கரைத்துக் கொண்டிருப்பவர். விசாலமான பார்வையும் அன்பு ததும்பும் இதயமும் உடையவர். எவ்வளவு கடினமான பிரச்சினையாக இருந்தாலும் அதைச் செரித்துத் தன்வயப்படுத்திப், பாலாக்கி, மக்களுக்கு ஊட்டும் தாய்மைப் பண்பு மிக்கவர். இந்த நூலில் அவர் மார்க்சியத்தைத் தமிழ் மண்ணுக்கு ஏற்றதாக விரிவுபடுத்த மிகக் கடுமையான முயற்சிகள் செய்திருக்கிறார். மனிதனை இயக்குவது அறிவு மட்டும் அல்ல; உணர்வுகளும் அவனை இயக்குகின்றன; சமயம், சாதி, கலை இலக்கியம், மரபுகள், பழக்கவழக்கங்கள் இவற்றின் ஊடாகத் தனி மனிதனுக்குள்ளும் சமூகத்துக்குள்ளும் அறிவியல் செயல்பாடுகளுக்குச் சமதையாக ஆன்மீகச் செயல்பாடுகளும் ஆற்றலோடு உள்ளன. மார்க்சியம் இதைச் சுவீகரித்துக் கொள்ளாத வரையில் முழுமையான மக்கள் சக்தியாகப் பரிணமிப்பது சிரமம் என்கிறார்.

20 ஆம் நூற்றாண்டில் கட்சி மார்க்சியம் அரசு அதிகாரத்தைக் கைப்பற்றும் "அதிகாரப்பிரிய மார்க்சியமாகக்" குறுகிப்போய்விட்டதே என்று கோபத்தோடு இவர் சுட்டிக்காட்டுகிறார். மார்க்சியத்தின் அடிப்படையான பணி மனித வாழ்வை மேம்படுத்துவதற்கான மக்கள் சக்தியை இடையறாது பொங்கி எழச் செய்வதே. அதிகாரத்தைக் கைப்பற்றும் நோக்கம் அதிகம் முக்கியத்துவம் பெறும்போது அதில் மக்கள் எழுச்சிகள் மக்கள் பிரச்சனைகள் புறக்கணிக்கப்படுகின்றன எனக் கோபத்தோடு எச்சரிக்கை செய்கிறார்.

மனிதன் முதலாளித்துவத்தின் அசுரத்தனமான வளர்ச்சியால் சக மனிதரிடமிருந்தும் சமூகத்திடமிருந்தும், இயற்கையிடமிருந்தும் மேலும் மேலும் அந்நியமாகிக்கொண்டு வருகிறான். மனித வாழ்வு மேலும்மேலும் அர்த்தமற்றதாகிக் கொண்டே வருகிறது. முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தையும் பெருந்தொழில்களின் ஆக்கிரமிப்பையும் ஒடுக்கி, மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவைப் பேணி, மனித உற்பத்தியை அர்த்தம் உள்ளதாக்கி, மார்க்சியம் வாழ்வுக்குச் சாரம் வழங்க வேண்டும் என்கிறார்.

மேற்கத்திய சமூகங்கள் வர்க்கச் சமூகங்கள். இந்திய சமூகமோ சாதியச்சமூகம். வர்க்கச் சமூகம் பெரும் அளவில் திறந்த சமூகம்.

அதாவது ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கமாக மாற அங்கே பிறவித்தடைகள் பெரும் அளவில் இல்லை. இந்தியச் சமூகமோ பிறப்பு அடிப்படையிலான சாதிய ஏற்றத்தாழ்வுச் சமூகம். வரையறுக்கப்பட்ட சாதியத் தொழில்களைத் தவிர எதையும் தீண்டமுடியாத பிறவி அடிமைச் சமூகம். இந்த நூற்றாண்டில் தான் சாதிய ஏற்றத்தாழ்வுச் சுவர்கள் நொறுங்கத் தொடங்கி இருக்கின்றன. முழுவதும் நொறுங்கி விழ இன்னும் எத்தனையோ ஆண்டுகள் பிடிக்கும். இது மட்டும் அல்ல. பெரும்பான்மையான சாதிகளில் பெண் அடிமைத்தனம் மிகக் கொடூரமான வடிவங்களில் செயல்படுகின்றது. இந்தக் கொடூரங்களை வெறும் வர்க்கப் பார்வையால் விளங்கிக் கொள்வதோ, எதிர்த்துப் போராடுவதோ கடினம். ஆகவே மார்க்சியத்தில் சொல்லப்படும் வர்க்கப்போராட்டம் என்பதை இந்தியச் சூழலில் வர்க்க ஒடுக்குமுறைக்கும், சாதிய ஒடுக்குமுறைக்கும், பாலியல் ஒடுக்குமுறைக்கும் எதிரான போராட்டம் என்று விரிவுபடுத்திக் கொள்வது மார்க்சியரின் கடமை என்கிறார்.

மேற்கத்தியத் தத்துவமுறையிலிருந்தே மார்க்ஸ் தன் தத்துவ ஞானத்துக்கான ஆதாரங்களைப் பெரும்பான்மையாகத் திரட்டினார். இந்திய வேதங்கள், உபநிடதங்கள் முதலியன, பிற்கால பக்தி இயக்க மரபுகள், தென்னிந்தியச் சிந்தனை மரபுகள், இவைகளுக்கு எதிரான சித்த மரபுகள், பல்வேறு இன மக்களின் மாற்று மரபுகள் இவைகளே. இந்திய வாழ்க்கையைக் காலங்காலமாக உயிர்ப்பித்து அழகுபடுத்தி வந்துள்ளன. மார்க்சியத்தின் வழி காட்டுதலில், நாம் நம் பண்பாட்டு மரபுகளைப் பரிசீலனை செய்து, இன்றைய வாழ்வுக்குத் தக்கமுறையில் தேவையானவைகளைத் தொகுத்துக்கொள்ள முடியும். இந்தத் தொகுப்பே தாய்ப்பால் போல நம்மை வளர்க்கும்.

அறிஞர் தேவிபிரசாத் சட்டோபாத்தியாயா அவர்கள் இந்த முயற்சிகளின் ஆக்கப்பூர்வமான முன்னோடி. ஆனால் ஞானி அவர்கள் தேவிபிரசாத்திடமும் குறைகாணுகிறார். தத்துவம் என்ற பேராறு பொருள் முதல் இயல், சிந்தனை முதல் இயல், என இரண்டு கரைகளைக் கொண்டது. மனிதச் சிந்தனையின் பிரவாகம் இந்த இரண்டு கரைகளின் உள்ளே பேராறாய்ப் பெருக்கெடுத்து ஓடுகின்றது. இவைகளில் பல போக்குகள்-கூறுகள் உள்ளன. இவை ஒன்றையொன்று முட்டிக்கொள்வதும் உண்டு. சேர்ந்து கலந்து போவதும் உண்டு. வாழ்வை மேம்படுத்தும் நேரங்களும் உண்டு. சிதைத்து ஒழித்த கணங்களும் உண்டு. வரலாற்றில் இவற்றின் இயக்கங்கள் நேர்கோட்டில் செல்லுவதில்லை. வளைந்தும் நெளிந்தும் தான் செல்லுகின்றன. இவற்றில் பொருள் முதலியல் கரையோரமாக ஓடுபவைதான் உயிர்ப்பு உள்ளவை என்றும், மறு கரையோரம் ஓடுபவை அத்தனையும்

செத்தவை என்றும் ஒட்டுமொத்தமாகப் பிரிக்கும் தேவிபிரசாத்தின் போக்கை இவர் மறுக்கிறார். பொருள் முதலியல் போக்கினாலும் மனித குலம் நஷ்டம் அடைந்த காலங்கள் உண்டு. கருத்துமுதலியல் போக்கின் செல்வாக்கினால் இலாபம் அடைந்த காலங்களும் உண்டு. எனவே இந்தியச் சிந்தனை மரபின் செழுமை மிக்க கூறுகள் அத்தனையையும் திரட்டிப் பயன்படுத்திக் கொள்வது மார்க்சியரின் கடமை என்பது இவருடைய அசைக்க முடியாத கருத்து.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் பெரியாரையும் பெரியாரியத்தையும் மதிப்பிட்டு செய்து அதன் சாறுநிறைந்த கூறுகளை தன்வயப்படுத்திக் கொள்வதில் மார்க்சியர்கள் தவறிவிட்டார்கள் என்பதும் இவர் கணிப்பு. பெரியாரியமும் மார்க்சியமும் ஒரு புள்ளியில் ஒன்றுபட்டுத் தான் தங்கள் புரட்சிப் பயணங்களைத் தொடங்கின. காலச்சூழல் அவற்றைப் பிளவுபடுத்தி, இருவேறு திசைகளில் பல சமயங்களில் எதிர்எதிர் நிலைகளில் தள்ளின. இதனால் தமிழக மக்கள் வாழ்வு தேங்கியுள்ளது. மேலும் இந்திய அளவில் கூட பண்பாட்டுப் புரட்சிக்கென அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றும் நோக்கம் சிறிதுகூட இல்லாமல் செயல்பட்ட ஒரே இயக்கம் பெரியாரின் இயக்கமே. எனவே மார்க்சியர்கள் பெரியாரியத்திடம் இருந்து எடுத்துக்கொள்ள வேண்டியவை ஏராளம்.

தமிழ் இலக்கியம் பற்றியும் அவர் கருத்துக்கள் வலுவானவை. தமிழ் நீண்ட வரலாற்றுச் சிறப்புள்ள மொழி, வளமான மொழி, வாழும் மொழி, சங்கப்பாடல்கள் முதல் இன்றைய படைப்புக்கள் வரை அதன் இலக்கியங்கள் அழகும் தெளிவும் ஆழமும் மிக்கவை. வாழ்வுக்குப் புதியபுதிய பொருள்களும் புரிதல்களும் ஆற்றல்களும் தர வல்லவை ஆனால் தமிழக மார்க்சியர்கள் பெரும்பாலோரும் தமிழையும் தமிழ் இலக்கியங்களையும் புறக்கணித்தனர். புதிய சோசலிச வாழ்வை அமைப்பதற்கு நம் இலக்கியங்களில் இருந்து நாம் எவ்வளவோ உள் ஆற்றல்களையும் கருத்துக்களையும் பெறமுடியும் என்பதை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. பக்தி இலக்கியங்களின் மானுட சாராம்சத்தை அவர்கள் கண்டு கொள்ளவில்லை. தமிழ்ச்சித்தர் மரபுகளிலிருந்து, வள்ளுவரிலிருந்து, கம்பனிலிருந்து மார்க்சியர்கள் எடுத்துக் கொள்ள வேண்டியவை ஏராளம். பொருளாதார அடித்தளமே மேற்கட்டு - மானத்தைத் தீர்மானிக்கிறது என்ற கோட்பாட்டின் அளவு மீறிய தாக்கத்தால் அவர்கள் கலை இலக்கியங்களைப் புறக்கணித்தார்கள். 20 ஆம் நூற்றாண்டின் பாரதிதாசனைக் கூட முறையாக முழுமையாக அணுகவில்லை. இப்படியெல்லாம் மிகுந்த மன வேதனையோடு குறிப்பிடுகிறார் ஞானி.

நவீனகால இலக்கியத்தில் யதார்த்தப்போக்கை மார்க்சியர்கள் ஏற்றிப்போற்றுகிறார்கள். யதார்த்தப்போக்கு முதலாளித்துவ அதிகாரக் குவியலை நோக்க ஒற்றைப் பரிமாணத்தில் இயங்கும் ஒரு கலைவடிவம். அதிகாரத்தைக் கைப்பற்றும் தங்கள் லட்சியங்களை நெருங்க இவ்வகை இலக்கியங்கள் சேவை செய்வதால் இவை மார்க்சியர்களால் ஆதரிக்கப்படுகின்றன. எனவே அதிகாரக் குவிப்புக்கு எதிராகவும், சமூகக் கட்டமைப்பின் இறுக்கத்திற்கு எதிராகவும், ஆதிக்கங்களுக்கு எதிராகவும் மனிதர்களை நெகிழ வைக்கின்ற, கலகம் செய்யத் தூண்டுகின்ற, கட்டுக்களை உடைத்தெறியச் செய்கின்ற நேர்கோட்டு லட்சியங்களையும், இலக்கியங்களையும் அவற்றின் பொய்மைத் தன்மையையும் தோலுரித்துக் காட்டுகின்ற நவீனத்துவ-பின்நவீனத்துவ இலக்கியங்களை மார்க்சியர்கள் எதிர்க்கிறார்கள் என்று கவலை கொள்கிறார். இலக்கியத்தை ஒரு கருவியாகச் சுருக்கிவிடாமல் அதன் உலகத்தில் அதனை வைத்து அனுபவிக்க வேண்டும் என்கிறார். தொலைந்துபோன நம்மைத் தேடிக் கண்டுபிடிக்க, நம்மைப் புரிந்துக்கொள்ள, நம்மை நேசிக்க, நவீனத்துவ-பின் நவீனத்துவ இலக்கியங்கள் பயன்படும் என்கிறார்.

இவ்வாறு ஞானியின் நூல் மிக விசாலமான தளத்தில் செயல்படுகின்றது. சோவியத்து யூனியனின் வழியாக மார்க்சியத்தைச் சுவீகரித்துக் கொண்டவர்களே இந்தியாவில் அதிகம். அவர்களைக் குறிவைத்தே தன் கருத்துக்களை முன் வைக்கிறார் ஞானி. மாவோவின் கருத்துக்களைக் கீழை மார்க்சியத்தின் மூலக்கருத்துக்களாகப் போற்றிப் புகழ்கிறார். மார்க்சியன் மனிதகுல நன்மையைக் குறியாகக் கொண்டவன். மனிதகுலம் உருவாக்கியுள்ள நல்லவை அனைத்தையும் தன்னுள் இணைத்துக் கொள்ளும் கடமை அவனுக்கு உண்டு. கருங்கல்லையும் தின்று செரிமானம் செய்து, தன்வயப்படுத்திக் கொள்ளுகின்ற குடல் மார்க்சியனுக்கு வேண்டும் என்பார் லெனின். எல்லாவற்றையும் ஊடுருவிப் பார்த்து, அதன் பயன்பாட்டுத் தன்மையை மதிப்பிட்டு, பயனும் சுவையும் உள்ள அனைத்தையும் அவன் தன்னோடு இணைத்துக் கொள்ள வேண்டும். அரசியல் அதிகாரத்தின் மூலமாகவே எல்லாவற்றையும் சாதித்துக் கொள்ள முடியும் என்ற தப்பெண்ணத்தைக் கைவிட்டு, அரசியலுக்கும் பொருளாதாரத்துக்கும் அளிக்கும் முக்கியத்துவத்தைப் பண்பாட்டுக்கும் அளிக்க வேண்டும். பண்பாட்டுப் போராட்டத்திலும் முழுக்கவனம் செலுத்த வேண்டும். பொருளாதாரம், சமூக-அரசியல், பண்பாடு என சமூகம் முப்பரிமாணம் கொண்டது. பொருளாதாரத்தளத்தில் சோசலிசமும், அரசியல் தளத்தில் ஜனநாயகமும் ஏன் வேண்டும்? பண்பாட்டுத் தளத்தில் மனிதநேயத்தை மேலும் மேலும் செழிப்படையச் செய்யத்தான். இதை மார்க்சியர்கள் மறந்துவிடக்கூடாது. மார்க்சியம் மனித குலத்தின் முழுவாழ்வுக்கான

தத்துவம். மனித குலத்தைப் பிளவுப்படுத்தி, மனித லட்சியங்களைக் குறுக்கி மார்க்சியத்தைச் சுருக்கிவிடக்கூடாது.

ஞானியின் நூலின் உள்ளே சுற்றிவரும்போது நம் உணர்வுகள் இப்படி எல்லாம் விசாலப்படுகின்றன. இவற்றோடு சில நெருடல்களும் கூட மனதில் எழுகின்றன. இந்தியாவில் உள்ள சில முக்கியமான கம்யூனிஸ்டுக் கட்சிகளை ஞானி இவ்வளவு கோபத்தோடு கடுமையாக மதிப்பீடு செய்ய வேண்டுமா? சாதிய ஒடுக்குமுறைகளுக்கு எதிராக அடித்தள மக்களைத் திரட்டிப்போராடி மிகப்பெரிய உடைப்புக்களை ஏற்படுத்தியவர்கள் கம்யூனிஸ்ட்டுகள் அல்லவா? இன்று சாதியத்துக்கு எதிராகப் போராடுகின்றவர்கள் அன்று கம்யூனிஸ்ட்டுகள் போட்டுத்தந்த அடித்தளங்கள் மீதுதானே காலுன்றி நின்று கொண்டிருக்கிறார்கள். இந்த உண்மையை அலட்சியப்படுத்த முடியுமா? தமிழ் மொழி இலக்கியம், பண்பாடு, இவைகளைப் பொறுத்தவரையில் மரபுகளைப் பேணுவதிலும், மதிப்பிடுவதிலும் கம்யூனிஸ்ட்டுகளின் பங்கு கணிசமானது அல்லவா? சிங்காரவேலர், ஜீவா, நா.வா, ஆர்.கே.கண்ணன், எஸ். ராமகிருஷ்ணன் போன்ற மகத்தான மனிதர்களின் பணிகளை கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் 20ஆம் நூற்றாண்டின் மொழி மற்றும் கலை இலக்கியங்களை யாரும் மதிப்பீடு செய்துவிட முடியுமா? சங்கப்பாடல்கள், பக்தி இலக்கியங்கள், வள்ளுவன், கம்பன் . . . இவ்வாறு தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதையும் மனித நேயக் கண்ணோட்டத்தோடு பார்த்துத் தமிழனுக்குச் செவி இனிக்க இனிக்க ஊட்டியவர் ஜீவா அல்லவா? கம்பனில் மூழ்கி மூழ்கி முத்தெடுத்தவர் எஸ். ராமக்கிருஷ்ணன் அல்லவா? பாரதிதாசனை முறையாக ஆய்வு செய்த முதல்வர் ஆர்.கே.கண்ணன் அல்லவா! இன்றைய நாட்டார் பண்பாட்டு எழுச்சியின் நாயகன் வானமாமலை அல்லவா! பாரதி ஆய்வில் நிகரற்றவர் தொ.மு.சி. ரகுநாதன் தானே! அளவு கடந்த அன்போடு நல்லிலக்கிய வகைகள் அனைத்தையும் தட்டிக்கொடுத்து வளர்ப்பவர் அல்லவா! தி.க.சி! இப்படித் தமிழ் மொழிக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் கம்யூனிஸ்ட்டுகள் நிறையப் பணி ஆற்றியுள்ளனரே! இப்படியெல்லாம் எண்ண ஓட்டங்கள் எழுகின்றன.

மேலும் முன்னாள் சோவியத்து யூனியன் வளர்ச்சியும் வீழ்ச்சியும் பற்றி ஒவ்வொரு கட்டத்திலும் அந்த அமைப்பில் நிகழ்ந்தவை பற்றி விரிவாக விளக்குகிறார் ஆசிரியர். முன்னாள் சோவியத்து யூனியனுக்கு நிகரான ஒரு பெரிய அமைப்பு சீனம். அதன் அமைப்புப் பற்றியும், இன்றைய நிலை பற்றியும் நூலில் எந்த மதிப்பீடும் செய்யப்படவில்லை. சராசரி வாசகன் இந்த மதிப்பீட்டை ஞானியிடம் நிச்சயமாக எதிர்பார்ப்பான்.

இந்தியச் சமூகம் கீழும் மேலுமாகத்தான் இன்றும் அமைந்து இருக்கிறது. சமூகக் குழுக்கள் பக்கத்துக்குப்பக்கமாக-ஒன்றை ஒன்று நசுக்காத முறையில் - இன்னும் நம் சமூகம் அமையவில்லை. கீழும் மேலுமாக எதிர்நிலையில் இருக்கும் சமூகத்தில் கீழிருந்து மேலே பார்க்கும் பார்வையும் மேலிருந்து கீழே பார்க்கும் பார்வையும் ஒன்றுக்கொன்று முரணாகத்தான் இருக்கும். யதார்த்தவியலுக்கும் நவீனத்துவத்துக்கும் இடையில் உள்ள பிரதான முரண் இதுதான். இந்த முரணில்தான் இவ்விருவகை இலக்கியங்களின் வாழ்வும் உள்ளன. ஒன்றை ஒன்று எதிர்ப்பதென்பது ஒன்றை ஒன்று வளர்ப்பதும் தான். ஒன்று இன்னொன்றை அழித்துவிடாது; அழித்துவிடவும் முடியாது.

இதுபோல இன்னும் சிலவும் சொல்லலாம். நூலின் மொத்தச் சிறப்பைக் கணக்கிடும்போது இவை புள்ளிகளே.

மார்க்சியர்கள் சோர்வு அடைந்து, திகைத்துக் கிடக்கும் இக்காலத்தில் இந்த நூல் அவர்களுக்குப் புதிய ஒளியையும் புதிய உள்ளாற்றலையும் தருகிறது. மார்க்சியத்துக்கு இது செறிவான மனித நேய உள்ளகத்தை வழங்குகிறது. மார்க்சியத்தின் முகத்தை மேலும் அழகுபடுத்துகிறது; அதன் பார்வையை விசாலப்படுத்துகிறது. அதன் செவிகளை மட்டும் அல்ல, புலன்கள் அனைத்தையும் நுண்மைப் - படுத்துகிறது. மார்க்சியனை விரிந்து பரந்த தமிழ் மக்கள் திரளின் நண்பனாக்குகிறது.

எளியமொழி, செறிந்த சொற்கள் - சொற்றொடர்கள், கவித்துவம் மிக்க நடை ... பல பகுதிகள் கவிதைகளாகவே பிரவகிக்கின்றன. ஞானியின் விவாதமுறையும் விளக்கமுறையும் வாசகனை ஈர்க்கும் பேராற்றலோடு அமைந்துள்ளன. புத்தகம் படிக்கும் பழக்கமும், சமூகம் பற்றிய பிரக்ஞையும் உள்ள வாசகன் இதன் பக்கங்களின் ஊடே சர்வசுதந்திரமாகப் பறந்து திரிய முடியும். புதிது புதிதாக ஏராளமாகப் பார்க்க முடியும்.

மார்க்சியம் பற்றிச் சமீப காலங்களில் வந்துள்ள சிறந்த நூல் இது. நீண்ட காலத்திற்குத் தமிழகச் சிந்தனையாளருக்கும் சமூகப் போராளிகளுக்கும் இது ஆற்றல் வழங்கும் தோழர். ஞானி அவர்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுக்களும் வணக்கங்களும்.

கோவில்பட்டி,
01.08.97

அன்புடன்
**பொன்னீலன்**

# என்னுரை

இலக்கிய ஆய்வு என்பதை இலக்கியத்தின் உத்திகள், கதைப்போக்கு கற்பனை வளம், யதார்த்தத்தளம் என்ற அளவில் மட்டும் குறுக்கிவிட இயலாது. இலக்கியம் என்பது வாழ்வியலின் ஒரு படைப்புக் கூறு. வரலாற்று இயக்கத்தின் ஒரு நீரோட்டம். சமூகம் மற்றும் வரலாற்றுச் சூழலில் மனிதன் தன்னைத் தானே தேடித் தொகுக்கும் ஒரு மெய்யியல் ஆய்வு. இறுதியில் விடுதலைக்கான ஒரு நெறி. தமிழ் இலக்கிய ஆய்வையும் இப்படிப் பல பரிமாணங்களில் செய்தால் ஒழிய, தமிழ் இலக்கியத்தின் ஆற்றலை நாம் கண்டு உணர முடியாது. இன்றைய சூழலில் இத்தகைய ஆய்வின் தேவை பலமடங்கு அதிகரித்துள்ளன. இத்தகைய ஆய்வுக்கான பார்வையை, நெறியை நமக்கு வழங்கியுள்ளது மார்க்சியம். மார்க்சியத்தை ஒதுக்கிவிட்டுத் தமிழ் இலக்கியத்தின் மேன்மை என்று பேசுவது தமிழின் ஆற்றலை இன்றைய வரலாற்றுச் சூழலுக்கு வகுத்துத் தர இயலாதவர்களின் போக்கு. தமிழை அலங்காரப் படுத்துவதன் மூலம் அழிவைத்தான் தேடிச் செல்லுகிறோம். தமிழின் ஆற்றலைக் கண்டறிவது மட்டுமே நமக்கான விடுதலைக்கு வழி.

இலக்கியத்திற்குள் இயங்கும் கோட்பாட்டைத் தேடிச்சென்று தொகுக்கும்பொழுது, இலக்கியமும், வாழ்வும், வரலாறும், மெய்யியலும் நமக்குள் பிரித்தறியா வகையில் ஒருபுள்ளியில் குறுக்கும் நெடுக்குமாய் ஓடிக்குவிகின்றன. இறுதியில் வாழ்வியல்தான் எல்லாவற்றுக்கும் உரைகல் ஆகின்றது. மார்க்சியத்தையும் இந்த உரை கல்லில்தான் உரைத்து அதன் மாற்றைக் காண்கிறோம். இலக்கியத்தின் உத்திகள் முதலியனவும் வாழ்வியலிலிருந்துதான் வந்து சேருகின்றன.

வாழ்க்கை, இலக்கியம், வரலாறு, மெய்யியல் முதலியவற்றினுள் ஓடும் வற்றாத நீரோட்டங்களை கண்டறிவதாகிய இந்த நூல், முதன்மையாக இலக்கியத்தினுள் செயல்படும் கோட்பாட்டை தேடுவதாக அமைகிறது. இவ்வகை ஆய்வுக்கான பார்வையைப் பெறுவதற்கான வழி என்ற முறையில் தான் மார்க்சியம் பற்றிய ஆய்வும் இந்தக் கட்டுரைகளில் இடம் பெறுகிறது. மார்க்சியத்தின் அரசியலை, மெய்யியல் ஆதாரத்தில் நிறுத்துவதன்மூலமே இலக்கியத்தையும், வாழ்வியலையும் மேம்படுத்த இயலும் என்பது என் நம்பிக்கை.

இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ள, முதன்மையான கட்டுரைகளை எழுதும்பொழுது எனக்குள் பெருமளவு சுதந்திர உணர்வை

அனுபவித்தேன். தங்கு தடையில்லாமல் எனக்குள் பல திசைகளிலும் துழாவிச்சென்றேன். முன்பு அடைபட்டிருந்த கதவுகள் எனக்குள் திறந்து கொண்டன. புதிய காற்று எனக்குள் வீசியது. வானப் பரப்பு எனக்குள் வசப்பட்டதாக உணர்ந்தேன். அடி ஆழத்தில் இருந்த நீரோட்டங்கள் திறந்து கொண்டன. வற்றாத நீரோட்டத்தின் வழியே வாழ்வையும், இலக்கியத்தையும், வரலாற்றையும் வேறுபிரித்து அறிய இயலாதென உணர்ந்தேன். இத்தகைய பார்வையை நான் பெற எனக்குள்ளிருந்த மார்க்சியம்தான் என்னைத் தூண்டியது, தூண்டுகிறது என உணர்கிறேன். இந்தப் பேருணர்வை நண்பர்களோடு பகிர்ந்து கொள்வதற்காகவே இந்த முன்னுரையை எழுதுகிறேன்.

திரும்பத் திரும்ப நான் சொல்லுகிற ஓர் உண்மையை மீண்டும் இப்பொழுது சொல்ல விரும்புகிறேன். மார்க்சியமும் தமிழும் எனக்குள் ஆழப்பதிந்துள்ளன. தமிழ் இலக்கியத்தின் ஆழத்தையும், ஆற்றலையும் புரிந்து கொள்ள, எனக்குள் தக்க வைத்துக் கொள்ள மார்க்சியம் எனக்குள் வழி திறந்திருக்கிறது. அதைப்போலத் தமிழ் இலக்கியக் கல்வியினால் மார்க்சியப் பார்வை எனக்குள் வளமேறி இருக்கிறது. கணியன் பூங்குன்றன், வள்ளுவர், இளங்கோ மற்றும் சித்தர்கள் முதலிய தமிழ்ச் சான்றோர்கள் மூலம் வெளிப்பட்டிருக்கிற பொதுமை/ சமத்துவ/சமதர்ம உணர்வுகள் தமிழ் இலக்கியத்தை நம் நெஞ்சிற்கும், நம் காலச் சூழலுக்கும் நெருக்கமாக்கி உள்ளன. தமிழ்ச் சான்றோர்கள் வழியே வெளிப்பட்ட இந்தப் பேருணர்வுகள் ஆதிப் பொதுமைச் சமூகத்திலிருந்து வரலாற்றின் வழியே நமக்குள் இன்றுவரை தொடரும் நீரோட்டங்கள். தமிழ்ச் சமூகம், அடிப்படையில் இன்றளவும் வேளாண்மைச் சமூகம். உழவர்கள், கைவினைஞர்களின் சமூகம். இந்த வேளாண்மைச் சமூகத்தின் விளைச்சல் தான் பொதுமை/ சமத்துவ உணர்வு. இதன் இன்னொரு விளைச்சல் தமிழ் இலக்கியம் மற்றும் தமிழ்ச் சான்றோர்கள்.

இன்றைய உலகச் சூழல் நமக்குள் தமிழ் வேர்களைத் தேடித் தொகுத்துக் கொள்வதற்கும், அந்த வேர்களில் இருந்து நம்மை விளைவித்துக் கொள்வதற்கும் காரணமாகி இருக்கிறது. உலக அளவில் வலிமை பெற்று வரும் பொருளியல், மற்றும் அரசியல் சக்திகள் நமக்குள் ஆற்றல் மிகுந்த எதிர்வினையைத் தூண்டுகின்றன. இப்படி நாம் தரவேண்டிய எதிர்வினையின் ஒரு பகுதியாகத் தான் வரலாற்றுக்குள் நம்மைத் தேடித் திரட்டிக் கொள்கிறோம். தமிழ்த் தேசியம் என்ற தேடலின் ஒரு பகுதியாகத் தான் நம் இலக்கியத் தேடல்கள் அமைகின்றன. ஆற்றல் மிகுந்த வரலாற்றுக்கும் வாழ்வியலுக்கும் மெய்யியலுக்கும் நாம் சொந்தக்காரர்கள். இயற்கை தான் நம்மை வாழ்விக்கிறது. உழைப்பும் பகிர்வும் நம்மை மனிதர்கள் எனத் தக்க

வைக்கின்றன. வரலாற்றின் ஆழ்ந்த நீரோட்டங்களிலிருந்து இப்படித் தான் நமக்கான வாழ்க்கையையும், இலக்கியத்தையும், திரட்டிக் கொள்கிறோம்.

இன்று உலகளவில் சுரண்டலும் ஆதிக்கமும் நம்மீது திணிக்கப்படும் நிலையில், நமக்கான வாழ்வும், வரலாறும், இலக்கியமும் வற்றிக் கொண்டே வருவதாகத் தோன்றுகிறது. இந்தச் சூழலை நம்மால் ஏற்க முடியாது. ஆகவேதான் வரலாற்றுக்குள் ஆழ்ந்து சென்று நமக்கான வேர்களை - வாழ்க்கையை, இலக்கியத்தைத் தேடுகிறோம்.

நமக்குள் ஆழ்ந்து செல்லும் பொழுது தான் வற்றாத நீரோட்டங்கள் திறந்து கொள்கின்றன. இவற்றில் குளித்து எழும்பொழுது நாம் மீண்டும், புத்துயிர்ப்பைப் பெறுகிறோம். இத்தகைய பரவச உணர்வை நண்பர்களோடு பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

தேவி பிரசாத் பற்றிய கட்டுரை ஒன்றைத்தவிர பிற கட்டுரைகள் கடந்த இரண்டாண்டிற்குள் எழுதப்பட்டவை. நவீனத்துவம் பின்-நவீனத்துவம் என்ற இலக்கிய/மெய்யியல் கோணங்களை மார்க்சியத்திற்கு எதிரானவை என என்னால் பார்க்க இயலவில்லை. மார்க்சியத்தைச் சற்று ஆழமாகத் தோண்டினால் மார்க்சியத்தின் வளம் மேம்பட்டுத் திகழ்வதை நாம் உணர முடியும். மார்க்சியத்தின் விரிந்த பரப்பினுள் இந்தப் புதிய போக்குகளைச் செரித்துக் கொள்ள முடியும். மார்க்சியத்தின் ஆற்றலை இவ்வாறு நமக்குள் தூண்டுபவர்களில் முதன்மையானவர் மாவோ என்பது எனது நம்பிக்கை. மாவோவுக்குள் லெனின் ஆற்றல் மிக்க வடிவில் தங்கியிருக்கிறார். அன்றியும் மார்க்சியம் என்ற பெரும் தொகுப்பினுள், இன்னுமிருக்கிற மவுனங்களை நாம் இப்பொழுது கலைத்துப் பார்க்க முடியும். இந்தியச் சூழல் இதற்கான தூண்டுதலையும், சில பார்வைகளையும் நமக்குத் தருகிறது.

தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியலையும் வரலாற்றையும் இந்திய அளவில் நாம் விரித்துப் பார்க்கமுடியும். பெரியாரோடு தொடங்கியது அல்ல திராவிட இயக்கம். இந்திய நாகரீகத்தில் எத்தனையோ கிளைகளை விரித்து இருப்பது திராவிட நாகரீகம். இந்திய அளவில் விரிந்துள்ள திராவிட இயக்கத்தின் மெய்யியல் வேர்கள் ஆற்றல் மிக்கவை. நமக்குள் படர்ந்துள்ள இந்த வேர்களின் மூலங்களைத் தேடிச் செல்லும் பொழுது நாம் எவ்வளவு ஆற்றல் மிகுந்த மரபுக்குச் சொந்தக்காரர்கள் என்பதை நாம் உணர முடியும். இந்த உணர்வைத் தன் முனைப்பாகவோ, தற்பெருமையாகவோ மாற்றும் பொழுது நமக்குள் சிறுத்துப் போகிறோம் நம்மை நாமே அழித்துக் கொள்கிறோம்

தமிழ்ச் சமூகம் இப்படித் தன்னை அழித்துக் கொள்ள முடியாது. மார்க்சியத்தின் பொதுமைக் கண்ணோட்டத்தின் வழியேதான் திராவிடம் தன் உயிர்ப்பைத் திரட்டிக் கொள்ள இயலும். இதன் காரணமாகவே மார்க்சிய இயக்கமும் திராவிட/தமிழ் இயக்கமும் எதிர்த்திசைகளில் செல்வது நமக்கு உடன்பாடில்லை. இரண்டு இயக்கங்களின் வேர்களும் ஒரு புள்ளியில் தொடங்குகின்றன. இங்கிருந்தே நிகழ்காலத்திற்குள், எதிர்காலத்திற்குள் நமக்கான வாழ்க்கையையும், வரலாற்றையும் தேடிச் செல்கிறோம். இந்த நோக்கில் தான் தமிழ் மரபின் தடங்களை நான் தேடுகிறேன்.

தமிழகச் சூழலில் திராவிட இயக்கத்தைப் போலவே மார்க்சிய இயக்கமும் நிலைபெற்று விட்டது என்பதை நாம் மறுக்க முடியாது. திராவிட இயக்கத்தின் வரலாறும், மெய்யியலும், கலை இயலும் விரிவான ஆய்வுக்குரியவை. 21 ஆம் நூற்றாண்டுச் சூழலுக்குத் திராவிட இயக்கம் தன்னைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமானால், பல பரிமாணங்களில் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதைப் போலவே மார்க்சியமும் இன்றைய உலகச் சூழலில் மட்டுமல்ல தமிழகச் சூழலிலும் தன்னை வளப்படுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறது. அரசியலை மையப்படுத்துவதன் மூலம் மார்க்சியம் தன் இலக்கியப் பார்வையை ஆழப்படுத்த இயலாது. அதைப்போலவே மார்க்சியத்திற்கான மெய்யியல் பார்வையை அரசியல் என்ற அளவில் இறுக்கிக் கொள்வதன் மூலம் மார்க்சியம் தன் அழிவைத் தானே தேடிக் கொள்கிறது. வாழ்வியலுக்கும் மார்க்சியம் வளமான பார்வையை வழங்க முடியும். தமிழ் இலக்கியப் பயிற்சியில் தோய்வதன் மூலம் மார்க்சியத்தின் சில வளங்கள் மேம்படும்.

இத்தகைய ஆய்வை தமிழில் தொடங்கி வைத்தவர் தோழர் ஜீவா என்பதில் ஐயமில்லை. வள்ளுவரோடும், இளங்கோவோடும், கம்பரோடும், பாரதியோடும் தன்னை ஜீவா இணைத்துக் கொண்டிருந்தார் என்று சொல்வதைக் காட்டிலும், ஜீவா தனக்குள் வள்ளுவர் முதலிய தமிழ்ச் சான்றோர்களை இனம் கண்டார் என்று சொல்வது நமக்குக் கூடுதலான வெளிச்சத்தைத் தரும். அதாவது வாழையடி வாழையென வந்த தமிழ்ச் சான்றாண்மை என்ற நீரோட்டத்தில் இருந்து ஜீவா வெளிப்பட்டார் அல்லது அந்த நீரோட்டம் ஜீவா வழியாகப் பொங்கியது. ஜீவாவுக்குள் வெளிப்பட்ட இத்தகைய தமிழின் ஆற்றலை வெளிப்படுத்தியவர்கள் என மேலும் இரண்டொருவரைச் சொல்லமுடியும்.

அதிகாரத்தை கைப்பற்றும்/பகிர்ந்து கொள்ளும் அரசியலாக

மார்க்சியத்தை மாற்றியவர்களுக்குத் தமிழின் ஆற்றல் தட்டுப்படாதது வியப்பில்லை. கட்சி சார்ந்த இவர்களோடு எனக்கு நீண்டகால வழக்குண்டு. இவர்கள் மார்க்சியத்தை அதன் உள்ளுறை ஆற்றல் கண்டு வளர்த்தெடுக்கவில்லை. தமிழகத்தில் மார்க்சியத்தை வளப்படுத்தியவர்கள் என, கட்சிக்கு வெளியில் பலரைக் குறிப்பிட முடியும். இவர்களைக் கட்சி சார்ந்தவர்கள் மதிப்பதில்லை, பொருட்படுத்துவதில்லை. தவிர சந்தர்ப்பம் நேரும் பொழுதெல்லாம் இவர்களைக் குறைத்துப் பேசுவதில் தயக்கம் காட்டுவதில்லை. அன்றியும் அவதூறுபடுத்தவும் செய்கின்றனர். இப்படிச் செய்வதன் மூலம் மார்க்சியம் இங்கு தனக்குரிய மரியாதையைப் பெறுவதில்லை. சோவியத் யூனியன் தகர்வு என்ற பேரனுபவத்தை இவர்கள் தமக்குள்ளும் சரிவரத் தோண்டி துருவி ஆராய்வார்கள் என்றால் தம் தவறுகளை உணர முடியும்.

தோழர் பொன்னீலன் அவர்களைப் பொறுத்தவரை, தோழர் ஜீவா அவர்களைப் போலவே மனித நேயமும், பேரன்பும், கலை உணர்வும் படைத்தவர். அவரிடத்தில் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. அவருடைய "புதிய தரிசனங்கள்" படித்து எனக்குள் பூரித்துப் போனேன். கட்சி வட்டாரத்தின் இறுகிய பார்வை "புதிய தரிசனங்களில்" இல்லை என்பது மட்டுமல்ல, கட்சி வட்டாரத்தைக் கூர்மையாக திறனாய்வுக்கு உள்ளாக்குகின்ற கண்ணோட்டமும் இந்த நாவலில் சிறப்பாக அமைந்திருந்தது. நாவலை ஒருகலை என சிறப்பித்துச் சொல்வதற்குரிய கூறுகள் பலவற்றைப் "புதிய தரிசனங்களில்" நான் கண்டேன். இதன் காரணமாகத் தோழர் பொன்னீலன் அவர்களோடு எனது உறவை வளர்த்துக் கொண்டேன். கட்சி வட்டாரத்துக்கு இந்த நாவல் கசப்பைத் தந்தது என்பதையும் அறிந்தேன்.

எனது கட்டுரைத் தொகுப்புக்கு அணிந்துரை வழங்க வேண்டுமெனத் தோழர் பொன்னீலன் அவர்களைக் கேட்டுக் கொண்டேன். சிறப்பான அணிந்துரையை அவர் வழங்கியிருக்கிறார். நெருடல்கள் என அவர் குறிப்பிடுவது அவர் பெருந்தன்மையைக் காட்டுகிறது. வேறு கடுமையான சொல்லைப் பயன்படுத்தி இருந்தால்கூட நான் வரவேற்று இருப்பேன். அன்பு காரணமாக சரியான ஒரு சொல்லை அவர் தவிர்த்திருக்க வேண்டியதில்லை. அவரைப் போலவே மேலும் சிலர்/பலர் என்னைத் திறனாய்வுக்கு உட்படுத்துவதை மதிக்கிறேன்.

இந்தக் கட்டுரை நூல் வெளிவருவதற்கு என்னோடு ஒத்துழைத்தவர்கள் பலரை இப்பொழுது நினைத்துக் கொள்கிறேன். ஒவ்வொரு கட்டுரையையும் நண்பர் அறிவன் அவர்களோடு,

விவாதிப்பதன் மூலமே எனது கருத்துக்களைத் தொடர்ந்து செழுமைப் படுத்திக் கொள்கிறேன். நண்பர்கள் கோவை வாணன், கவிஞர் பொன்முடி சுப்பையயன், புலவர் ஆ. துரைசாமி, தாமரை ஆறுமுகம், குமரவேல், மருதுபாண்டியன், ஜெயராமன் முதலியவர்களையும் நன்றியோடு நான் நினைவு கூர்கிறேன். குறிப்பாக கணினி அச்சுப் படியைத் திருத்தம் செய்வதில் கவிஞர் பொன்முடி அவர்கள் எனக்குப் பேருதவியாய் இருந்தார். தற்பொழுது நான் படிப்பதற்கும் எழுதுவதற்கும் பேருதவியாக இருப்பவர் திரு. செங்கல்வி அவர்கள். கணினி அச்சாக்கத்தை சிறப்புற செய்தவர் திரு கோபி மற்றும் செல்வி மேரி அவர்கள்.

நண்பர் பாவண்ணன் மூலம் எனது கட்டுரைகள் பற்றி அறிந்து உடனடியாக என்னோடு தொடர்பு கொண்டு எனது கட்டுரைகளை நூல் வடிவில் கொண்டு வர மனமுவந்து ஒப்புக் கொண்ட, எனது அன்பிற்கும் மரியாதைக்கும் உரிய நண்பர் "காவ்யா" திரு. சு. சண்முகசுந்தரத்திற்கு மனம் நிறைந்த நன்றிகள். கட்டுரை ஆக்கத்திற்கு மட்டுமின்றி என் வாழ்வினுள் வரலாறு, இலக்கியம், மார்க்சியம் முதலிய பார்வைகளைப் பெற எனக்குள் தூண்டுதலாகவும் துணையாகவும் வழிகாட்டிகளாகவும் இருந்தவர்கள்/இருப்பவர்கள் என இப்பொழுது பலரை/பற்பலரை நினைத்துக் கொள்கிறேன். எண்ணத் தொடங்கினால் நூறு என்ற எண்ணிக்கைக்குள் அல்லது ஆயிரம் என்ற எண்ணிக்கைக்குள் அடக்குவது சாத்தியமில்லை. இவர்கள் அனைவரும் என் வணக்கத்துக்குரியவர்கள். நன்றி சொல்லி என் கடனைத் தீர்த்துக் கொள்ள இயலாது. இதன் காரணமாகத்தான் என் கட்டுரைகளுக்கு சான்று ஆதாரங்களாக இருக்கின்ற பார்வை நூல்கள், மற்றும் அந்த நூல் ஆசிரியர்களின் பெயர்கள். இந்த நூலின் இறுதியில் குறிப்பிடவில்லை.

கோவை
24.11.97

இவண்
ஞானி

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| | பதிப்புரை | 3 |
| | அணிந்துரை : தோழர் பொன்னீலன் | 5 |
| | என்னுரை : ஞானி | 13 |
| 1. | தமிழில் நவீனத்துவம், பின்-நவீனத்துவம் | 21 |
| 2. | மார்க்சியமும் இலக்கியமும் | 65 |
| 3. | தமிழ் மரபின் தடங்கள் | 97 |
| 4. | மார்க்சியம் - ஒரு மறுபார்வை | 131 |
| 5. | "இந்திய மெய்யியலில் இருப்பனவும் இறந்தனவும்" - நூல் திறனாய்வு | 162 |
| | பின் இணைப்பு :- | |
| | ஞானியோடு நேர்காணல் - சுபமங்களா | 177 |

# I. தமிழில் நவீனத்துவம், பின்-நவீனத்துவம்

## 1

**யதார்த்தவாதத்தை நவீனத்துவத்தின் ஊடுருவலோடு நெகிழச் செய்து, பின்-நவீனத்துவத்தைக் குறைந்த அளவிலேனும் ஏற்றுக்கொண்டு நாம் முன்னுக்குச் செல்லமுடியும் என்று தோன்றுகிறது.**

1. இரண்டு உலகப்போர்ச் சூழலில் மேற்குலகில் பின்நவீனத்துவம் வெளிப்பட்டது. இரண்டு உலகப்போர்களும் இந்தியாவிற்கு வெளியில் நடந்தன என்றாலும் இந்தியாவை ஓரளவிற்குப் பாதித்தன. மேற்கத்திய பின்நவீனத்துவம் கருத்தியல் தளத்தில் மட்டுமே செயல்படுவதாக இந்தியாவுக்குள் அறிமுகமாகி இருக்கிறது. மேற்கத்திய உலகத்துக்கும் இந்தியச் சூழலுக்கும் இடையில் வேற்றுமை பெரிது, ஒற்றுமை குறைவு என்ற புரிதலோடு இந்தப் பிரச்சனையைப் பார்க்க வேண்டியிருக்கிறது. இந்தியாவின் பொருளியல் சூழலை மேற்குலகம் தொடர்ந்து பாதிக்கிறது, சூழலில் கடுமையான துண்டிப்புகளைச் செய்கிறது, இறுதியில் இது மனிதர்களை, குறிப்பாக நகரவாசிகளைத் தாக்குகிறது. பழைய தத்துவங்கள் புறக்கணிக்கப்பட்ட சூழல். மார்க்சியமும் மனிதனைக் காப்பாற்ற முடியவில்லை என்ற நிலைமை. வாழ்வுக்கு அர்த்தம் இல்லை என்றும், அப்படியில்லை என்றாலும் வாழ்விற்கு அர்த்தத்தைப் படைத்துக்கொள்ளவேண்டும் என்றும் சொல்லும் இருத்தலியமும் இங்கு மறுக்கப்படுகிறது. வாழ்க்கை முழுமைகளில் இல்லை, பின்னங்களில் தென்பட்ட வாழ்வு பிறகு அப்படியும் இல்லை என்றாகிவிட்ட நிலைமை. இத்தகைய சூழல் சூன்யத்திற்கு-இன்மைக்கு மனிதனைத் தள்ளுகிறது. வாழ்வில் நிம்மதியைத் தேடிப் பயனில்லை. வாழ்வுக்கு மையமும் இல்லை, முடிவுமில்லை-வரலாறு நொறுங்கிவிட்டது, மூலம் என்பது இல்லை. இருப்பனவெல்லாம் நகல்கள் – நகல்களின் நகல்கள். கணினித்திரையில் வரையப்படும் வடிவங்களைப் போல வாழ்க்கை ஆகியிருக்கிறது. திரை என்பது கூட இல்லை, நிரந்தரம் என எதுவுமில்லை. மனிதன் பிரபஞ்சத்தின் மையமில்லை. பிரபஞ்சத்தின் இயக்க விதிகளோடு மனிதன் அலைப்புறுகிறான். இத்தகைய சூழலில்தான் பின்நவீனத்துவம் இங்கு பேசப்படுகிறது. நவீனத்துவம் மறுக்கப்பட்டுத் தோன்றுகிறது பின் நவீனத்துவம். அல்லது நவீனத்துவத்திற்குள் தொடர் இயக்கம் பின் நவீனத்துவம் என்ற இருவேறு கருத்துக்கள் எழுகின்றன.

2. நவீனத்துவம் யதார்த்தவாதத்தை முற்றாக மறுக்கவில்லை. யதார்த்தவாதம் தனக்குள்ளேயே சில சிக்கல்களைச் சந்தித்தது. இந்தச் சிக்கல்களிலிருந்து வெளியேறும் பொழுது நவீனத்துவம்

வந்து சேர்கிறது. யதார்த்த வாதம் கற்பனைகளை அனுமதிப்பதில்லை. யதார்த்தவாதம் ஓர் அதிகாரத்தில் மையம் கொண்டதாக இருக்கிறது. யதார்த்தவாதத்தின் பார்வையில் புற உலகின் அழுத்தம் மிக அதிகம். புற உலகம்தான் அகத்தைத் தீர்மானிக்கிறது என்பது யதார்த்தவாதம். இது முதலாளியத்தின் குழந்தை. அக உலகம், புற உலகத்தை ஊடுருவிச் செல்வதையும் தன் பார்வையில் புற உலகத்தை மறுபடைப்புச் செய்வதையும் யதார்த்தம் விளக்குவதில்லை. வாழ்க்கையோ கலவரம் செய்கிறதே ஒழிய வாழ்க்கைக்குள் நாடகத்தை அல்லது விளையாட்டை அல்லது கேளிக்கையை அல்லது கொண்டாட்டத்தை அனுமதிப்பதில்லை யதார்த்தவாதத்திற்குப் பெரியகட்டுமானங்கள் வேண்டும். அரசு முதல் குடும்பம் வரை வேண்டும். அதிகாரத்தில் யதார்த்தம் கட்டமைக்கப் படுவதால் ஆண்/பெண் உறவில் கூட சமத்துவம் சாத்தியமில்லை. இதற்கு வண்ணங்கள் தெரிவதில்லை. இசைக்கு இது வசப்படுவதில்லை. மார்க்சியம் கேள்விக்குறி ஆகிவிட்ட சூழலில் யதார்த்த வாதம் கேள்விக்குறியாகிறது. இந்த இடத்தில் நவீனத்துவம் நுழைகிறது. இங்கும் மனிதன் மையமாகின்றான். மனித வாழ்விற்கு ஒற்றைப் பரிமாணத்தில் பொருள்கூற முடியாது. வாழ்க்கை நேர்கோட்டில் இல்லை. குறுக்கும் நெடுக்குமாய்ப் பின்னப்படுவது வாழ்க்கை. பின்னலில் ஏதோ ஓர் இடத்தில் மனிதன் இருக்கிறான். ஒரே சமயத்தில் இவன் எல்லா இடங்களிலுமில்லை. இவன் பின்னங்களில் இருக்கிறான். குறிகளில் இருக்கிறான். படிமங்கள் குறியீடுகள் என்பதாய் வாழ்க்கை அவனுக்குப் புலப்படுகிறது. வரலாற்றின் இறுக்கங்கள் அவனுக்குத் தளர்கின்றன. இறந்தகால வரலாறும் இவன் பொருள்படுத்தும் முறையில் நெருக்கமாக வந்துவிடுகிறது. தர்க்கங்களை இவன் நம்பவில்லை. தர்க்கங்களிலிருந்து, தத்துவங்களிலிருந்து இவன் தன்னை விடுவித்துக் கொள்கிறான். பகுத்தறிவின் வன்முறையை இவன் புரிந்து கொள்கிறான். அறிவின் ஆதிக்கத்தை இவன் நம்பவில்லை. இத்தகைய போக்கு நவீனத்துவம். நவீனத்துவத்தின் அடுத்த பாய்ச்சல் பின்-நவீனத்துவம்.

3. பின்-நவீனத்துவம் இந்திய சிந்தனைக்குள் அல்லது இந்திய மரபிற்குள் எவ்வாறு எதிர்கொள்வது அல்லது எதிர்கொள்ளப்படுகிறது என்பது இங்கு எழுந்துள்ள ஒரு முக்கியமான கேள்வி. யதார்த்தவாதம் இங்கு காலாவதியாகிவிட்டதா, சமூகச்சூழலில் எல்லாவிதமான அதிகாரங்களையும் முற்றாக மறுத்துவிடக்கூடிய தீவிரமான செயல்பாடுகள் இங்கு இருக்கின்றனவா என்ற கேள்வியும் இங்கு சேர்ந்தே எழுகிறது. இத்துடன் மேலும் ஒரு குழப்பம். யதார்த்தவாதம் என்பதுகூட நவீனத்துவத்தின் ஒரு பகுதி என்று கருத்துரைக்கப்படுகிறது இந்தச் சிக்கல்கள் தீர்வதற்கு வழி தெரிவதில்லை. ஒவ்வொருவரும் அவரவர்க்கான நிலைப்பாட்டை எடுத்துக்கொள்ள வேண்டியதுதானா

என்று கேட்கவேண்டியிருக்கிறது. இத்தகைய கேள்விகளை எழுப்புபவர்களின் அரசியல் நிலைப்பாடு மற்றும் வர்க்கம் அல்லது சாதிபற்றிய கேள்வியும் சேர்ந்தே எழுகிறது. இந்தக் கேள்விகளை எழுப்புபவர் இடதுசாரியா? வலதுசாரியா? நிறுவனத்திற்குள் இருந்து சிந்தனை என்ற முறையில் இவற்றைப் பார்ப்பவரா? அல்லது சமூகமாற்றம் என்ற செயல்பாட்டில் ஏதாவது கண்ணியில் வைத்துத் தன்னைக் காண்பவரா? என்ற கேள்விக்கும் இடமேற்படுகிறது. இத்தகைய முரண்பட்ட சூழல் காத்திரமான சர்ச்சைகளைக் கிளப்புகிறது. இத்தகைய சர்ச்சைகள் கலை இலக்கியம், திறனாய்வு ஆகிய களங்களில் மேலோங்கி ஒலிக்கின்றன. தத்துவம் என்ற களத்தினுள்ளும் அது கேட்கிறது. அறிவியல் மற்றும் பொருளியல் களத்தினுள் இந்தக் கேள்விகள் இப்பொழுது இங்கு எழவில்லை-எழவேண்டும். பிரபஞ்சம் பற்றிய புரிதலில் அவரவர் நிலைப்பாடுகள் என்ன என்றெல்லாம் கேட்கமுடியும். தொழில், வேளாண்மை, மருத்துவம் என்ற களங்களிலும் இந்தக் கேள்விகள் ஊடுருவிச் செல்லும். பெண்ணியம், தலித்தியம் என்ற களங்களில் இந்தக்கேள்விகளும், சர்ச்சைகளும் கூடுதலாக இடம்பெறுகின்றன. சர்ச்சைகளின் போதே சர்ச்சிப்பவர்களுக்கு இடையில் கோப, தாபங்கள், விருப்பு, வெறுப்புக்கள் உச்ச அளவில் கொட்டப்படுவதன் மூலம் சர்ச்சைகள் கீழே போய் விடுகின்றன. படிப்பறிவும் வாழ்வியல் அனுபவங்களும் கை கோர்த்துச் செல்வதில்லை. எந்தச் சர்ச்சையும் இரு எதிர் முனைகளைக் கொண்டவை. ஒருமுனை சர்ச்சிப்பவனுக்குள்ளும் ஊடுருவிச் செல்லும். சுயபரிசோதனை அற்ற நிலையில் எதிரில் உள்ளவரை இன்னொருமுனை குத்திக் காயப்படுத்திக் கொண்டிருக்கும்.

4. தமிழ்ச் சூழலில் நவீனத்துவத்தைக் கொண்டு வந்தவர்கள் பார்ப்பனர்கள் என்ற கருத்து இங்கு திரும்பத்திரும்பச் சொல்லப்படுகிறது. புதுக்கவிதையைத் தமிழில் படைத்தவர்கள் பார்ப்பனர்கள் என்ற கருத்து பெரும்பாலும் ஒப்புக்கொள்ளப்படுகிற கருத்து. புதுமைப் பித்தனுக்குள்ளும் நவீனத்துவம் செயல்பட்டது என்பதை மறுப்பதற்கில்லை. தமிழை நவீனப்படுத்தியதில் பாரதியின் பங்கு அதிகம். நவீனப்படுத்தலையும், நவீனத்துவம் என்பதையும் நாம் வேறுபடுத்திப் பார்க்கவேண்டும். நவீனப்படுத்தல் என்ற போக்கு கடந்த ஒரு நூற்றாண்டுக்கு மேல் செயல்படுகிற ஒரு போக்கு. நவீனப்படுத்தலின் உள்ளும் முற்போக்கு பிற்போக்கு என்ற பாகுபாட்டைச் செய்வது கூடத் தேவைதான் என்று தோன்றுகிறது. நவீனப்படுத்தல் என்பது ஆங்கில மொழிக்கல்வி மற்றும் இயந்திரச் சாதனங்களோடு கூடிய தொழில் வளர்ச்சி என்று தொடங்குவதாக வைத்துக்கொண்டால் இந்தத் தொடர்ச்சியின் ஒரு கட்டத்தில்

இவை தீவிரம்பெற்று மேற்கத்திய உலகுக்கு நம்மை அடிமைப்படுத்துவதாக மாறுகிறது. முதல்கட்டம் வளர்ச்சி என்றால், அடுத்த கட்டம் நமக்கு அழிவு என்று தான் மதிப்பிடவேண்டும்.

முதல்கட்ட வளர்ச்சியும் இறுதிக்கட்ட அழிவும் சமூகவாழ்வின் எல்லாக் களங்களினுள்ளும் ஒரே சீராக, ஒரு படித்தாக, இல்லை என்பதையும் நாம் இங்கு கவனிக்கவேண்டும். நகரம் சார்ந்த தொழில் வளர்ச்சி முதல் கட்டத்தில் கிராமங்களை வளர்ப்பதாகக் கொண்டால் இன்னொரு கட்டத்தில் அது அழிப்பதாக மாறுகிறது. புதுக்கவிதை முதலிய நவீனப்போக்குகள் நகரத்தில்தான் துவங்குகின்றன. கிராமம் சார்ந்த மரபுச்சூழலை இது மறுதலிக்கிறது அல்லது அழிக்கிறது. யதார்த்தவாதமும், நவீனத்துவமும் இப்படி முரண்படுகின்றன. யதார்த்தவாதத்தின் தேவை இங்கு முற்றாக அழிந்துவிடவில்லை. யதார்த்தவாதத்தின் இறுக்கத்தைத் தளர்த்தும் முறையில் நவீனத்துவம் செயல்பட முடியும். யதார்த்தவாதத்திற்கும் முற்பட்ட மரபும் சூழலும் இங்கு இன்னும் தொடரத்தான் செய்கின்றன. இதற்கு எத்தனையோ காரணங்கள். அரசியல் ஒரு முக்கியமான காரணம். இவற்றிற்கிடை-யிலான-எதிர்நிலைகளுக்கிடையிலான மோதல் தீர்க்கப்படுவதற்கு முன்னர், பின்நவீனத்துவம் இங்கே நுழைந்திருக்கிறது. இந்தப் பின்நவீனத்துவம் எதிரிக்கெதிரி நண்பன் என்று சொல்வதுபோலத் தொடர்ந்து அல்லது முரண்பட்டுவரும் மரபின் ஒன்றிரண்டு கூறுகளோடு தன்னை இணைத்துக் கொள்ளவும் செய்கிறது. இதை ஒரு தந்திரமான நடவடிக்கை என்று நாம் பார்க்க வேண்டியதில்லை. பின்நவீனத்துவத்தின் ஒருகுரல் பார்ப்பனியச்சார்பு என்று கணிக்கப்-படுகிறது. வாழ்க்கையில் அசல் என்று ஒன்றில்லை, எல்லாமே நகல்கள் மற்றும் நகல்களின் நகல்கள், என்பதற்குத் தரும் அழுத்தம் பார்ப்பனியமாகச் சொல்வதற்குரியது. இது பார்ப்பனியம் தானா என்ற கேள்விக்கும் இடமுண்டு. பின்நவீனத்துவத்தின் இன்னொரு குரல் தலித்தியத்தோடு இணைகிறது. இந்தியச் சமூகம், சாதிச்சமூகம். சாதிகள் சார்ந்து இங்கு மனிதனை, நிறுவனங்களை, அதிகாரத்தை மதிப்பிட வேண்டும். சாதிகளைத் தகர்ப்பதன் மூலமே இங்கு விடுதலை சாத்தியம். இந்தத்தகர்ப்பை முழு அளவில் செய்வதாகிய பின்-நவீனத்துவத்தைத் தலித்தியம் தனக்குரிய பார்வையாக வரித்துக்கொள்கிறது. இத்தகைய தகர்ப்பைச் செய்வதற்கு மார்க்சியம் பயன்படாது என்ற ஐயத்தையும் எழுப்புகிறது. தலித் சமூகம் தனித்திருந்து முழு அளவிலான தகர்ப்பைச் செய்வது சாத்தியமா என்ற கேள்வியும் எழுகிறது. ஒரு தத்துவம் அல்லது பார்வை இரண்டு எதிர்நிலைகளுக்கு எப்படி உரியதாகும் என்ற கேள்விக்கும் இடமுண்டு. இந்த இடத்தில்தான் பின்நவீனத்துவத்தின் வலதுசாரிப் போக்கு என்றும், இடதுசாரிப் போக்கு என்றும் பிரித்துப் பேச நேர்ந்திருக்கிறது.

இந்த இடத்தில் அவரவர் வர்க்கச்சார்பு, அல்லது சாதிச்சார்பு என்ற தளம் பற்றியும் சிந்திக்க வேண்டியிருக்கிறது. முரண்பட்ட சிக்கலான சமூகச்சூழல் பற்றியும் சிந்திக்க வேண்டியிருக்கிறது. இதன் தொடர்ச்சியாக உலகஅளவில் இன்றைய முதலாளியியம் என்ன செய்து கொண்டிருக்கிறது என்றும் கேட்டுக்கொள்ள வேண்டும். இந்தச் சிக்கலுக்குள் நுழைகிற போது பின்நவீனத்துவம் என்பதை முற்றாகத் தழுவிக்கொள்வது எந்த அளவில் சரியான நிலைப்பாடு என்ற கேள்வியும் எழுகிறது. எல்லாவற்றுக்கும் ஆதாரமான ஒரு கேள்வி. சமூகமாற்றம் என்ற பிரச்சனையில் நீங்கள் தெரிவு செய்துகொள்ளும் பாதை எது என்பதுதான் முதன்மையான கேள்வி.

6. யதார்த்தவாதத்தை நவீனத்துவத்தின் ஊடுருவலோடு நெகிழச்செய்து பின்நவீனத்துவ வெளிச்சத்தைக் குறைந்த அளவிலேனும் ஏற்றுக்கொண்டு நாம் முன்னுக்குச் செல்லமுடியும் என்று தோன்றுகிறது. குறி மற்றும் பிரதி என்ற சொல்லாடலின் வெளிச்சத்தில் எல்லாமே அருவமாக ஆவியாக மாறிவிடும் விபத்தை நாம் தவிர்க்கமுடியும். வாழ்வின் இறுதி என்ன என்ற கேள்விக்கு, சூன்யம்தான் என்ற விடை ஒரு வகையில் பொருளியல் மற்றும் அதிகாரத்தில் தன்னை நிலைநிறுத்திக் கொள்பவனைத் தகர்த்து நெகிழ வைக்கும். அருவம் என்பதே முற்றான உண்மையல்ல. சிந்தனை தனக்குள் தீவிரம் கொள்ளும் பொழுதும் இன்மையாய், அருவமாய்ப் போவதற்கான சாத்தியங்களைப் புரிந்து கொள்ள முடியும். இதன் காரணமாகவே இந்தப்போக்கை மனிதனுக்கு முற்றான எதிர்நிலை என்று காண வேண்டியதில்லை. இன்மைக்குள் சென்ற மனிதன் திரும்பி வருவான் - மேலும் கூடுதலான வெளிச்சத்தோடு. அருவச் சிந்தனையைப் பார்ப்பனீயம் என்று முத்திரை குத்துவதும் பொருத்தமில்லை. எத்தகைய அருவமும் உருவத்தோடு மிகத் தொலைவிலேனும் பொருந்தியிருக்கிறது. தத்துவம் என்பதன் இயக்கத்தில் இதுவும் ஒரு போக்கு. இந்தப்போக்கின் அழுத்தத்தில் எல்லாமே மாயை அல்லது நகல் என்று ஒரு மனிதன் பேசுவதைப் புரிந்து கொள்ளலாம். மார்க்சின் சமாதியில் ஏங்கல்ஸ் கூறிய ஒரு கருத்தை இங்கு நினைவு கொள்ளலாம். "மனிதன் சிந்திப்பதற்கு முன் உண்ணவேண்டும்". எத்தனையளவு அருவச் சிந்தனையில் ஒருவன் ஈடுபட்டாலும் உணவின்றி, உடம்பின்றி, நிலமின்றி, உலகமும் வரலாறும் இன்றிச் சிந்திக்கவும் முடியாது. முற்றான அருவம் என்று பொய்சொல்லி அந்த அடிப்படையில் அரசியல் செய்பவன் மனித சமூகத்திற்குக் கேடு செய்பவன். பின்-நவீனத்துவம் இந்த எல்லையைத் தொடுகிறது. இதன் நோக்கம் மனிதச் சிந்தனையை விரிவுபடுத்துவதென்றால் நம்மால் புரிந்து கொள்ள முடியும். மேற்கத்தியானின் அறிவியல் அவனை இந்த எல்லைவரை கொண்டு சென்றிருக்கிறது.

# 2

**"தொன்மையான வரலாற்று நிகழ்ச்சி என்பது இன்றும்கூட நம் கண்முன் நடப்பது சாத்தியம் என்பது மட்டுமல்ல, நாமேகூட அந்தத் தொன்மத்தின் பகுதியாக இருக்கக் கூடும் என்ற உணர்வும் நமக்கு இருக்கவேண்டும்."**

1. எந்த ஒரு புதிய கோட்பாட்டையும் நாம் தழுவிக்கொள்கிற பொழுது நம் சூழலுக்கும் ஆக்கத்திற்கும் அது துணை செய்கிறதா, கூடுதலாக இருக்கிறதா என்பதைக் கொண்டு தழுவிக்கொள்ள வேண்டும். நவீனத்துவம் நம் சூழலுக்குத் தேவை என்பதை நாம் புரிந்து கொண்டிருக்கிறோம். நமது ஆக்கத்திற்கும் அது துணை செய்திருக்கிறது. இத்தகைய நவீனத்துவம் நம் மரபிற்கும் ஒத்ததாயிருக்கிறது. ஆனால் பின்நவீனத்துவம் நம்மோடு ஒட்டவில்லை. நமது கலை இலக்கியம் முதலியவற்றினுள் இது நுழைந்திருக்கிறது என்ற போதிலும், இதன் இன்றியமையாமை பற்றியும் ஆக்கம் பற்றியும் நமக்குள் நிறைய இடைஞ்சல்களும் கேள்விகளும் எழுந்திருக்கின்றன. பின் நவீனத்துவம் இல்லாமல் தலித்தியத்தை, தலித்தியப் படைப்புக்களை நம்மால் புரிந்து கொள்ள, ஏற்றுக்கொள்ள இயலாதா? என்றும், பின் நவீனத்துவமுறையில் எழுதப்படுகிற ஒரு படைப்பு நமது புரிதலுக்கு என்ன புதுமையைத் தருகிறது என்றும் சிந்திக்க வேண்டியவர்களாக உள்ளோம்.

2. யதார்த்தவாதத்தோடு நவீனத்துவம் இணைந்துகொள்கிறது. குறிப்பாகப் பெண்ணியம் பற்றிய படைப்புகளில் இது தெளிவுபடுகிறது. வேதநாயகர் காலம்முதல் இன்றுவரை எழுதப்படுகிற நாவல்களில் யதார்த்தவாதப்போக்கு சிறிய அளவிலோ பெரியஅளவிலோ செயல்பட்டிருக்கிறது. புராணம் அல்லது காவியத்தின் தொடர்ச்சியிலிருந்து நம்மால் முற்றிலும் விடுபட இயலவில்லை. கல்கியின் வரலாற்று நாவல்கள் ரொமான்ஸ்கள் என்று பெயரிடப்பட்ட போதிலும் இவற்றினுள் புராணம் அல்லது காவியத்தின் நீட்சியை நாம் காண்கிறோம். அகிலன், நா. பார்த்தசாரதி ஆகியோரின் படைப்பினுள்ளும் இந்தப் போக்கு நீண்டிருக்கிறது.

யதார்த்தவாதம் என்பதன் கூறுகள் தொடர்ந்து அதிகரித்து வந்ததற்கும் முதலாளியக் கூறுகளின் வளர்ச்சிக்கும் நெருக்கமான உறவுண்டு. பெண்கல்வி, விதவைத் திருமணம், மறுமணம் போன்ற கருக்கள் நாவலினுள்ளும் நுழைந்தன. ஆண்/பெண் உறவுச்சிக்கல்

நாவலில் பெரிதும் பேசப்படுகிறது. படைப்புக்களில் ஆணின் மேலாண்மை தொடர்ந்து இடம் பெறுகின்றது. பெண்ணுக்குத் தரப்படுவது இரண்டாமிடம் மட்டுமே. காதலிக்கும் பொழுது சமத்துவம் ஒப்புக்கொள்ளப்படுவதைப் போலத் தோன்றினாலும் திருமணத்திற்குப் பிறகு பெண்ணுக்குத் தரப்படுவதும், பெண் ஏற்றுக்கொள்வதும் இரண்டாம் இடத்தைத்தான். பெண் வீட்டைவிட்டு வெளியேறினாலும் மீண்டும் இன்னொரு திருமணத்தில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறாள். நிறுவனங்களில் பெண்கள் பணிபுரிந்த போதிலும், நிறுவனங்களிலும் குடும்ப வாழ்க்கையிலும் பெண் சற்றுக் கூடுதலான சுதந்திரத்தோடு இரண்டாம் இடத்தில்தான் அமர்ந்து கொள்கிறாள். முதிர்கன்னியாக வாழ நேரும்பொழுதும் இந்தநிலை மாறிவிடுவதில்லை. நகரப்பெருக்கமோ, தொழில் வளர்ச்சியோ, பெண்ணுக்குச் சில உரிமைகளைத் தந்த பொழுதிலும் விடுதலை தரவில்லை. முற்போக்குவாதிகள் எழுதும் படைப்புக்கள் உட்பட பெரும்பாலானோர் எழுதும் படைப்புக்களில் பெண்விடுதலை, அதற்கான நியாயத்தோடு சித்திரிக்கப்படுவதில்லை. யதார்த்தவாதப் படைப்புக்கள் முதலாளியத்தின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டனவாக இல்லை.

பெண் ஓர் தனி உயிரி என்பது மட்டுமல்ல; பெண்ணுக்கெனத் தனி ஆளுமை, தனி உலகம் உண்டு என்ற முறையில் ஆண்களினால் உருவாக்கப்பட்ட உலகிலிருந்து, வரலாற்றிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, தனது தனித்துவத்தைப் பிரகடனம் செய்வது பெண் விடுதலையின் முதற்குரல். இங்கிருந்து தொடங்கி ஆண்களால் உருவாக்கப்பட்ட உலகை மாற்றியமைப்பதற்கான சிந்தனைகளையும், செயல்முறைகளையும், தனக்குள் வளர்த்துக் கொள்வது பெண் விடுதலை அல்லது பெண்ணியம். பெண், ஆண்களோடு சமத்துவம் கோருவது முதலாளியத்திய வளர்ச்சியோடு கூடிய யதார்த்தவாதப். படைப்புக்களில் இடம்பெறுகிறது. இது பெண் உரிமைக்குரல், பெண்விடுதலையின் தொலைதூரக் குரலாகவும் சில சமயங்களில் ஒலிக்கக்கூடும். இந்த இடத்தில் நவீனத்துவம் தொடங்குகிறது என்று கூறலாம். ஒரு வேளை முதலாளிய வளர்ச்சியின் ஓர் இன்றிமையாத பகுதியாக நவீனத்துவத்தைப் பார்க்கிறவர்கள் பெண் விடுதலைக் குரலைப் பின்-நவீனத்துவம் என்று கூறுவதை நாம் புரிந்துகொள்ள முடியும். நிச்சயமாக இந்த இடத்தில் உடைசல் அல்லது தகர்ப்பு நேர்கிறது.

3. தலித்தியம் என்று சொல்லப்படும் புதிய போக்கையும் மேற்கூறியவாறு யதார்த்தவாதத்தின் பகுதியாக, தொடர்ச்சியாக, நீட்சியாகக் காணமுடியும். காந்திய நாவல்களில் மட்டுமல்லாமல்;

பிறருடைய நாவல்களிலும் தலித் மக்களின் ஆக்கங்கள் பேசப்படுகின்றன. கடைசியாக வெளிவந்த பொன்னீலனின் "புதிய தரிசனங்கள்" என்ற நாவலில் தலித் மக்களின் போர் ஆரவாரத்தோடு கூடிய குரலை நாம் கேட்கிறோம் இமையத்தின் நாவலையும் இம்முறையில் பொருள்படுத்தலாம் மரபின் எல்லையை விரிவுபடுத்தக்கோரும் குரல் என்று இந்தக்குரலை மதிப்பிடலாம் மரபின் எல்லையை உள்ளிருந்தே தகர்க்க வேண்டியதன் அவசியத்தை இந்தக்குரல் மூலம் வாசகர் புரிந்து கொள்ள முடியும். தொழிலாளிகள்/உழைப்பாளிகள் என்றமுறையில் இந்த உலகம் எங்களுக்கும் விரிந்து கொடுக்க வேண்டும். இல்லையென்றால் நாங்களாக விரித்துக்கொள்வோம் என்பது இந்தக்குரல். இதை யதார்த்தவாதத்தின் இறுதி எல்லை என்று நாம் இனம் காண வேண்டும்.

அடுத்துவருவது தகர்ப்புக்குரல். முதலாளிகளும் உயர்சாதி யினரும் உருவாக்கி வைத்திருக்கும் உலகம் எங்களுக்கானதல்ல. இந்த உலகம் எங்களின் சில உரிமைகளை ஒப்புக்கொள்ளுமே தவிர எங்கள் விடுதலையை ஏற்றுக்கொள்ளாது. ஆகவே உங்கள் உலகத்தை நாங்கள் தகர்த்தாக வேண்டும் என்பது தலித்தியத்தின் விடுதலைக்குரல். இந்தக்குரலைத் தனக்குள் தாங்கிக்கொள்வது என்றால் ஒரு படைப்பாளி மரபுமுறையில் தனக்குள் வந்த கருத்தியலைத் தகர்த்துக் கொள்ளத்தான் வேண்டும். தலித்தின் பார்வையில் உருவாக்கப்படுவதான புதிய உலகம் எப்படியிருக்கும் என்பதை முன்கூட்டியே சொல்லமுடியாது. சில கனவுகளும் கற்பனைகளும் மட்டுமே இங்கு சாத்தியம். பெண் தனக்கான உலகம் என்று பேசுவதற்கு நிகரானது இந்த தலித் உலகம். இந்த உடைசலுக்கும் இதற்குப் பின் உருவாகும் உலகத்தின் ஆக்கத்திற்கும் ஒத்ததாகவோ, தூண்டுதலாகவோ பின்-நவீனத்துவம் இருக்கிறதா அல்லது இதற்கேற்றவாறு பின்-நவீனத்துவத்தை வளர்த்துக்கொள்ள வேண்டுமா என்றும் இங்கு சிந்திக்க வேண்டும்.

4. மார்க்சியம் முன் வைத்ததாகிய யதார்த்தவாதம் என்ற ஒன்று மட்டுமே முழு அளவில் யதார்த்தவாதம் என்ற பிடிவாதம் இங்கு பயன்படாது. யதார்த்த உலகின் சிக்கல்கள் என இன்னும் பலவற்றை யதார்த்தவாதம் தனக்குள் விரித்துக்கொள்ள வேண்டும். தவிர என்னதான் பின்நவீனத்துவம் என வெட்டிக்கொண்டு விலகிச் செல்வதாக இருந்த போதிலும் யதார்த்தம் என்ற உலகியல் சூழலிருந்து முற்றாகத் தன்னை விலக்கிக்கொள்ள முடியாது. தமிழவன் பற்றியும், நாகார்ஜுனன் பற்றியும் நோயல் எழுதிய கட்டுரைகளை இங்கு நாம் நினைவிற்கொள்ளலாம். யதார்த்தவாதம் என்பதை அவர்கள் கடுமையாக மறுத்தபோதிலும் யதார்த்தம் என்பது அவர்களுக்குள்ளே

மறைக்கப்பட்ட நிலையிலும் இருக்கத்தான் செய்யும் என்று நோயல் காட்டினார். பின்நவீனத்துவம் என்று பேசும் அனைவருக்கும் இது பொருந்தும். (இது பற்றிப் பிறகு பேசலாம்)

5. தமிழில் சு.சமுத்திரம் எழுதிய "வாடாமல்லி" நாவலை யதார்த்தத்தின் நீட்சி எனக் கொள்ளலாம். அலிகள் நம் சமூகத்திலிருந்து விளிம்பு நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள். அருவருப்போடு பெரும்பாலானோர்களால் பார்க்கப்படுகிறவர்கள், கடத்தலோடு தொடர்புடையவர்கள் என்று காவல்துறையினரால் ஒடுக்கப்படுகிறவர்கள். கலைகளோடும், தொன்மையான கடவுள் வழிபாட்டோடும் உறவுடையவர்கள். ஒரு சமூகப்பிரிவு என்ற முறையில் தமக்குள் இணக்கம் காண்கிறவர்கள். நாவலின் இறுதியில் தம்மக்களை போலீஸ் அடக்கு முறைக்கு எதிராகத் திரட்டுவதாகச் சித்திரிக்கப்படுகிறது. முற்போக்கு நாவல் ஆசிரியர் என்ற முறையில் சமுத்திரம் சுயம்புவை முற்போக்கு இயக்கத்தோடு இணைத்துக்காண்கிறார். இது அவரைப் பொறுத்தவரை ஒரு லட்சியம் அல்லது கனவு தேவையான கனவு அலியின் மனநிலையை உடைத்துப் பார்ப்பதற்கான அனுபவங்கள் இல்லாத நிலையில் நாவல் இந்த எல்லையில் முடிவடைகிறது. மேலும் உடைத்து/தகர்த்துப் பார்க்கத்தான் வேண்டும். உடைத்தால் நமக்குள் முற்றிலும் வேறுபட்ட இன்னொரு உலகம் வெளிப்படலாம். நாங்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தான் என்று நாவலில் வெளிப்படும் சுயம்புவின் குரல்மேலும் உடைபட்டுத் தகர்ந்து புதிய வெளிச்சங்கள் நமக்குக் கிடைக்கலாம். இந்த உடைசலுக்குப் பின்- நவீனத்துவம் உதவுமா, தெரியவில்லை.

சுயம்புவின் கதைக்குள் நாம் தொடர்ந்து செல்லும் பொழுது அவன்படும் துன்பங்கள், துயரங்கள் ஆகியவற்றை நாமும் உள்வாங்கிக் கொண்ட நிலையில் நம்மையும் சுயம்புவாக உணர்கிறோம். சுயம்புவுக்குப் பாலியல் இன்பம் இல்லை என்பதையும் கடந்து, இந்தச் சமூகச்சூழலில் நமது கனவுகள், லட்சியங்கள், திறன்கள் முதலியவற்றை நிறைவேற்றிக் கொள்ள முடியாத அலிகளாக நாமும் நம்மை உணர்கிறோம். இன்றைய சமூகத்தில் நமக்குத் தரப்பட்டுள்ள இடம் என்ன என்பதை அறிவுப்பூர்வமாக உணர்ந்து கொண்ட நிலையில்தான் இத்தகைய உணர்வு நமக்கு ஏற்படுகிறது. நம்மையும் சுயம்புவாக உணர்வதன் அடிப்படையில் சுயம்பு ஒரு குறியீடு ஆகிறான். இத்தகைய புரிதலின் வழியே இந்த நாவலை நவீனத்துவத்தோடு தொடர்பு படுத்திக் காணலாம். இதற்கு மேல் நம்மை நுட்பப்படுத்திக்கொள்ள இயலாது. வடஇந்தியாவில் அலிகளைத் தெய்வ அம்சம் உடையவர்களாகக் கருதி அவர்களின் மூலம் சில சடங்குகளை நிறைவேற்றிக் கொள்கிறார்கள். இறைவன் ஆணும்

அல்ல பெண்ணும் அல்ல என்ற புரிதலில் இறைவனை அலியாகக் காண்பதில் அர்த்தம் உண்டு. இந்த மனநிலையில் மேலும் ஆழ்ந்து செல்வதற்கு இடம் இருக்கிறது. நம்மை உடைத்துக் கொள்ளாத நிலையில் இந்தப் பயணம் சாத்தியமில்லை. நாவலைப் பொறுத்தவரை எங்களையும் உங்களைப் போன்ற மனிதர்களாக மதியுங்கள் என்ற சுயம்புவின் குரலே ஓங்கி ஒலிக்கிறது. இது மனிதநேயத்தின் குரல், முற்போக்கு வாதத்தின் குரல், தொழிலாளிகளை மையப்படுத்தும் முற்போக்கு வாதத்தின் நீட்சி என்று இதைக் கொள்ளலாம். முற்போக்கு வாதத்திற்கு முற்பட்டது என்று வரலாறு சொல்பவர்களின் பார்வையில் இதை இயல்நெறி என்றும் கருதலாம். இந்த இயல்நெறி நம் காலத்தில் முற்போக்கு வாதத்தின் குரலைச் சேர்த்துக் கொண்டிருக்கிறது.

நாஞ்சில் நாடனின் "சதுரங்கக்குதிரைகள்" நாவல் பெருநகரச் சூழலில் அகப்பட்டுக் கொண்ட -திருமண வாழ்க்கைக்கு வழியில்லாத நாராயணனின் தனிமைத்துன்பத்தைச் சொல்கிறது. பெருநகரச் சூழல் நமக்குள் வந்துவிட்டது. திருமண வாழ்க்கை பெண்களுக்குத்தான் சாத்தியமில்லை என்ற சூழல் ஆண்களில் சிலருக்கும் நேர்ந்திருக்கிறது. நாராயணனின் தனிமைத் துன்பத்தை நம் கால உலகின் பெருநகரச் சூழலில் வைத்துப் புரிந்து கொள்வதற்கு இன்றைய வரலாறும் பொருளியல் நிலவரங்களும் குறித்த மார்க்சியம் சார்ந்த சமூகவியல் அறிவு நமக்குப் பயன்படுகிறது. நாராயணனுக்கு இந்தப் புரிதல் இல்லை. தன் துயரத்தை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. புரிந்து கொண்ட நிலையில் அவனால் ஏற்றுக்கொள்ள முடியும். ஏற்றுக்கொண்டால் துயரம் மாறும். மாறும்பொழுது திருமணம் செய்து கொண்டு நீங்கள் என்ன சாதித்தீர்கள் என்ற எதிர்க் கேள்வியில் தொடங்கி மெல்லமெல்லத் தன்னைக் கிளறிக் கொள்வான், உடைத்துக் கொள்வான். நாவலில் திருமணத்திற்கு வாய்ப்பில்லாத பலபெண்கள் உலவுகிறார்கள். அவர்களும் தம்மை உடைத்துப் பார்த்துக் கொள்ளவில்லை. நாவல் ஆசிரியர் இந்த இடத்திற்கு நகரவில்லை. குடும்பத்தில் மையம் கொண்டவர்களாகத்தான் நாம் இருக்கிறோம். நாராயணன் நெஞ்சில் இருள்தான் சூழ்ந்து கொள்கிறது. இருளைக் கிழித்துக் கொண்டு வெளிச்சம் வெளிப்படவில்லை. பின் நவீனத்துவம் இந்த இடத்தில் ஒரு தகர்ப்பைச் செய்யலாம் போலத் தெரிகிறது. எப்படி என்பது புரியவில்லை.

எம்.வி. வெங்கட்ராம் அவர்கள் "காதுகள்" நாவல்பற்றி இங்கு சொல்வதற்குத் தேவையிருக்கிறது. மாலி (மகாலிங்கம்) வாழ்வின் உச்ச நிலையிலிருந்து கீழே விழுகிறான். பசியும், வறுமையும் அவன் குடும்பத்தைத் தின்னுகின்றன. காமமும் அவனைத் தின்னுகின்றது.

பக்தி தன்னைக் காப்பாற்றும் என அலைகிறான். உடலும், உள்ளமும் பின்னப்பட்ட-கூறுபோடப்பட்ட நிலை அவனுடையது. தனக்குள் அவன் சிதைகிறான். அவனது நான் எங்கே ஒளிந்திருக்கிறது என்று அவனுக்குத் தெரியவில்லை. உடைபட்ட நிலையில் அவனுக்குள் சில குரல்கள்-ஒன்றுக்கு ஒன்று எதிரான குரல்கள் ஒலிக்கின்றன. நாடகம் போல இது தொடங்கிப் பிறகு மாறி அது உள் அமுழ்ந்திக்கொள்கிறது. பசிக்கொடுமையால் குழந்தை இறக்கிறது. இறந்த குழந்தைக்கு ஒரு மரியாதையான சவ அடக்கத்திற்கு வழி இல்லை. இறந்த தன் குழந்தையைச் சைக்கிளின் பின்புறத்தில் கட்டி வைத்துச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்கிறான் மாலி. இவ்வகைக் காட்சிகளின் போது வாசகனின் மனநிலையும் தூண்டப்படுகிறது. ஆண் தெய்வமும், பெண் தெய்வமும் அசிங்கமான முறையில் காம உணர்வை வாரி இறைக்கின்றன. ஒருவரை ஒருவர் பாய்ந்து குதறிக்கொள்கிறார்கள். தெய்வங்களும் தீயநோக்கோடு செயல்படுகின்றன. அவை தெய்வங்களா, தீய ஆவிகளா என்றெல்லாம் மாலிக்குச் சந்தேகம் ஏற்படுகிறது. இறுதியில் முருகனைப் பற்றிக்கொண்டு மாலி கரையேறுகிறான் போலத் தெரிகிறது. முருகன் எப்படிக் கைகொடுக்க முடியும் என்ற சந்தேகத்தோடு நாவலை முடிக்கிறோம்.

மனிதனை இவ்வளவு ஆழமாக கீறிப்பார்க்கிற நாவல் தமிழில் வேறு இல்லையென்று சொல்லலாம். தெய்வங்கள் இங்கு தகர்ந்து போகின்றன. காமம் கட்டுப்படுத்த முடியாத வெள்ளம். மனிதனின் துயரம் ஆழமானது. கடக்க முடியாதது. ஏதாவது சமரசம் செய்துகொண்டால் வாழ்க்கையை ஓட்டிவிட முடியும். சமரசம் என்பது ஒரு பிரமையன்றி வேறில்லை. தெய்வங்களும், பிசாசுகளும், நமக்குள் நாமாக ஏற்படுத்திக் கொண்ட பிம்பங்கள். இவற்றைக் கிழிப்பதன் மூலமும் மனிதன் தன்னைப் பற்றி உணர்வு கொள்ளமுடியும். ஒருவேளை மேலும் தன்னைக் கீறிக்கொண்டிருந்தால் மாலி பைத்தியக்காரனாகியிருப்பான். அங்கிருந்து நாவலாசிரியர் பேசுவதற்குச் சாத்தியமில்லை எனினும் பேசத்தான் வேண்டும். உளவியல் ஆய்வின்வழியே நவீனத்துவத்தின் எல்லையைத் தொடுகின்ற நாவல் என இதைச் சொல்லலாம் பின்நவீனத்துவம் இதைக்கடந்து செல்வதற்கு வழிகாட்டுமா? தெரியவில்லை.

இந்த இடத்தில் ல.ச.ரா.வின் "அபிதா" நாவலைக் குறிப்பிடலாம். தான் இளமையில் காதலித்த பெண்ணைத் தேடி வந்தவன் காதலி இறந்துவிட்டதை அறிகிறான். காதலியின் மகள் தன் தாய்வடிவத்தில் இருப்பதைக் கண்டு அவளிடமும் மனம் செல்கிறது. இவளும் ஒரு விபத்தில் இறக்கிறாள். அபிதா என்ற பெயருடைய பெண் தெய்வத்தைச் சரணடைகிறான். பெண் தெய்வத்தின் முன்னிலையில் எல்லாவற்றையும்

ஒரு தரிசனமாகக் காண்கிறான். காதல் மற்றும் அத்தனை உணர்வுகளையும் தன் மனம் செய்து கொண்ட புனைவுகள் என உணர்ந்து தரைக்கு வருகிறான். அதாவது யதார்த்தத்திற்குத் திரும்புகிறான். மாலியும் இப்படி மனத்தினுள் செய்யும் பயணத்தில் மீண்டும் தரைக்கு வந்துவிடும் வாய்ப்பிருக்கிறது. இங்கு யதார்த்தவாதம் வெற்றிபெறுவதை நாம் புரிந்துகொள்ள முடியும். யதார்த்தம் என்ற தளம் தன் உள் முரண்பாடுகளின் கூர்மையான மோதலில் மனிதனை எங்கெங்கோ அடித்துத் துரத்துகிறது. துரத்தப்பட்ட நிலையில் அவன் அலைகிறான். சிலவற்றைப் பற்றிக்கொள்கிறான். பிறகு அவற்றைக் கைவிட்டுத் தன் சுயத்திற்குத் திரும்புகிறான். இடையில் ஏற்பட்ட பலவகை நுட்பமான உணர்வுகளோடு, புரிதல்களோடு யதார்த்தத்திற்குத் திரும்புகிறான். இப்பொழுது யதார்த்தத்தை விரிவோடு, எதிர் முரண்பாடுகளோடு பார்க்கத் தயாராகிறான். முன்பு பார்த்தது அதே யதார்த்தமாக இது இல்லை. இதுவும் அவன் செய்துகொண்ட புனைவாகவும் இருக்கலாம் வாழ்வதற்காகச் செய்துகொண்ட புனைவில் எங்காவது ஒட்டிக்கொண்டு மனிதன் வாழ்ந்தாக வேண்டும்.

இங்கு சுந்தரராமசாமியின் ஜே.ஜே. நாவலுக்குத் திரும்பலாம். ஜே.ஜே. ஒரு கலைஞன். முழு அளவில் ஒரு கலைஞன். மார்க்சியவாதிகள் கட்டமைத்திருக்கிற போலி உலகத்தை இந்தக் கலைஞன் தகர்க்கிறான். தகர்த்துவிட்டுக் கலை உணர்வுகள் தக்கமைக்கிற ஓர் உலகத்திற்குள் வாழவிரும்புகிறான். அந்த உலகமும் பரிபூர்ணமாக இருக்க முடியாதென்று தெரிந்துகொண்டே அதற்குள் தன் தேடலை நிகழ்த்துகிறான். தனது உலகை அவன் தகர்த்துக்கொள்ளவில்லை. ஆனால் இந்தக் கனவுலகம் அவனைத் தகர்த்து விடுகிறது. சிக்கலான கதைப்பின்னல் என்றபோதிலும் கதைத்தொடர்ச்சியை வாசகன் தனக்குள் வரிசைப்படுத்திக் கொள்ள இயலும் நேர்கோட்டுப் பாணியில் சொல்லப்படாத கதை வாசகனுக்குள் கிளர்ச்சியை, மனதில் தீவிரத்தை ஏற்படுத்துகிறது என்பது உண்மையில் இந்த உத்தி வாசகனின் மந்தமான மனநிலையைத் தகர்க்கிறது. இதன்மூலம் "ஜே.ஜே" வை எட்டித்தொடுவது இவனுக்குச் சாத்தியப்படுகிறது. நவீனத்துவம் என்று அறியப்படுகிற இந்தக் கதை சொல்லும் பாணி தேவைதான் என்பதைப் புரிந்து கொள்கிறோம். இதன்மூலம் கிடைப்பது கலை உணர்வில் கட்டமைக்கப்படும் ஓர் உலகமே அன்றி அந்த உலகத்தையும் தகர்த்துக் கொள்வதற்கான உத்தியாக இது அமையவில்லை. தகர்த்துக் கொண்டால் யதார்த்தம் என்ற உலகம் நம் காலடிகளுக்குக் கீழே என்பதைப் புரிந்து கொள்ள இயலும். இது என்னவகை யதார்த்தம் என்று பிறகு கேட்டுக் கொள்ளலாம்.

6. தமிழில் பின்-நவீனத்துவ நாவல்கள் என்று சிலரால் சொல்லப்படும் தமிழவனின் இரண்டு நாவல்கள் குறித்து இப்பொழுது பார்க்கலாம். கதை சொல்லும் உத்திகள் சிக்கலானவை. நிறையக் கற்பனை வளம் இருந்தால் மட்டுமே கதையோடு நாம் செல்லமுடியும். பழமொழிகள் புராணக்கதைகள் பழைய மரபுகள் பற்றியெல்லாம் நமக்குத் தெரிந்திருக்கவேண்டும். கூடவே தமிழ்சார்ந்த பிரதேசத்தின் வரலாறும், மரபுகளும் தெரிந்திருக்க வேண்டும் மேற்கத்திய உலகிலிருந்து இன்று தமிழவனும், மற்றவர்களும் கொண்டு சேர்த்திருக்கிற நவீனத்துவம், பின்-நவீனத்துவம் பற்றியும் ஓரளவுக்கேனும் புரிதல் இருக்க வேண்டும். கதையை ஒருமுறை வாசித்தால் போதாது. மிகுந்த கவனத்தோடு இரண்டு அல்லது மூன்று முறை வாசிக்கத்தான் வேண்டும். கதை என்றவுடனே சுகமாக இருக்க வேண்டும், எளிமையாகப் புரியவேண்டும் என்றெல்லாம் எதிர்பார்த்தால் கதைக்குள் நுழைய முடியாது. நம் சமூகத்தின் சிக்கலான பல பிரச்சனைகளை ஆழ்ந்த முறையில் புரிந்து கொள்வதற்கும் கதைகளைப் படிக்க வேண்டும் என்ற உணர்வும் நமக்கு இருக்க வேண்டும். காமம் பற்றி எங்காவது விரசமாகச் சொல்லப்பட்டிருந்தால் நமக்குள் இல்லாத எந்த விரசத்தை இவர் சொல்லிவிட்டார் என்ற உணர்வும் நமக்கு இருக்க வேண்டும். இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் என்று சொல்லப்படுவதைப் பற்றிய பகுத்தறிவுப் பார்வையில் நாம் இறுகி இருந்தால் கதை படிக்கும் தகுதி நமக்கு இல்லையென்றும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். தொன்மையான வரலாற்று நிகழ்ச்சி என்பது இன்றும் கூட நம் கண்முன் நடப்பது சாத்தியம் என்பது மட்டுமல்ல நாமே கூட அந்தத் தொன்மத்தின் பகுதியாக இருக்கக்கூடும் என்ற உணர்வும் நமக்கு இருக்க வேண்டும். வரலாற்றில் எந்த இடத்திற்கும் நாம் நகர்ந்து செல்ல முடியும். ஒரு சொல்லுக்கு ஒரே பொருள்தான் என்பதை யெல்லாம் விட்டுவிட வேண்டும். இவை தவிர உலகம் ஒரு பெரிய நாடகம், அந்த நாடகத்தில் நாம் பாத்திரங்கள் என்ற புரிதலை நமக்குள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டுச் சுமைகளற்ற ஒரு மனிதனாய்ச் சுதந்திரவானாய் இயங்குவதில் உள்ள சுகம் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும். கனவு காண்கிற பொழுது கனவுக்குள் நாம் இருக்கிறோம். கனவின் நிகழ்ச்சிகள் அவ்வளவும் உண்மை என்ற உணர்வு நமக்கு இருக்கிறது. தவிர வரலாற்றில் எவ்வளவோ நிகழ்ந்திருக்கின்றன. பேரரசுகள் அழிந்திருக்கின்றன. நதிகள் தம் ஓட்டத்திலிருந்து மாறியிருக்கின்றன. இன்று கடல் இருக்கும் இடத்தில் முன்பு நிலம் இருந்திருக்கிறது. மலைகள் இருந்திருக்கின்றன. எத்தனையோ, விலங்குகளும், பறவைகளும் திரிந்திருக்கின்றன. எரிமலைகளும், கடல்கொந்தளிப்புகளும் இயல்பாய் நிகழ்ந்த பிறகே மண்ணுலகம் நமக்குச் சாத்தியப்பட்டிருக்கிறது. பேய்களையும்,

பிசாசுகளையும் இளமைக் காலத்தில் நாம் நம்பினோம். அதற்குத்தகுந்த உணர்வுகளை அப்பொழுது அனுபவித்தோம். உலகத்தில் மனிதன் தோன்றி இன்று வரை வளர்ந்த காலம் உலகின் தோற்றத்தோடு பிரபஞ்சத்தின் தோற்றத்தோடு ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது ஒரு புள்ளி அளவுக்கும் தேறாது. இந்த உலகம் இன்னும் எத்தனையோ கோடி ஆண்டுகளுக்கும் இருக்கும் - மனிதர்கள் இல்லாவிட்டாலும். அப்படி ஓர் இன்மையும் மனித குலத்திற்குச் சாத்தியம்தான்.

இப்படியெல்லாம் நமக்கு உணர்வுகள் விரிவு பெற்றிருந்தால் தமிழவனின் நாவல்கள் நமக்கு வசப்படும். அல்லது சிலமுறை படிக்கும் பொழுது அத்தகைய உணர்வுகளை நாம் நமக்குள் கிளறிக்கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் கிளறிக் கொள்வதற்குத் தமிழவனின் நாவல்கள் நமக்கு வாய்ப்புத் தருகின்றன. யதார்த்த வகையிலான நாவல்களில் இத்தகைய வினோதமான உணர்வுகளை நாம்பெற முடியாது என்பது உண்மைதான். தமிழ்நாட்டில் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தின் கதையை "ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்கள்" என்ற நாவலில் தமிழவன் சொல்கிறார்.

திராவிட இயக்கம் எதற்கெடுத்தாலும் பழமை பேசுகிறது. பழமையிலிருந்தே நிகழ் காலத்திற்கான அறிவைப் பெறுகிறது. பழமை, இறந்தபிணம். இறந்த பிணத்தை எடுத்தெறியாமல் அதை வழிபடுவதால் நம்காலத்திற்கான வாழ்தலறிவை அந்தப் பிணத்திலிருந்து பெறமுடியாது. தமிழவன் நாவலில் ஒரு பகுதி இந்தக்கதையைச் சொல்லுகிறது. இதைப்போல இன்னும் பல பகுதிகள். தமிழவன் திராவிட இயக்கம் பற்றி எதிர்மறையான பார்வை கொண்டவர் என்பது நமக்குத் தெரியும். தமிழனின் தொன்மை, மேன்மை என்று பேசுவது அவருக்கு உடன்பாடில்லை. தமிழ்தான் உலகின் முதன்மொழி என்றால் ஒப்புக்கொள்ள மாட்டார். தமிழில் இருந்து பலமொழிகள் தோன்றிய பொழுதும் தமிழ் கன்னியாக இளமையோடு இருக்கிறது என்றால் கேலி செய்வார். தமிழ் உணர்வு என்று தீவிரமாகப் பேசி அந்த அளவுக்குத் தமிழ் உணர்வு இல்லாதவர்களைக் கண்டிப்பதையும் தண்டிப்பதையும் அவர் ஏற்க மாட்டார். தமிழன்தான் வீரத்தில் தன்னிகரில்லாதவன் என்று பேசினால் அவருக்கு எரிச்சலாக இருக்கும். தமிழர்களின் காதல் சங்ககாலம் முதற்கொண்டு இன்றுவரை போற்றப்படுகிறது என்பது அவரைப் பொறுத்தவரை ஒரு கேலிச்சித்திரம். இப்படியெல்லாம் கருத்துக்கள் கொண்டவர் தமிழவன்.

வரலாற்றின் அண்மைக்காலத்தில் தமிழகத்தின் ஆட்சிப்பீடத்தில் எம்.ஜி. ஆரும், பிறகு ஜெயலலிதாவும் அமர்ந்து இருந்தார்கள்.

ஜெயலலிதா அடித்த கொட்டங்கள் வேடிக்கையானவை. விசித்திரமானவை. பாவாணர் முதலியவர்கள் ஆய்வும் நமக்குத் தெரியும். இவர்களின் போக்கில் பாசிசத்தின் தீண்டல் இருந்தது என்பதும் தமிழவன் கருத்து. இவற்றையெல்லாம் திரும்பப் பார்க்கிற பொழுது நமக்கு எல்லாமே ஒரு கேலிச்சித்திரமாகத் தெரிகிறது. இந்தக் கதையைச் "சரித்திரத்தில் படித்த நிழல்கள்" என்ற நாவலில் தமிழவன் எழுதுகிறார். விசித்திரமான நிகழ்ச்சிகள், மனிதர்கள் என்று கதை தொடர்ந்து செல்லுகிறது. நிறுத்தி நிதானமாகப் படிக்கிறபொழுது யார், யார் என்ன நிகழ்ச்சிகள் என்பவை நமக்குப் புரிகின்றன. எல்லாவற்றையும் கேலிசெய்யும் மனிதனும் கதைக்குள் வருகிறான். வரலாற்றுக் காலங்கள் பலவாறாக மடிக்கப்படுகின்றன. இந்த நாவல் பாலிம்செஸ்டு நாவல் என்று பின்னுரையில் சண்முகம் எழுதுகிறார். பழங்காலத்தில் கிரேக்கர்கள் தம் கால வரலாற்றைப் பதப்படுத்தப்பட்ட தோலில் எழுதி வைத்தார்கள். அடுத்தடுத்து வந்த காலத்தில் முன்னைய எழுத்துக்களை அழித்துவிட்டு அதற்குமேல் எழுதினார்கள். இன்று படிக்கும்பொழுது ஒரு பதிவுக்கடியில் முன்னைய பதிவுகளும் அங்கங்கே தெரியும். அதைப்போல இன்று தமிழனைத் தோண்டினால் பலகால வரலாற்றுப் பதிவுகள் ஒன்றோடு ஒன்று குழம்பி நமக்கு நெருக்கமாகத் தெரியும். இன்றைய தமிழனுக்குள் இனக்குழு சமூகமும், அதற்கடுத்து வந்த மன்னராட்சிக் காலத் தடயங்களும் பக்தி இயக்கமும் இடைக்காலத்து அலங்கோலங்களும் அந்நியர்களின் படையெடுப்புகளின் விளைவாக நேர்ந்திருக்கிற அடிமைத்தனமும் எல்லாவற்றையும் மறைக்கிற வீரதீரப் பெருமைகளும் இப்படி எல்லாமே இன்றைய தமிழனுக்குள் நாம் காணமுடியும். இம்மாதிரி ஒரு நாவலைத் தமிழவன் எழுதியிருக்கிறார்.

படிப்பதற்கும், புரிந்துகொள்வதற்கும் சிக்கலாக இருக்கிறது என்பதால் இந்த நாவலை இலக்கியம் அல்ல என்று சிலர் சொல்வதை நாம் ஏற்பதற்கில்லை. இப்படி இலக்கியத்திற்கு இலக்கணம் வகுக்கமுடியாது. இப்படி இலக்கணம் வகுத்தால் மக்களை நாம் மலினப்படுத்தி விடுவோம். தமிழவனின் பார்வை நமக்கு உடன்பாடில்லை என்றாலும் கூட நாவலை வாசிப்பதற்கு முடியும். கேலி செய்வது தேவை என்றாலும் அதைக் கீழிறக்கிவிடக் கூடாது. சில இடங்கள் இப்படித் தெரிகின்றன. கதையில் இறுதியாக வரும் பார்பரின் பார்வையில் நாம் நாவலைக் கூடுதலாக ரசிக்கமுடியும். பலகாலங்களும் குழம்பியதாய் எல்லாமே ஒரு புள்ளியில் வெளிப்படுவதாய் ஒரு யதார்த்தவாத நாவலை ஒருவர் படைக்க முடியாது. நாவலில் விடாப்பிடியாகப் பலவகைக் குரல்கள் கேட்கின்றன. அதே சமயத்தில் எதிர்க்குரலும் கேட்கிறது. மரபு முறையில் எழுதப்பட்ட ஒரு தரமான நாவலின் எல்லாக் கூறுகளையும் இந்த நாவல்

புறம்தள்ளிவிடுகிறது. நாவலின் அனைத்து அம்சங்களையும் நான் இங்கு தொகுக்கவில்லை. ஒரு புராணக்கதை படிப்பதைப் போலவும் இந்த நாவல் இயங்குகிறது. யதார்த்தவாத நாவலின் அம்சங்கள் இந்த நாவலில் இல்லை. பொருள் படுத்தும்பொழுது நாவலைத் தரைக்கிறக்கி நான் பொருள்படுத்திக் கொள்கிறேன். தரைக்கு இறக்குவது என்பது நாவலைக் கீழ்ப்படுத்துவது அன்று, நவீனத்துவம் என நாம் இனங்காணத்தக்க அம்சங்களும் அநேகமாக இல்லை. பன்முகத் தன்மையோடு நாவல் இயங்குகிறது. பன்முகத்தன்மை இருக்கிறது என்ற போதிலும் குறிகள், பன்முகப் பொருள்படுவனவாக இருக்க வேண்டும் என்றால் இந்த அம்சம் நாவலில் நிறைவாக இல்லை. இந்த நாவலைப் பின்-நவீனத்துவ நாவல் என்று சொல்வது பொருத்தம் என்றால் இதன்மூலம் பின்-நவீனத்தை ஓரளவுக்கேனும் புரிந்துகொள்ள முடியும். பின் -நவீனத்துவத்தின் எல்லா அம்சங்களையும் இந்த நாவல் கொண்டிருக்கவில்லை என்ற முறையில் இதைப் பின்-நவீனத்துவ நாவல் என்று சொல்வது கேள்விக்குரியது.

# 3

**"தமிழ் இலக்கியத்தில் நவீனத்துவத்தின் நுழைவு நம்மை மனிதர்களாக்கியுள்ளது. அதாவது நாம் தரைக்கு வந்திருக்கிறோம்."**

1. தமிழ் இலக்கியச் சூழலில் யதார்த்தவாதம் தொடர்ந்து வளர்ந்து வந்ததைப் பார்க்கிறோம். புராணம் மற்றும் காவிய மரபிலிருந்து தன்னைத் தொடர்ந்து விலக்கிக் கொண்டு வந்திருக்கிறது யதார்த்தவாதம். அதேசமயம் யதார்த்தவாதத்தின் நுழைவு காரணமாகக் காவியம் மற்றும் புராண மரபு, அவற்றின் சமயவகைச் சார்பிலிருந்து விடுபட்டு, வரலாறு பற்றிய சில புதிய புரிதல்கள் நமக்கு ஏற்பட்டிருக்கின்றன. இவைதவிர புராணம் அல்லது காவியமரபு நம்காலச் சூழலுக்குள் அறிவார்ந்த முறையில் புத்தாக்கம் பெறுவதையும் பார்க்கிறோம். நவீனத்துவமும் பின்நவீனத்துவமும் இந்த மரபைப் புது வெளிச்சத்தில் நமக்குக் காண்பிக்கின்றன. தமிழ் நாடக அரங்கில் இந்தப் புதிய வெளிச்சம் நமக்குக் கூடுதலாகக் கிடைக்கிறது. இலக்கியம் பற்றி நமக்கு ஏற்பட்டுள்ள புதிய புரிதல்கள் மூலம் காவியம் அல்லது புராணத்தின் இலக்கியக் கூறுகளும் நமக்குக் கூடுதலாகவே கிடைக்கின்றன. நாட்டார் கதைகளைச் சில பத்தாண்டுகளில் அவற்றிற்குரிய ஆழ்ந்த தனித்தன்மைகளுடன் நாம் கற்றிருக்கிறோம். தமிழில் நவீனத்துவத்தின் நுழைவு காரணமாக இத்தகைய புரிதல் நமக்கு வசப்பட்டிருக்கிறது. மானிடவியல் பற்றிய கல்வி, அதன் பழமைச்சார்பில் இருந்து விடுதலை பெற்றிருக்கிறது. புலமைச் சார்புடைய இலக்கியத்தின் பரப்பு, செறிவு முதலியவற்றைக் காட்டிலும் நாட்டார் கலைகளில் பரப்பும் ஆழமும் மிகுதி என்பதை நாம் புரிந்து கொண்டுள்ளோம். நிலத்தோடும் நீரோடும் உழைப்போடும் தொடர்புடைய படிப்பறிவில்லாத மக்கள் மத்தியில் இந்தக்கலைகள் செழித்திருப்பதைக் காண்கிறோம். சாமான்ய மக்கள் என்று கருதப்படுகிறவர்களும் கூர்த்த மதியோடு கூடிய படைப்பாளிகள் தான் என்றும் நாம் புரிந்து கொண்டிருக்கிறோம். புலமை சார்ந்த இலக்கியம் உயர்ந்தது உன்னதமானது என்ற மாயை இப்பொழுது நமக்கில்லை. நவீனத்துவத்தின் நுழைவு இவ்வாறு நம்மை மனிதர்களாக்கி உள்ளது என்பதற்காக நாம் மகிழ்ச்சியடைகின்றோம். அதாவது நாம் தரைக்கு வந்திருக்கிறோம். மக்களுக்கு நெருக்கமாக வந்திருக்கிறோம், மண்ணும், நீரும், உழைப்பும் அவற்றோடு கூடிய நெருக்கமும் நாம் மனிதர்களாக வாழ்வதற்கான இன்றியமையாத உறவுகள் என்று தெரிந்திருக்கிறோம். படைப்புத்திறன் பண்பாடு மற்றும் கலைத்திறன் முதலியன அனைத்தும் இந்தச் சூழலிலிருந்து தான் நமக்குக் கிடைக்கின்றன என்பதையும் தெரிந்துக் கொண்டிருகிறோம்

தமிழகச் சூழலில் யதார்த்தத்தை நாம் கண்டறிந்ததன் தொடர்ச்சியில் தான் இத்தகைய புரிதல் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. மக்களோடும், மண்ணோடும் நெருங்கியிருப்பதன் தேவையை யதார்த்தம் பற்றிய புரிதல் நமக்கு ஏற்படுத்தியிருக்கிறது யதார்த்தத்தின் முக்கியமான கூறுகளில் நாட்டார் கலைகளையும் அவர்களின் பல்வேறு திறன்களையும் நாம் வைத்துப் பார்க்கிறோம். நாட்டார் கலைகளைப் பற்றிய புரிதலுக்கு நவீனத்துவம் காரணம் என்றபோதிலும் யதார்த்தம் பற்றிய கூடுதலான புரிதலும் இதன்மூலம் நமக்கு ஏற்பட்டுள்ளது என்பதை நாம் இங்கு அழுத்தமாகப் புரிந்து கொள்ள முடியும். யதார்த்தம் அல்லது யதார்த்தவாதத்தை ஒதுக்கியதன் மூலம்தான் இந்தப் புரிதல் நமக்கு ஏற்பட்டது என்றால் அது உண்மையன்று.

2. தமிழ் இலக்கியத்தினுள் இடம் பெற்றுள்ள நவீனத்துவம் அல்லது பின் நவீனத்துவக் கூறுகள் என்று சிலர் சுட்டிக்காட்டுவதை இங்கு தொகுத்துக் காணலாம். இத்தகைய போக்கு நமக்கு அல்லது நமது மரபிற்கு அந்நியமானதா அல்லது அந்நியமானது என்றால் எந்த அளவில் அந்நியமானது என்றும் பார்த்துக் கொள்வோம்.

சென்ற நூற்றாண்டில் கதையென்றால் பிறப்பில் தொடங்கி வெற்றி, திருமணம், அல்லது சாவில் கதை முடிவடையும். இதே வழியில் இங்கு கதைகள் சொல்லப்பட்டன என்று நாம் அழுத்திச் சொல்ல முடியாது. சிலப்பதிகாரத்தில் மதுரை நகரத்தில் மாடலன் கோவலனுடைய இளமைக் காலத்து நிகழ்ச்சிகளை நினைவு கூர்கிறான் இப்படித்தமிழ் இலக்கியத்தில் எவ்வளவோ சான்றுகளை எடுத்துக் காட்டலாம். நேர்கோட்டு வரிசை மூலம்தான் கதைகள் சொல்லப்பட்டன என்பது உண்மையல்ல. தமிழ்நாவலில் நேர்கோட்டு முறை பெரும்பாலும் கடைப்பிடிக்கப்படவில்லை. ஜே.ஜே. நாவலில் நேர்கோட்டுக் கதை கூறல் முறை புறக்கணிக்கப்பட்டது என்று நவீனத்துவம் பேசும் திறனாளிகள் கூறுகிறார்கள். கதைக்குள் நாட்குறிப்பு முதலிய உத்திகள் பயன்பட்டிருப்பதையும் எடுத்துச் சொல்லுகிறார்கள். இதை உத்தி பற்றிய கூடுதலான விவரமாகவே நாம் எடுத்துக் கொள்ளமுடியும். இவற்றின் பயன்பாட்டையும் நாம் மறுப்பதற்கில்லை. இவை முற்றிலும் புதியவையாகிய உத்திகள் என்று கொண்டாடுவதில் அதிகப் பயனில்லை.

இந்த உத்திக்காகச் சு.ரா.வைப் பாராட்டும் திறனாளிகள் நகுலன் மற்றும் அசோகமித்திரன் படைப்புக்களின் மீது கூடுதலான கவனத்தைச் செலுத்தியிருக்க வேண்டும். "நினைவுப் பாதை" தொடங்கி நகுலனின் அனைத்து நாவல்களும், கதைகளும் நேர்கோட்டு முறையை முழு அளவில் புறக்கணித்திருக்கின்றன. அசோகமித்திரனின் "கரைந்த

நிழல்கள்" "ஒற்றன்" "ஆகாசத்தாமரை" போன்ற நாவல்களும் இங்கு குறிப்பிடத்தக்கவை. மையத்தை அழிப்பதாகிய உத்தி அல்லது பார்வையை "கரைந்த நிழலில்" சிறப்பாகப் பார்க்கிறோம் அசோகமித்திரனின் சில சிறுகதைத் தொகுதிகளுக்கு அவர் எழுதிய முன்னுரையில் ஒன்றைக் குறிப்பிடுகின்றார். இந்தத் தொகுப்பில் உள்ள கதைகள் எல்லாமே ஒரு நாவலின் பல கூறுகளாக இப்பொழுது தெரிகின்றன என்று குறிப்பிடுகின்றார். நேர்கோட்டு முறையோ மையத்திற்கு அழுத்தம் தரும் முறையோ இங்கு புறக்கணிக்கப்பட்டிருப்பதை நாம் காணமுடியும். சங்கரநாராயணனின் "மானுட சங்கமம்" இத்தகை போக்குக்கு மேலும் ஒரு சான்று. சா. கந்தசாமியின் சில நாவல்களும் இத்தகைய போக்கை உள்வாங்கிக் கொண்ட நாவல்கள்.

கதைக்கு அல்லது நாவலுக்கு மையம் தேவையில்லை. மையத்தை வாழ்க்கையிலோ, வரலாற்றிலோ காணமுடியாது. இலக்கியம் அல்லது தத்துவத்தில் அல்லது அரசியல் கோட்பாட்டில் அழுத்திக் கூறப்படும் மையம் என்பது அதிகாரத்தைக் கட்டமைக்கிற முயற்சி என்று பின் நவீனத்துவம் பேசுகிறது. நாவலில் இடம்பெறும் மையம் அதிகாரத்தின் வடிவம். நாற்புறமும் இழுத்துக் கட்டப்படுகிற ஒரு கூடாரம் போலக் கதை அமையக் கூடாது என்றெல்லாம் கூறப்படுவதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். அதிகாரத்தை வெளியேற்றுவதாகிய புதிய கதை கூறல் முறை நமக்கு வேண்டும் என்று இவர்கள் கூறுவதை நாம் மறுக்க முடியாது. அக்கதையில் ஒருவனைத் தலைவனாக்கும் பொழுது பிற பாத்திரங்கள் அவனுக்குக் கீழே வைக்கப்படுகிறார்கள். இவ்வகையில் ஆணுக்குத் தலைமையும் பெண்ணுக்கு அடிமைத்தனமும் இயல்பாக ஏற்பட்டு விடுகின்றன. இதைப்போலவே உயர்சாதியைச் சார்ந்தவன் தான் தலைமைக்குரியவன் என்ற கருத்தும் விமர்சனத்திற்குரியது தான். இவ்வகையான கதை அல்லது இலக்கியத்தைத் தலைகீழாக வாசிக்க வேண்டும் என்பதும் ஏற்கத்தக்கது தான். கதையின் மையம் போலவே முதலும், முடிவும் தேவையில்லை என்று இவர்கள் கூறுகிறார்கள். வாழ்வுக்கும், வரலாற்றுக்கும் முதலும் முடிவும் இல்லை என்று இவர்கள் கூறுவதையும் நாம் மறுப்பதற்கில்லை.

தமிழில் கதைகூறும் முறையில் தொடர்ந்து மாற்றங்கள் ஏற்பட்டுவருகின்றன. கதையேகூடத் தவிர்க்கப்படுதலும் இப்பொழுது நடைபெறுகிறது. பலவகைக் கதைகளில் கட்டமைக்கப்பட்ட மாயை இப்பொழுது கைவிடப்படுகிறது. இத்தகைய புதிய போக்கு நாளடைவில் மேலும் வளர்ச்சி பெறும் என்பதில் ஐயமில்லை. கதைக்குள் ஆசிரியரின் பார்வை முன்பெல்லாம் அழுத்தமாகப் பதிந்திருந்தது. இப்பொழுது ஆசிரியன் அநேகமாக வெளியேறி விட்டான். வெளியேறிய பின்பும் ஆசிரியனைக் கதைக்குள்

கண்டுபிடிப்பது கடுமையான செயலல்ல. ஆசிரியன் தன் ஆளுமையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு கதை சொல்லவேண்டும் என்ற கருத்து இங்கு ஏற்கப்படுகிறது. சில சமயம் கதையின் உள்ளேயே ஆசிரியன் ஒரு பாத்திரமாக நடமாடுகிறான். தன்னைத்தானே அவன் பிரித்துக்கொள்கிறான். இந்தவகையிலும் கதைகூறல் முறையில் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இவையெல்லாம் நவீனத்துவம் அல்லது பின்-நவீனத்துவத்தின் பயன்கள் என்று நாம் கூறமுடியும். இவற்றையெல்லாம் உத்திகள் என்று வைத்துக் கொண்டாலும் இத்தகைய யுக்திகள் மூலம் வரலாறு அல்லது வாழ்க்கை பற்றிப் புதிய வெளிச்சங்கள் நமக்குள் வந்து கொண்டிருக்கின்றன.

இவ்வாறு கூறும்பொழுது சில எச்சரிக்கைகளும் இங்கு தேவைப்படுகின்றன. மையம் என்பதை வைத்து வரலாறு, வாழ்க்கை, இலக்கியம் முதலியவற்றை நாம் கற்றுக்கொள்ளத்தான் செய்கிறோம். இந்தக் கல்வியில் நாம் அழுந்திவிடக் கூடாது. இந்தக் கல்வியின் காரணமாக அதிகாரம் நமக்குள் புகுவதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அந்த அதிகாரத்தில் இருந்து நம்மை விலக்கிக் கொள்ள வேண்டும். தவிர வாழ்வுக்கோ, வரலாற்றிற்கோ ஒற்றை மையம் என்பது உண்மையும் இல்லை. சூழலுக்கு ஏற்ப மையங்கள் மாறுகின்றன. ஒற்றை மையத்திற்குள் யாரும் இறுகிவிட முடியாது. அப்படி இறுகியவர் வாழ்க்கையை அழிப்பவர். வாழ்விலும், இலக்கியத்திலும் மையங்கள் பரவலாக அல்லது சிதறி இருக்கின்றன என்பதையெல்லாம் புறக்கணிக்க இயலாது. மனிதன் தன்னைப்பற்றி, தன்சூழல் பற்றி காரண காரியத்தோடு புரிந்து கொள்ளாமல் இருக்கமுடியாது, இதற்குப் பெயர்தான் கதை. இதேபோல் மனிதன் பிற உயிர்கள் பற்றியும், இயற்கை பற்றியும் சில அனுபவங்களைக் கொள்கிறான். இதுவும் கதைதான். காரண காரியம் என்ற தொடர்ச்சி தர்க்கத்திற்கு இடம் தருகிறது. சில சந்தர்ப்பங்களில் வன்முறைக்கு இடம் தருகிறது. தர்க்கம். கடவுள் இல்லை, கடவுள் இல்லவே இல்லை, கற்பித்தவன் அயோக்கியன் என்பதான தர்க்கம் வன்முறையை வெளிப்படுத்துகிறது. தர்க்கத்தின் வன்முறைப் பரிமாணங்கள் பலவகைப்படுகின்றன. இலக்கியப் படைப்பு மற்றும் ஆய்விலும் தர்க்கம் இப்படிச் செயல்படுகிறது. இதைப்புரிந்து கொள்ளும் அளவுக்கு நாம் விலகி நிற்கலாம். தர்க்கத்தை அறவே புறக்கணிக்கவும் முடியாது. நாம் இத்தகைய முரண் நிலையில் தான் வாழ்கிறோம்.

அண்மைக்காலத்தில் தமிழில் எழுதப்படும் சிறுகதைகளில் இந்தப் புதிய போக்குகளைக் கூடுதலாகக் காண்கிறோம் நாவலினுள்ளும் இந்தப்புதிய போக்குகள் வருகின்றன. கதை சொல்லும் பொழுதே

அதை அழித்து வருவதும் இங்கு ஏற்பட்டிருக்கும் ஒரு புதிய போக்கு. மீண்டும் சொல்லலாம். இவையெல்லாம் இலக்கியத்திற்குட்பட்டு மட்டுமல்லாமல் வாழ்வுக்கும் சில புதிய வெளிச்சங்களைத் தருகின்றன. இதனால் யதார்த்தவாதம் தகர்ந்துவிடவில்லையென்பதையும் இங்கு நாம் சேர்த்தே சொல்லவேண்டியிருக்கிறது. இந்தப் புதிய போக்குகளால் யதார்த்தவாதம் தன்னை விரிவுபடுத்திக்கொள்ளக் கூடுதலான வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இந்த வாய்ப்புகள் நவீனத்துவம், பின்நவீனத்துவத்தால் நமக்கு ஏற்பட்டிருக்கின்றன என்று கூறலாம். எல்லாவற்றையும் சுவர்களற்ற வெட்ட வெளியில் வைத்துப் பரிசீலனை செய்யக் கோருகிறோம் என்றால் இந்தப் புதிய போக்கு நம் மரபுக்கு அந்நியமானதல்ல என்பதை நாம் இங்கு ஆழ்ந்து பார்க்க வேண்டும். பின்நவீனத்துவப்போக்கை ஒரு பௌத்தன் மறுக்க மாட்டான் புரிந்து கொள்வான். அத்வைதம் பேசுபவன் புரிந்து கொள்வான். சைவனும் புரிந்து கொள்வான். இவர்களின் மரபு இந்த அளவு நமக்குள் வலுவாக இருக்கிறது. ஜே.கே-வையும், ரஜினீஷையும் நம் இளைஞர்கள் ஆர்வத்தோடு படிக்கிறார்கள். ஜென் பற்றிக் கூடுதலாக அறிய ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். சமயத்தின் இறுக்கம் இவர்களிடம் வெகுவாகத் தளர்ந்து விட்டது. வெட்டவெளியில் வைத்துப் பரிசீலனை செய்யும் ஆய்வுமுறை இன்று வளர்ந்து வருகிறது. பின்-நவீனத்துவம் என்று உரத்தகுரலில் அதிகாரத்தோரணையோடு பேசுபவர்கள் இந்தப் புதிய சூழலில் தம்மை வைத்துக் காணவேண்டும். இலக்கியம், கதை, கலை, வாழ்க்கை, வரலாறு, தத்துவம் என்பனவெல்லாம் எல்லைகள் கரைந்து நீரோட்டமாக, எண்திசை நீரோட்டமாக மாறிக் கொண்டிருக்கின்றன. பௌத்தனும், சங்கரனும் இன்றைய புதிய சூழலில் பின்-நவீனத்துவம் போக்கைப் புரிந்து கொள்ள முடியும். பொருளையும், அதிகாரத்தையும், மதிக்காதவர்கள் உயர்வகை உயிரிகளுடன் : கலந்தது, கரைந்தது பிரபஞ்சம் என்பதை ஆழ உணர்பவர்கள் பின்-நவீனத்துவத்தோடு முரண்பட முடியாது. யதார்த்தம் தான் இந்தப் பின்-நவீனத்துவ வீச்சுக்கான களம் என்பதையும் புரிந்து கொள்வார்கள். வரலாற்றை விட்டு நாம் எங்கே தப்பிச்செல்ல முடியும்? நிலத்தையும், நீரையும் நம்மால் எப்படி ஒதுக்கமுடியும்? நேயம் இல்லாமல் எப்படி வாழமுடியும்?

# 4

***"இராமாயணக் கதையை நம் அனுபவ எல்லைக்குள் கொண்டுவருகிறோம். நமக்குள் இராமன் மட்டுமா இருக்கிறான்? இராவணனும் இருக்கிறான். சீதையை மட்டுமா நாம் நேசிக்கிறோம்? சூர்ப்பனகையையும் விரும்பத்தான் செய்கிறோம்."***

1. தமிழில் யதார்த்தவாதம் நுழைந்தபொழுது தமிழ் மரபு சார்ந்தவர்கள் கேள்வி எழுப்பினார்களா என்பது தெரியவில்லை. ஆனால் யதார்த்தவாதத்தின் பாதிப்போடு கூடிய நாவல் மற்றும் சிறுகதை வடிவத்தை அன்று பலர் ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழில் காவியம் போன்ற இலக்கியத்திற்கு இது நிகராகுமா என்று அவர்கள் கேட்டனர். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான காதல் முதலிய உறவுநிலைகளை இந்தக் கதைகள் வெளிப்படையாகப் பேசுகின்றன. விதவை மறுமணம் பற்றியெல்லாம் இவை பேசுகின்றன என்ற முறையில் சில கருத்துக்களை வெளியிட்டார்கள். ஆனாலும், யதார்த்தவாதப் போக்கு தமிழில் நிலைபெற்று விட்டது.

நவீனத்துவம் நுழைந்தபொழுது அதுதன் பெயர் சொல்லிக் கொண்டு இங்கு வரவில்லை. பெயர் சொல்லியிருந்தால் கடுமையாக மறுக்கப்பட்டிருக்கும். யதார்த்தப் போக்கிலிருந்து பெரும்பகுதி அது விலகியிருந்ததை ஓரளவுக்குப் படைப்பாளிகளும் வாசகர்களும் புரிந்து கொண்டார்கள். இந்தப் புதியபோக்கு அவர்களுக்குள் பொருந்தவில்லை யென்பதை மௌனி கதைகள் புரியவில்லை என்ற குரல் தொடர்ந்து எழுவதிலிருந்து புரிந்து கொள்ள முடியும். புதுக் கவிதையில் படிமம், குறியீடு என்ற புதுவடிவங்கள் தொடக்கத்தில் பெரும்பாலும் மரபு சார்ந்த கவிஞர்களிடத்தில் கூட எதிர்நிலை உணர்வையே தோற்றுவித்தன. நம் மரபிலுள்ள உவமையோடும் உருவகத்தோடும் இவற்றைத் தொடக்கத்தில் ஒப்புமைப் படுத்திக் கண்டார்கள். பிறகுதான் இவற்றின் வீச்சுக்கள் அதிகம் என்பதையும் ஒப்புக் கொண்டார்கள். படிமம், குறியீடு ஆகியவற்றின் பன்முகப் பரிமாணங்களும் மெல்லவே ஏற்றுக்கொள்ளப்பட்டன. சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற குறிப்பு, உள்ளுறை முதலியவற்றோடு இவை ஒத்தவை என்ற முறையில் இவற்றை ஏற்றுக்கொள்வதில் அவர்களுக்கு அதிகச் சிரமம் ஏற்பட வில்லை. மிகையதார்த்தம் இவர்களை அதிகமாகக் கலவரப் படுத்தியது. ஜெயங்கொண்டார் கவிதைகளில் வரும் பேய்க்காட்சிகள் முதலியவற்றோடு இதனை

ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டார்கள். புராணக் கூறுகளோடும் ஒத்துப் பார்த்தார்கள். புராணம் என்றவுடனே பகுத்தறிவுப் போக்குடைய தமிழ் இலக்கியவாதிகளுக்குக் கசப்பாகத்தான் இருந்தது. நார்த்ராப்ஃப்ரை முதலியவர்கள் கருத்துக்கள் இவர்களுக்கு மனநிம்மதியை ஏற்படுத்தியிருக்கக் கூடும். மேற்கிலிருந்து நவீனத்துவத்தோடு சேர்ந்துவந்த ஃபிராய்டியமும், இருத்தலியமும் இவர்களைப்படுத்திய சிரமங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

மார்க்சியரைப் பொறுத்தவரை நவீனத்துவப் போக்கை ஏற்றுக்கொள்ளமுடியாமல் கடும் எதிர்ப்பை வெளிப்படுத்தினர். புதுக்கவிதைப் போக்கை ஒப்புக் கொள்ளவில்லை. மிகையதார்த்தம் இவர்களுக்கு வெறுப்பூட்டியது. ஃபிராய்டியம் இவர்களைப் பொறுத்தவரை ஆபாசம் / இருத்தலியல் மார்க்சியத்தை மறுக்கிறது. குறியீடு அல்லது படிமம் என்பது பன்முகப் பரிமாணத்தோடு அமைவதால் இந்தப் போக்கு யதார்த்தவாதத்திற்கு எதிரானது என்று கருதினர். அக்டோபர் புரட்சிக்கு முன்னர் ரஷ்யாவில் நடைபெற்ற ஆய்வுகள் இவர்களுக்கு மனக்கலவரம் தந்தன. சார்த்தர் மார்க்சியத்தையும் இருத்தலியலையும் இணைத்துக் கண்டதை இவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. மார்க்சியத்தோடு ஒத்துச் செயல்படும் இருத்தலியலைப் புரிந்துகொள்ள மார்க்சின் அந்நியமாதல் என்ற கருத்து பெரிதும் பயன்படும். ஆனால் சோவியத் ரஷ்யாவிலிருந்து இங்கு வந்த புத்தகங்களில் அந்நியமாதல் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கவில்லை. இது மார்க்சின் இளமைக்காலக் கருத்து. வளர்ச்சி பெற்ற மார்க்ஸ் இதைக் கைவிட்டார் என்று சிலர் கூறியதை இவர்கள் தமக்குச் சாதகமாகப் பார்த்தார்கள். மாயகோஸ்கி முதலியவர்களின் கவிதைகளிலும், கார்க்கியின் படைப்புகளிலும் நவீனத்துவம் செயல்படுவதை இவர்கள் சங்கடத்தோடுதான் பார்த்தார்கள். இன்று வரை இத்தகைய சங்கடங்கள் இவர்களுக்குள் தீரவில்லை. இன்றுவரை நவீனத்துவம் என்ற போக்குக்குக் கடுமையான எதிர்ப்பைக் காட்டும் இவர்களைத்தான், இன்னும் இந்தப் போக்கை ஏற்றுக்கொள்ளாத கல்வியாளர்களும், மரபுவாதிகளும் தமக்கு அரணாகக் கருதுகிறார்கள்.

கொள்கை அளவில் நவீனத்துவம் என்ற போக்கை மறுத்த போதிலும், உணர்வளவில் இவர்கள் இந்தப் போக்கை ஒப்புக்கொள்ளத் தான் செய்கிறார்கள். உதாரணமாக, இராமாயணக் கதையை நம் அனுபவ உலகின் எல்லைக்குள் கொண்டு வந்து பார்த்தால் நமக்குள் இராமனும் இருக்கிறான், இராவணனும் இருக்கிறான். சீதையை மட்டுமா நேசிக்கிறோம். சூர்ப்பனகையையும் நாம் விரும்பத்தான் செய்கிறோம். குகன், அனுமன் முதலிய தொண்டர்களைப் போலவும்

நாம் சிலசமயம் இருக்கத்தான் விரும்புகிறோம். அயோத்தி என்பது கூட ஒரு குறியீடு. இவ்வாறு ஒருவர் சொன்னால் இவர்கள் மறுக்க மாட்டார்கள். அன்வர்ஜிஸ் எழுதிய நூலை ஆதாரமாகக் காட்டலாம். கண்ணகி, மாதவி, கோவலன் என்ற படிமங்கள் மரபாக மாறியிருக்கின்றன என்பதை நாம் புரிந்துகொள்ள முடியும். வான மாமலை அவர்களின் கட்டுரை ஒன்று இதை விளக்குகிறது. புதிய தரிசனங்களில் இடம்பெறும் சில பாத்திரங்களுக்குள் நம்மைக் காண்கிறோம் என்று சொல்லும் பொழுது இவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். அப்படியானால் உணர்வளவில் நவீனத்துவம் இவர்களுக்குள் பதிந்திருக்கிறது என்றுதான் பொருள். இயந்திரம் பற்றி மார்க்ஸ் விளக்கும்பொழுது, "சமூக உறவுகளின் ஒரு தொகுப்பு" என்று சொல்வதை நவீனத்துவ உணர்வில்லாமல் புரிந்து கொள்ள இயலாது. நவீன ஓவியம், நவீன நாடகம் முதலியவற்றில் ஈடுபாடு உடையவர்கள் உடனடியாக நவீனத்துவத்தைப் புரிந்து கொள்வதும், ஏற்றுக்கொள்வதும் எளிது.

2. ஆனால் பின்-நவீனத்துவம் நமக்குக் கூடுதலான கடுமையான சிக்கலை ஏற்படுத்துகிறது. ஏனென்பதை நாம் இங்கு பார்க்க வேண்டும்.

நாம் வரலாற்றுக்குள் இருக்கிறோம், கலாச்சாரத்திற்குள் இருக்கிறோம் என்று சொன்னால் அநேகமாக இந்தக்கூற்றை நாம் ஒப்புக்கொள்ள முடியும். நெடுங்கால மற்றும் அண்மைக்கால வரலாறு நம்மை எத்தனையோ வகையில் பாதித்து இருக்கிறது. நமது சிந்தனை, பழக்க வழக்கங்கள், கல்வி, மதம், சாதி, நிறுவனங்கள், தொழில் முறைகள், மேனாட்டுத் தொடர்பு என்றவகைகளிலெல்லாம் வரலாறு நமக்குள் சென்றிருக்கிறது. வரலாற்றின் விளைவாக நாம் இருக்கிறோம். வரலாற்றினுள் செயல்படும் முரண்பாடுகளும் நமக்குள் இருக்கின்றன. கலாச்சாரத்திற்குள் நாம் இருக்கிறோம் என்பதையும் இதைப்போலப் புரிந்து கொள்ள முடியும். வரலாறும் கலாச்சாரமும் எத்தனையோ வகைகளில் தமக்குள் இணைந்தும், முரண்பட்டும் இருக்கின்றன. நிகழ்காலச் சூழலில் நாம் வாழ்வியல் முதலிய தேவைகளுக்காக முன்னைய வரலாற்றோடு எதிர்வினை புரிகிறோம். வரலாறு கலாச்சாரம் ஆகியவற்றிலிருந்து ஆக்கரீதியான பலவற்றை நமக்குள் திரட்டிக் கொள்கிறோம். வரலாறு, கலாச்சாரம் ஆகியவற்றின் எதிர்மறைப் போக்குகளோடு முரண்படுகிறோம். நிகழ் காலத் தேவைகள் இவற்றுக்கெதிராக நம்மை நிறுத்துகின்றன. நாம் போராடுகிறோம். புதியதாக நம்மையும் வரலாற்றையும் மாற்ற முனைகிறோம். வரலாறு மற்றும் கலாச்சாரத்திலிருந்து முற்றாகப்

பிரித்துப் பார்த்தல் என்பது சாத்தியமில்லை. ஒருவேளை நம் கலாச்சாரச் சூழலிலிருந்து வெகுதொலைவில் வேறுபட்ட கலாச்சார சூழல் ஒன்றில் நாம்வாழ நேர்ந்தால் இப்படிப் பிரித்துப் பார்ப்பதற்கான வாய்ப்புகள் கூடுதலாகும். நெடுங்காலத்திற்கு முந்தைய வரலாற்றிலிருந்து நாம் பெருமளவு விலகி வந்துவிட்ட சூழலிலும் இத்தகைய பார்வை சாத்தியப்படலாம். அதிலும் கடுமையான சிக்கல்கள் உள்ளன. காலத்தாலும், இடத்தாலும் எவ்வளவு தொலைவுக்கு விலகியிருந்தாலும் வரலாறு மற்றும் கலாச்சாரத்திலிருந்து நம்மால் முற்றாக விலக்கிப் பார்க்க முடியாது. கலாச்சாரத்தினுள்ளும் எத்தனையோ போக்குகளும், தளங்களும் இருக்கின்றன. சாதி, மதம், தொழில், வட்டாரம் என்றெல்லாம் தளங்கள் வேறுபடுகின்றன. ஏதாவது ஒன்று அல்லது இரண்டு தளத்திலிருந்துதான் நாம் பார்க்க முடியும். இப்படியும் பல சிக்கல்கள்.

வரலாற்றுக்குள் அல்லது கலாச்சாரத்திற்குள் நாம் இருக்கிறோம் என்பதைப் போலவே, மொழிக்குள்ளும் நாம் இருக்கிறோம் என்று சொல்வதை உடனடியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. வரலாற்றால், கலாச்சாரத்தால் நாம் கட்டமைக்கப்பட்டு இருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளுமளவிற்கு மொழியால் நம் மனம் கட்டமைக்கப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ளச் சிரமமாக இருக்கிறது. மொழி என்பதைச் சொற்களின் தொகுதி இலக்கண விதிகளின் தொகுதி என்ற புரிதல்தான் நம்மரபில் மேலோங்கி இருக்கிறது. இப்படித்தான் நமக்குக் கற்றுத் தந்திருக்கிறார்கள். மொழி என்பதனுள் நம் சிந்தனைகள், உணர்வுகள் பதிந்திருக்கின்றன. பன்னெடுங்காலமாக, நெடுங்காலச் சமுதாயத்தின் பலநூறுவகைப்பட்ட முரண்பாடுகளைக் கொண்ட சிந்தனைகளும் உணர்வுகளும் மொழியில் தங்கியிருக்கின்றன. மக்களின் நெடுங்கால வாழ்வியல் அனுபவங்கள் மொழியில்தான் சேகரமாயுள்ளன. பல்வேறு தொழில் முதலிய வளர்ச்சிகள் மொழி இல்லாத நிலையில் சாத்தியமே இல்லை. உணர்வு மட்டத்தில் இருந்து சிந்தனை நிலைக்கு, கருத்து நிலைக்கு உயரும்போது மொழியின் வழியாகத்தான் உயர்கிறோம். புதிய சொற்கள், தொடர்கள், உவமைகள், உருவகங்கள், ஆகுபெயர், அன்மொழித் தொகை என்றெல்லாம் உருவாக்கி அவற்றில்தான் கருத்துக்கள் மற்றும் உணர்வுகளைச் சேகரித்து வைக்கிறோம். தொல்பழங்காலத்தை நிலத்திற்கடியில் கிடைக்கும் கருவிகள் முதலியவற்றைக் கொண்டு நாம் அறிந்து கொள்வதைப் போல, மொழியின் சொற்கள் முதலியவை நெடுங்கால வரலாற்றையும், கலாச்சாரத்தையும் தமக்குள் தாங்கி இருப்பதை நாம் புரிந்து கொள்கிறோம். பிறநாட்டுத் தொடர்புகள் முதலியனவும், புதிய கருவிகள் மற்றும் அவற்றுக்கான சொற்கள் மூலம் நமக்கு வந்து

சேருகின்றன. மொழிக்குள் செயல்படும் கொள்கைகள், தத்துவங்கள், தர்க்கங்கள் எல்லாமே இப்படித்தான் சொற்கள் முதலியவற்றின் மூலம் சேகரமாயிருக்கின்றன. வரலாறு, கலாச்சாரம், பிரபஞ்சம் முதலிய அனைத்தையும் மொழி இவ்வாறு தனக்குள் பெயர்த்து வைத்திருக்கிறது. இந்த மொழியின் எல்லைக்குள், இயக்கத்திற்குள் நாம் இப்படித்தான் இருக்கிறோம். மொழிதான் நம்மனம் முதலியவற்றையும் கட்டமைத்திருக்கிறது என்று சொல்வதை இப்படித்தான் புரிந்து கொள்கிறோம். இன்னும் ஒருபடி மேலே சென்று இப்படிச் சொல்கிறார்கள்: வரலாற்றையும், கலாச்சாரத்தையும், நம்மனத்தையும் கட்டமைப்பது மொழிதான். அழுத்திச் சொல்லும்போது இத்தகைய கூற்று மேலுக்கு வந்துவிடுகிறது. பின்-நவீனத்துவம் என்று பேசுபவர்கள் மொழி என்பதை ஆழமாக விளக்கும் பொழுது குறி, பிரதி என்ற சொற்களைப் பயன்படுத்துகிறார்கள். இதைப்பற்றி அவர்கள்தரும் விளக்கங்களுக்குள் நான் இங்கு செல்லவில்லை. இதைப்பற்றி நம்புரிதல் என்ன என்பதில் தான் என் அக்கறை. கூடியவரை அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்வது எனது முயற்சி. அவர்கள் விளக்கத்தின்படி ஒரு மொழியின் எல்லாச் சொற்களும் இடுகுறிப் பெயர்கள். இந்நிலையில்தான் அவை குறிகள் ஆகின்றன. குறி என்ற முறையில் ஒரு சொல் குறிப்பாக எதையும் உணர்த்துவதில்லை. மரம், கரம் என்ற வேறுபடுத்தலில்தான் பொருள் உற்பத்தியாகிறது. ஒரு சொல், தன் வேறுபட்ட வடிவங்கள் மூலம் வெவ்வேறு பொருட்களைச் சுட்டும். தமிழில் நாம் இடுகுறிப்பெயரை அன்றிக் காரணப் பெயர் என்றும் ஒன்றை கூறுகிறோம். காரணப் பெயர்களை ஆராய்ந்து சென்றால் அவையும் இடுகுறியாய் முடியக்கூடும். ஒரு காரணம் கருதித்தான் முன்னையோர் பெயர் வைத்திருக்க வேண்டும் என்று சொன்னாலும் அதன் இடுகுறிச் சார்பை நாம் மறுக்க வேண்டியது இல்லை. சொற்கள், இடுகுறிகள் அல்லது குறிகள் இவை எதையும் சுட்டுவதில்லை என்று சொல்லும் பொழுது நமக்கு சிக்கல் எழுகிறது. பொருள் சார்ந்த உலகத்தோடு தான் உறவு கொண்டிருக்கிறோம். பொருட்கள் முதலியவற்றைச் சுட்டுவதற்காகத் தான் சொற்களை நாம் பயன்படுத்துகிறோம். வேறுபடுத்தலின் போதும் ஒவ்வொன்றனுக்கும் அதற்குரிய பொருளே நம் மனத்தில் முன் வந்து நிற்கிறது. சொற்களின் குறியீட்டுத்தன்மையை நாம் மறுக்காதபொழுதும், சொற்களின் வழியே நமக்குப் புலனாகும் பொருண்மையை நாம் மறுக்க இயலாது. எண்களைப் போலவே சொற்களும் அருவங்கள் என்பதில் ஐயமில்லை. அருவங்களாக மட்டுமே அவை இருந்தால் அவற்றோடு நமக்கு உறவு ஏற்பட இயலாது. பூஜ்யம் என்பது ஓர் அருவம் எனினும் இதனை உருவகப்படுத்தியிருக்கிறோம். நம் கற்பனையில், ஒன்றுமில்லாத

ஒன்று என இதைப் பொருள்படுத்தி வைத்திருக்கிறோம். மரம் என ஒன்றில்லை. இருப்பவை பனைமரம், தென்னைமரம், மாமரம் என்ற உருவங்கள். இந்த உருவங்களில் இருந்து ஒரு பொதுப்பண்பை உரித்தெடுத்து மரம் என ஓர் அருவத்தை வைத்திருக்கிறோம். இறைவன் என்பதற்கு உருவம் இல்லையென்றாலும், குறைந்த அளவுக்கு லிங்கம் என்ற அருவ உருவத்தை வைத்துக் கொண்டிருக்கிறோம். அன்புக்கு வடிவமில்லை. ஆயினும் தாயை நினைத்துக் கொள்கிறோம். அழகுக்கு வடிவமில்லை; மலர்களை நினைத்துக் கொள்கிறோம். சிலசமயம் உருவங்களிலிருந்து நம்மை நாமே விலக்கிக் கொண்டு அருவத்தைத் தேடுகிறோம். இசை, கணிதம் முதலியவற்றில் நம் முயற்சிகள் இத்தகையவை. அருவத்தில் ஆழ்ந்துவிடுவதை தியானம் என்கிறோம், சூன்யம் என்றும் வெட்டவெளி என்றும் சொல்கிறோம். அருவத்தின் தொடர்பில்லாமல் நம்மால் வாழவும் முடியாது. அதைப்போல அருவத்திற்குள் நாம் வாழவும் முடியாது. குறிகளின் தொகுதிதான் மொழி என்று சொல்லும்பொழுது அருவம் மட்டுமே மிஞ்சுகிறது. இங்குதான் நாம் தடுமாறுகிறோம் - சங்கரனின் அத்வைதம் நமக்குத் தடுமாற்றத்தை ஏற்படுத்துதலைப் போல - எண்கள்தான் பிரபஞ்சம் என்று சொல்லுதலைப் போல, நாம் தடுமாறுகிறோம்.

மொழி நம்மைக் கட்டமைக்கிறது என்ற ஆதாரத்தில் வேறுசில கோட்பாடுகள் எழுகின்றன. கவிஞன் செத்துவிட்டான்! கவிதை இருக்கிறது! என்ற வாசகம் கவிதை/இலக்கியம் பற்றி ஒரு கோட்பாட்டை வெளிப்படுத்துகிறது. நாம் ஒரு வரலாறு, கலாச்சார, சமூகச் சூழலில் முரண்பாடுகளோடு வாழ்கிறோம். இந்த முரண்பாடு நமக்குள் சில உறுத்தல்களை ஏற்படுத்துகிறது. இந்த உறுத்தலின் விளைவாக ஒரு படைப்பாளி எழுதுகிறான். எழுதத் தொடங்கும் பொழுது தான் எழுதுவதாக அவன் உணர்கிறான். எழுத்தில் தீவிரம் கொள்ளும்பொழுது அவன் மனத்தின் அடியாழத்திலிருந்து நீருற்றுப் பொங்குவதுபோல எவ்வளவோ அவன் பேனாவின் மூலம் வெளிப்படுகின்றன. தன் சூழலை, தன்னை மறந்தவனாய் அவன் எழுதுகிறான். முன்பு தன் கருத்தில் இல்லாத எவ்வளவோ புதிய சிந்தனைகள், புதிய படிமங்கள், தொன்மங்கள் முதலியவை அவனுக்குள்ளிருந்து வெளிவருகின்றன. அடிமனத்தின் தீண்டலில், உயிர்த்தெழலில் படைப்பாளி தன்னைப் புதியவனாய் உணர்கிறான். புதிய வெளிச்சங்கள் அவனுக்குள் இருந்து வெளிவருகின்றன. இந்தப் புதிய வெளிச்சங்களோடு அவன் வாழ்வான். வேறு சூழலில் இருள் சூழும்போது தனக்குள் மீண்டும் தேடலில் அவன் ஈடுபடுகிறான்.

இப்பொழுது சொல்லலாம். கவிஞன்-அவன் எழுதவில்லை

அவனைக் கொண்டு சமுதாயம் தன்னை எழுதிக்கொள்கிறது மொழி தன்னை எழுதிக் கொள்கிறது. கவிஞனின் நான் செயல்படவில்லை. அவனுக்குள் நான் இல்லை. கவிஞன் எண்ணாத எவ்வளவோ வெளிப்பட்டிருக்கின்றன. படைப்புத்தான் இங்கு முக்கியம், படைப்பாளி முக்கியமில்லை. படைத்தவனின் வாழ்வியல் அனுபவங்களையும் மீறியதாய், கடந்ததாய்ப் படைப்பு வெளிப்பட்டிருக்கிறது. சுய நினைவோடு இத்தகைய படைப்பை அவன் செய்திருக்க முடியாது. இதை நான்தான் படைத்தேனோ என்று அவன் ஐயுறுகிறான். அவனது வாழ்வியல் அனுபவங்களைக் கொண்டு இந்தப் படைப்பை அர்த்தப்படுத்த முடியாது. அவனை வைத்துக்கொள்ளாமலேயே அந்தப் படைப்போடு வாசகர் என்ற முறையில் நாம் உறவு கொள்ள முடியும். சமூக/வரலாற்று அனுபவங்கள் அவனுக்கும் நமக்கும் பொதுவானவை. நம் அனுபவங்கள், பார்வையின் வழியேதான் அந்தப்படைப்பை நாம் வாசிக்க முடியும். நமக்குள்ளும் ஒரு படைப்பாளி இருக்கிறான். அந்தப் படைப்பிலிருந்து தன் அனுபவங்கள் வழியே இவன் தனக்கான படைப்பை வாசிக்கிறான். மற்றும் எடுத்துக் கொள்கிறான். கவிஞனுடைய படைப்பு மூலப் படைப்பும் அல்ல. வரலாற்றில் ஒரு நெடும்பயணத்தின் வழியே எழுந்த படைப்பு அவனது படைப்பு. அதற்கு மூலம் கண்டறிய முடியாது. அந்த வரலாற்றின் தொடர் இயக்கத்தில் வாசகர்களாகிய நாம் இருக்கிறோம். சிலப்பதிகாரக் கதை இன்றும் தான் எத்தனையோ வடிவ வேறுபாடுகளோடு நிகழ்கிறது. தமிழ்க் கவிதையின் ஏதோ சிலபதிவுகள் நமக்குள்ளும் இருக்கின்றன. அந்தப் பதிவுகள் கவிதை உணர்வுகளை நமக்குள்ளும் கிளறுகின்றன. நாமும் கவிதை எழுதுகிறோம். அந்தக் கவிதைக்குள் நம் மரபு மீண்டும் தன்னை உயர்ப்பித்துக் கொள்கிறது. நாம் என்று தனியராக நாம் இல்லை வரலாறு மற்றும் கலாச்சாரத்தின் களத்தில்தான் நாம் இருக்கிறோம்.

அகம் என்றும் புறம் என்றும் தனித்ததாக எதுவும் இல்லை. மார்க்ஸ் கூறியபடி மனிதன் இயற்கைக்குள் நுழைந்து இயற்கையைத் தன் வயப்படுத்தி இருக்கிறான். இயற்கையும் மனிதனுக்குள் நுழைந்து அவனைத் தன் வயப்படுத்தியிருக்கிறது. மனிதனின் புலன்களுக்குள் அகப்படாதது மட்டும் இயற்கையாக இருக்கலாம். மனிதன் தனக்குரியதாகப் புறத்தை/உலகத்தை மாற்றியிருக்கிறான். வரலாறு மற்றும் உலகத்தின் ஊடுருவலால் மனிதனும் மாறியிருக்கிறான். இப்படிப் புரிந்து கொள்ளும் பொழுது அகம்புறம் எனத்தனியே இல்லை என்பதை ஒப்புக் கொள்ளலாம். இருப்பது அகப்புறம் அல்லது புறஅகம் இரண்டும் கலந்த உறவில்தான் மனிதன் இருக்கிறான். பிறவகை உயிர்களுக்கு இந்த ஆக்கம் இல்லை. அல்லது மிகக்

குறைவாக இருக்கிறது என்று சொல்லலாம். பொருளியல் வகையிலோ அரசியல் வகையிலோ புதிய/தீவிரமான போக்குகள் எழும்பொழுது மனிதன் தடுமாறுகிறான். பிறகு புதிய உலகின் ஊடுருவலில் தன்னைப் புதுப்பித்துக்கொள்கிறான். புதிய உலகிலிருந்து தன்னை விலக்கிக் கொள்வதும் சாத்தியம்தான். இங்கு அகம் தனக்கொரு அரண் கட்டிக் கொள்ளவும் வேண்டியிருக்கிறது. இத்தகைய சில கட்டங்களில் அகம், புறம் என வேறுபடுத்துவதில் நியாயமிருக்கிறது. மற்றபடி பெரும்பாலான சமயங்களில் வேறுபடுத்தல் சாத்தியமில்லை. பிரித்து அறிய முயன்றால் அறிவில்தான் பிளவு நேரும். வரலாற்றில் இத்தகைய பிளவுகள் பலமுறை நேர்ந்திருக்கின்றன. புரிந்து கொள்வதற்காகப் பிளவுபடுத்த நேர்ந்தபிறகு, பிளவுகளே மெய்யாகிவிட்ட நிலையும் நேர்ந்திருக்கிறது. பிளவுகளுக்கிடையில் இடைவெளிகள் அதிகரிக்கும் போது இடையில் நிற்கும் நாம் வேறுபாடுகளில் மனம் பதிக்கிறோம். வேறுபாடுகள் பெரியவை ஆகிவிட்டன.

இத்தகைய ஒரு சூழலில் நாம் மாட்டிக் கொண்டிருக்கிறோம். இதன் காரணமாக வரலாற்றுக்குள் நாம் இருப்பதையோ, கலாச்சாரத்தினுள் நாம் இருப்பதையோ நம்மால் புரிந்து கொள்ள இயலவில்லை. நம் கலாச்சாரத்தைப் பிற கலாச்சாரத்திலிருந்து முற்றாக வேறுபடுத்திப் பார்ப்பதுவும் இதனால்தான். நமக்குள் வரலாற்றை நாம் காண்பதில்லை. நாமும் படைப்பாளிகள் என்ற உணர்வு நமக்கில்லை. நம்மைத் தனியர்களாய்க் கருதி, பிதற்றுகிறோம். பெருமை அடித்துக் கொள்கிறோம். இவ்வாறெல்லாம் பிரித்துப் பிளவுபடுத்தி, இதன் காரணமாகப் பிளவுண்டு நிற்கும் நிலையில்தான் நவீனத்துவமோ, பின் நவீனத்துவமோ நமக்கு மிகவும் அந்நியமானதாகத் தெரிகிறது. குறி பிரதி என்பதற்கு முழு அளவில் அர்த்தம் தருகிறபோது அந்நியப்படுதல் குறையவில்லை. மாறாக அதிகரிக்கிறது. நாம் வந்த மரபு எத்தகையதாக இருந்தபோதிலும், அதனோடு முற்றாக முரண்படும்போது இவ்வாறு அந்நியப்படுதல் அதிகரிக்கவே செய்யும். தமிழில் பின் நவீனத்துவம் பேசுகிறவர்கள் இதைத்தான் செய்திருக்கிறார்கள். நமது மரபுக்குள்ளிருந்தே வேர்கள் அல்லது வித்துக்கள் தேடிப் புதியதை விளைவித்துக் கொள்வதுதான் அறிவுடைமை. மரபிலிருந்து துண்டித்துக் கொள்ளும்பொழுது விலகல் அதிகரிக்கத்தான் செய்கிறது. பின் நவீனத்துவம் புனைவு/கற்பிதம் என்று பேசுவதை மேற்கண்ட வகையில் புரிந்து கொள்ள முடியும். மண்ணால் குடம் செய்கிறோம்; உருவச்சிலை செய்கிறோம். இன்னும் பலவற்றைச் செய்கிறோம். மரத்தால் யானை உருவம் செய்கிறோம். நாற்காலி முதலியவற்றையும் செய்கிறோம். மண்ணால்

செய்த குடத்தைக் குடம் என்று சொல்கிறோம். மண்ணிலிருந்து குடம் மூலப்பொருள் என்ற அளவில் வேறுபடவில்லை. குடத்தை மீண்டும் நாம் மண் என்றும் சொல்வதில்லை. "மரத்தில் மறைந்தது மாமதயானை; மரத்தை மறைத்தது மாமதயானை" என்பது பழம்பாடல். நாயைக் கண்டால் கல்லைக் காணோம்; கல்லைக் கண்டால் நாயைக் காணோம் என்பது பழமொழி. மரயானை, கல்நாய் என்று நாம் சொல்ல வேண்டும். ஆனால் சொல்வதில்லை. புரிந்து கொள்கிறோம். இவையெல்லாம் மனிதனின் புனைவுகள். கல்லாலும், மண்ணாலும், மரத்தாலும் செய்யப்பட்ட வீடு ஒரு புனைவு. வீடு என்பதற்கான மூலப்பொருள் கல், மண், மரம் மட்டுமல்ல இவற்றைக் கட்டமைக்கிற விதிமுறைகளும் சேர்ந்துதான் வீடு. வீடு இவ்வாறு கட்டப்படுகிறது அல்லது கட்டமைக்கப்படுகிறது. இதேபோலத்தான் நகரம், நாடு, தேசம், பண்பாடு, ஒழுக்கம், அறம், மதம் முதலியனவும். இவற்றை உள்பொருள் என்றும் இல்பொருள் என்றும் ஒரே சமயத்தில் கூறலாம். மனிதன், உலகம், வாழ்க்கை, வரலாறு என்பனவும் இவ்வாறு புனைவுகள். பெண் என்பது புனைவு. குடும்பம் என்பதும் புனைவுதான். மனிதனோடு தொடர்பு கொண்ட எல்லாமே புனைவுகள் அல்லது கற்பிதங்கள். இவை ஒரு வகையில் அருவங்கள். அதேசமயம் உருவங்கள். சித்தாந்தம், தத்துவம் என்பனவெல்லாம் புனைவுகள் தாம். பின் நவீனத்தவம் பேசுபவர் புனைவு என்பதன் அருவப் பண்பிற்கு அழுத்தம் தருவது ஒருவகையில் விபத்து என்று சொல்லலாம் இங்கெல்லாம் உருவம் மறைந்து கொள்கிறது. அருவம் பிசாசுத்தன்மை பெறுகிறது. இப்பொழுதுதான் நகலின் நகல் என்ற பிரமைகள் எழுகின்றன. இவற்றைத் தொடர்ந்து செல்வது கடினம்.

இவ்வாறு எல்லாவற்றையும் புனைவுகள் என்று சொல்வது பொருத்தம் என்றாலும், அல்லது அகம்புறம் இரண்டின் ஊடுருவலாகிய உறவுகள்தான் என்றாலும், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இவைபற்றிய உணர்வோடு நாம் இருப்பதில்லை. நம் வீட்டில் உறவினர்களுக்கு விருந்து இடுகிறோம். விருந்தின் நெறிகளை இயல்பாகக் கடைப்பிடிக்கிறோம். நடந்து ஓர் இடத்திற்குச் செல்லும் பொழுது உணர்வின்றியே உரிய வழியில் செல்லுகிறோம். சிக்கல் அல்லது தேவை ஏற்படுகிறபோது இவைபற்றி உணர்வோடு சிந்திக்கிறோம். மண்குடம் என்றோ, கல்யானை என்றோ எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருப்பதில்லை. இவ்வாறு வாழ்வியல் சூழலில் பொருளைப் புனைவு என்று கருதாமல் பொருள் என்றே கருதுகிறோம். மனிதனான வரலாற்றை நாம் ஒவ்வொரு நாளும் சிந்தித்துக் கொண்டிருப்பதில்லை. நிறம் மலர்களில்லை என்று அறிவியல் தெளிவுபடுத்தினாலும் வண்ண மலர்கள் என்றுதான் பேசுகிறோம். கொசு தன் சிறகுகளைப்

படபடக்கிறது. ஆனால் கொசுவின் இசை என்கிறோம். சூரியன் உதிக்கிறான் என்கிறோம் இத்தகைய பேச்சில், பார்வையில் தவறில்லை. வாழ்வியல் நடைமுறைக்கு இது சரியானதுதான். பிரச்னை என்று வரும் பொழுது, சிந்தித்துத் தெளிவுபடுத்திக் கொள்கிறோம். பொருளுக்கு, பணத்திற்கு, அதிகாரத்திற்கு அழுத்தம் தரும் சமூகச் சூழலில் நிலைமை இன்னும் கடுமையாகி விடுகிறது. பொருளை அல்லது அதிகாரத்தைப் பற்றிக் கொள்கிறோம். பிற மனிதர்களைப் பொருளாக்கி விடுகிறோம். பெண் நமக்கு உடைமைப் பொருள். ஆடு, மாடு அனைத்து உயிர்வகைகளும் நம் பயன்பாட்டுக்குரிய பொருட்கள். மனிதன்தான் உலகின் மையம். முதலாளிக்கு உலகம் சொந்தம். இத்தகைய சூழலில் பொருள்முதல்வாதம் என்ற தத்துவம் வறட்டுத்தனமான பொருள்முதல்வாதமாகிறது. மனிதர்களை ஆடு, மாடுகளை நம் தேவைக்காக அடிமைப்படுத்தலாம்; கொல்லலாம், மார்க்சியரின் பொருள் முதல் வாதத்திற்கும் இந்த ஆபத்து நேர்ந்தது. பின்-நவீனத்துவம் நமக்குள் நுழைந்து நம்மை விடுவிக்க முயல்கிறது. மரயானை, கல்நாய் பற்றி நம் மரபின் ஊடாடலை எடுத்துக் காட்டினோம். அந்த அம்சத்தை நமக்குள் தோண்டித்துருவி நம் கண்முன் நிறுத்துகிறது பின் நவீனத்துவம். இந்தச் சிந்தனையில் தொடர்ந்து செல்வது சிரமம் என்ற போதிலும் இதற்கு நாம் தயங்கக் கூடாது. அதேசமயம் அருவத்திற்குள் பயணமாக இதை மாற்றிவிடுவது நம்மைப் பொறுத்தவரை வரலாற்றை விட்டு வெளியேறுவதாகிவிடும். இதை அருவமாக வைத்துக் கொண்டே தலித்தியம் பேசுவதும் சாத்தியம் இல்லை. இதனோடு இணைந்திருக்கிற உருவத்தை, யதார்த்தத்தை சமூகம் மற்றும் வரலாற்றுச் சூழலை இணைத்துத்தான் நாம் பேசவேண்டும். வரலாற்றுச் சூழலிலும் ஒற்றைத் தனிப்புள்ளியில் தலித் இல்லை. வரலாற்றின் விரிவான பின்னல்களுக்குகிடையில் தான் தலித் இருப்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

மேலும் ஒன்று, பின்-நவீனத்துவம் பொருட்சார்பின் இறுக்கத்திலிருந்து நம்மை, நம் உணர்வுகளை விடுவிக்கிறது என்பது உண்மைதான். புனைவுகள் என்று பேசும்பொழுது நமக்குள் கற்பனை உணர்வுகளையும் தட்டிவிடுகிறது என்பது உண்மைதான். மனிதனுக்குள் கனவுகள், கற்பனைகள் முதலியன இருக்கின்றன. கொண்டாட்டங்கள், விளையாட்டுக்கள், நாடகங்கள், கதைகள் என்பனவற்றோடு மனிதன் வாழ்கிறான். விளையாட்டின்போது குழந்தைகள் உலகத்தை, உறவுகளை இனிமையாகக் கற்றுக் கொள்கிறார்கள். உழைப்பது கூட ஒரு சுகமான இனிய அனுபவம். பொழுதுபோக்கு இல்லாமல் வாழ்க்கை இல்லை. பொருளின் இறுக்கத்தோடு, அதிகாரத்தின் இறுக்கத்தில் வாழும்போது வாழ்க்கை

சுருங்கி விடுகிறது, சுண்டி விடுகிறது. எல்லாக் காலங்களிலும் மனிதர்கள் தமக்குள் சுதந்திரம் தேடி, சுதந்திரத்தைப் படைத்துக் கொண்டுதான் வாழ்கிறார்கள். கற்பிதங்களின் வழியே நம் உணர்வுகள் எல்லையற்று விரிந்து செல்கின்றன. கதைகள் முதலியவை மனிதனின் ஆக்கக் கூறுகள்.

யதார்த்தவாதம் என்று மனிதனின் படைப்புக்கள் இறுகிவிடும் பொழுது மனிதனின் சுதந்திரமும், உற்சாகம் முதலிய பண்புகளும் படைப்புத் திறன்களும் சுண்டி விடுகின்றன. இப்பொழுது மனிதனை விடுவிக்கும் முறையில் கற்பனையைத் தட்டி விட வேண்டியிருக்கிறது. பின்-நவீனத்துவம், ஃபேன்டசி என்று நிறையப் பேசுகிறார்கள். குழந்தைகள் சொல்லும் கதைகள், அவர்கள் வரையும் ஓவியங்களில் ஃபேன்டசி என்னும் விநோதங்கள் நிறைய இடம் பெறுகின்றன. உலகிலுள்ள பறவைகள், தாவரங்கள் முதலிய லட்சக்கணக்கான வடிவங்களையும், வண்ணங்களையும் விநோத உணர்வு இல்லாமல் நம்மால் பார்க்க முடியாது, இரசிக்க முடியாது. மனிதரின் அசைவுகள், பேச்சுக்கள் முதலியன அனைத்துமே விநோதங்கள் நிறைந்தவை. குழந்தையோடு பழகும்போது பெரியவர்களும் குழந்தைகள் ஆகிறார்கள். நாய்கள் மாதிரி சிலசமயம் மனிதர்களும் குரைக்கிறார்கள். மனிதன் உணர்வற்று மரமாகி விடுகிறான். சில சந்தர்ப்பங்களில் சிறுத்துப் போய்ப் பூச்சி ஆகிறான், நரி ஆகிறான், பாம்பாகிறான், பிசாசாகத் திரிகிறான், தெய்வமாகி அருள் புரிகிறான். ஏமாற்றுகிறான். இந்த அம்சங்களையும் தொடர்ந்து சென்றால் புதுவகையான கதைகள் நமக்குக் கிடைக்கும் இப்படி நிறையக் கதைகள் காலந்தோறும் எழுதப்பட்டிருக்கின்றன. புராணக்கதைகளையெல்லாம் இப்படி வினோதங்களாக மாற்றிக் காணும் வாய்ப்பு நமக்கு நேர்ந்திருக்கிறது. எல்லாவற்றையும் வேடிக்கையாக, விளையாட்டாக எடுத்துக்கொள்ளும் வாய்ப்புகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. பின்-நவீனத்துவத்தின் ஊடுருவல் இதை நமக்குச் சாத்தியமாக்கி இருக்கிறது. பின்-நவீனத்துவம் எல்லாவற்றையும் கலைத்துப்போடுகிறது. கதைகள், கவிதைகள், நாவல்கள், கட்டுரைகள் என்ற பேதங்களை மாற்றிவிடுகிறது. உண்மை/பொய் என்ற இறுக்கமான வரையறைகளைத் தகர்த்து விடுகிறது. உயர்சாதி இலக்கியம்/தாழ்ந்தவர் இலக்கியம் என்பவைகளையெல்லாம் கலைத்துப் போடுகிறது. இலக்கியம் என்பதற்கு தனித்தகுதி இல்லை என்கிறது. இவ்வகைப் போக்குகளையெல்லாம் சில எச்சரிக்கையோடு பின்-நவீனத்துவத்தின் ஆக்கக் கூறுகள் என்றே நாம் மதிப்பிடலாம். யதார்த்தமும் ஒரு கற்பிதம் என்று ஏற்றுக்கொள்வோம். யதார்த்தம், உள்பொருளும்தான் வறுமை பசி, நோய், அடிமைத்தனம் முதலியவைகள் உள்பொருள்கள்தான். சமூகச் சூழலில் இவை இருக்கின்றன. இவற்றை

மாற்றுவதற்கு மனிதர்கள், இயக்கங்கள், கருவிகள் தேவை. இவற்றைக் கொண்டு அருவங்களோடு மட்டும் நாம் போராடவில்லை. உருவங்களோடும் தான் போராடுகிறோம் இவ்வகை எச்சரிக்கையோடு பின் நவீனத்துவத்தை நாம் பயில முடியும். பிற்கால முதலாளியியம் அல்லது மேற்கத்திய சூழல் இதை அருவமாக வைத்து விளையாடிக் கொண்டிருக்கலாம். நமக்கிந்த ஆரவாரம் தேவையில்லை. மார்க்சியம் மற்றும் யதார்த்தவாதத்தின் இறுக்கங்களை நாம் தளர்த்திக் கொள்ளவே விரும்புகிறோம். பின்நவீனத்துவம் தலித்தியத்தோடுதான் கைகோத்துக் கொள்ளமுடியும் என்பது பொருத்தமாகத் தெரியவில்லை. வெட்ட வெளியைத் தேடுகிற எல்லோரும் பின்நவீனத்துவத்தோடு கை கோத்துக் கொள்ளலாம். பின்-நவீனத்துவப் போக்கில் உருவாகும் இலக்கியங்கள் தாறுமாறாகத்தான் அமைய வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. "குட்டி இளவரசன்" போல எளிமையான வடிவத்திலும் கதைகள் வரலாம். டான்குயிட்சாட் கதையை நம் காலச் சூழலுக்கும் எழுதிப் பார்க்கலாம். பழைய இலக்கியங்கள், புராணங்கள் முதலியவற்றைத் தலைகீழாகப் புரட்டும் முறையில் எழுதுவதற்கும் பின்-நவீனத்துவம் பயன்படும். யதார்த்தத்தின் தேவைகளை முன்வைத்து இத்தகைய விநோதப் படைப்புக்களில் ஈடுபடலாம். படைப்புலகின் விரிவுக்கு இந்தப்போக்கு நமக்குப் பெரிதும் பயன்படும்.

# 5

**" இன்று நமக்கு நேர்ந்திருப்பது என்ன? வாழ்க்கையின் எல்லாப் பரிமாணங்களும், எல்லாக்கோணங்களும், ஒன்றோடொன்று மோதி, ஒன்று மற்றதை உடைத்து எந்த நொடியில் எந்தக் கோணம் என்று தெரியாத வகையில் நாம் நொறுங்கிக் கொண்டிருக்கிறோம்".**

1. உலகளவிலான பொருளியல் சக்திகள் நம்மை வந்து மோதுவது தொடர்ந்து அதிகரித்து வருகிறது. சந்தைப் பொருளாதாரம் பன்னாட்டு நிறுவனங்களுக்கு நம்மை அடிமைப்படுத்துகிறது. தனியார்மயப்படுத்தல் தொடர்ந்து அதிகரிக்கிறது. பொதுத்துறை நிறுவனங்கள் என்ற அரண் நமக்கு இனி இல்லை. இது தகர்ந்து கொண்டிருக்கிறது. மக்களிடமிருந்து முதலாளிகளும் அரசும் பேரளவில் சுரண்டியதில் ஒரு சிறு பகுதியை மானியம் எனக் கொடுத்து மக்களை இழிவுபடுத்துகிறார்கள். அரசியல் கட்சிகள் இந்தப்போக்கோடு ஒத்துழைக்கின்றன. மக்களின் மீது சுரண்டல் மட்டுமல்லாமல் ஒடுக்குமுறை அதிகரித்து வருகின்றது.மக்கள் இயக்கங்கள் தொடர்ந்து பிளவுபடுகின்றன. நமக்கான ஆதாரத்தளம் எது என்று தேடவேண்டியிருக்கிறது. தேடும்பொழுது நாம் உறுதியாக நிற்பதற்கான தளம் இல்லை என்பதும் தெரிகிறது.

இயந்திரங்கள் முன்பெல்லாம் உற்பத்தியில் தொழிலாளர்களோடு இணைந்து செயல்பட்டன. அந்தக் காலம் வேகமாக மறைந்து கொண்டிருக்கிறது. அறிவியலும், தொழில்நுட்பமும் தொடர்ந்து வளரும் நிலையில் உற்பத்தியில் இயந்திரங்களின் மற்றும் தொழில் நுட்பங்களின் பங்கு அதிகரிக்கும், அளவிற்குத் தொழிலாளர்களின் பங்கு குறைந்து விட்டது. கணினி, ரசாயனங்கள், உயர் தொழில் நுட்பங்கள் அதிகரிக்கும் நிலையில் நிபுணர்களின் பங்குக்குத்தான் இடமிருக்கிறது. திறன்கள் தேவைப்படாத உழைப்புக்குத் தொழிலாளர் தள்ளப்படுகிறார்கள். பசுமைப்புரட்சி என்பதன் தொழில்நுட்பம் தொடர்ந்து அதிகரிக்கும் நிலையில் மரபு முறை வேளாண்மையில் விரிவான அறிவு பெற்றிருந்த உழவர்கள் இன்று அறிவற்றவர்களாய், வறியவர்களாய் மாறிக்கொண்டிருக்கின்றனர். தொழிற்சாலைகளும், நகரங்களும் பெருகிவரும் நிலையில் நிலம் என்ற ஆதாரத்தை இழந்து உழவர்கள் கூலிகளாய் மாறிக்கொண்டிருக்கிறார்கள். ஏற்றுமதிக்கான உற்பத்தி என்ற போக்கு அதிகரிக்கும் நிலையில் தேக்குமரச்சாகுபடி, பழத்தோட்டங்கள், மாட்டுப் பண்ணைகள், இறால்பண்ணைகள் என்ற முறையில் பெரும் முதலாளிகளாலும் அந்நியர்களாலும்

நிலங்கள் அபகரிக்கப்பட்ட நிலையில் கிராமப்புறத்து உழவர்களும், பிற உழைப்பாளிகளும் வாழ்வதற்கு வழியற்றுத் திகைக்கிறார்கள்.

தொழில் முதலியவற்றின் உற்பத்தி என்பது இப்பொழுது தகவல் சாதனங்களின் ஊடுருவலுக்கு உள்ளாகியிருக்கின்றன. அதிகஅளவில் தகவல்களைச் சேகரிக்கும் திறன் உடையவரே இன்று பொருளியலின் உச்சத்தில் இருக்கமுடியும். தகவல்களை அவர்கள் தம் தேவைக்கேற்றவாறு விநியோகம் செய்கிறார்கள். எத்தகைய பொருளியல் அமைப்பு அல்லது உலகமைப்பு ஏற்பட வேண்டுமென்று உலகளவில் வளர்ச்சி பெற்றநாடுகள் திட்டமிடுகிறார்களோ அதற்கேற்றவாறு தகவல்கள் விநியோகம் செய்யப்படுகின்றன. பத்திரிகைகள், வானொலிகள் மட்டுமல்லாமல் விண்வெளிச் சாதனங்கள் மூலம் தொலைக்காட்சி மற்றும் இண்டர்நெட் முதலிய சாதனங்களை மிக மிக விரிவான அளவில் அவர்கள் பயன்படுத்துகிறார்கள். அவர்களின் தகவல் சாதனங்களின் ஆதிக்கத்திலிருந்து இப்பொழுது யாருமே தப்பமுடியாது என்ற நிலை உருவாகியுள்ளது. உற்பத்திக்காக மட்டுமல்லாமல் விளம்பரத்திலும் தகவல் சாதனங்களின் பங்கு அதிகமென்று நமக்குத் தெரியும். நவீனக்கருவிகள் முதற்கொண்டு வாழ்வியல் முறைவரை அவர்களின் விளம்பரங்கள் நமக்குள் ஊடுருவிச் சென்று நம்மை அவற்றிற்கு அடிமைப்படுத்துகின்றன. மத்தியதர வர்க்க மனிதர்களுக்குள் மட்டுமல்லாமல் கிராமப்புறத்து உழைக்கும் மக்களுக்குள்ளும் நுகர்வியம் என்ற போக்குத் தொடர்ந்து அதிகரிக்கிறது. நகரம், நவீனத் தொலைத்தொடர்புச் சாதனங்கள், ஆடம்பரமான வாழ்க்கை, பொழுதுபோக்கு, கல்வி, மருத்துவம் என்ற முறையில் அனைத்துவகையான நவீனப்போக்குகளுக்கும் மக்கள் அடிமைப்பட்டு வருகிறார்கள்.

2. இத்தகைய போக்குகள் நம்மை என்ன செய்கின்றன என்பது பற்றி நாம் ஆழமாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. உலகளாவிய பொருளியல் சக்திகளால் நாம் ஊடுருவப்பட்டு அவர்கள் உலகளவில் விரித்து வைத்திருக்கும் பின்னல் வலையின் கண்ணிகளால் நாம் கட்டப்படுகிறோம். நம் அறிவையும் பண்பையும் அவர்கள் தமக்கானதாக உருமாற்றுகிறார்கள். நமக்குள்ள திறன்கள் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கும் திறன்கள் அவர்களுக்கான அவர்களால் நமக்குள்ளிருந்து கட்டப்பட்ட திறன்கள். கல்வி நிறுவனங்கள் அவர்களின் தேவைக்கேற்றவாறு மாணவர்களின் அறிவையும், ஆளுமையையும் கட்டமைக்கின்றன. நமது நாடு, மொழி, மரபு என்பனவெல்லாம் நம்மைவிட்டு மெல்ல மெல்லக்கழன்று கொண்டிருக்கின்றன. பணம் அதிகாரம் என்பனவே இறுதி லட்சியங்களாக மாறுகின்றன. இவற்றை உறுதியாகப் பற்றிக்கொள்ள இயலாத மக்களின் தொகை அதிகரிக்கிறது.

வாழ்வின் லட்சியங்கள் எவை என்ற சிந்தனைகள் தடுமாற்றத்திற் குள்ளாகின்றன. வாழ்வுக்கு இலட்சியம் தேவைதானா என்ற ஐயம் அதிகரிக்கின்றது. ஆதிக்கவாதிகளின் கைகளில் அவர்களின் கருவிகளாக மட்டுமே நாம் இருந்து தீர வேண்டும் என்றுதான் மக்கள் சிந்திக்கின்றனர். வாழ்வின் எல்லைகள் தொடர்ந்து சுருங்கி வாழ்க்கை சாரமற்றதாய் மாறிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொருநாளும் பத்திரிக்கைகளில் விபத்துக்கள், மரணங்கள் கூடுதலாகி வருவதைப் படிக்கும்பொழுது நாம் உணர்ச்சியற்றவர்களாய், மரத்துப்போனவர்களாய் மாறிக்கொண்டிருக்கிறோம். வாழ்வின் மீது நமக்கு நம்பிக்கை இல்லை. உலகத்தை மீண்டும் மாற்றி அமைக்க முடியும் என்ற எண்ணத்திற்கு எதிரான நியாயங்களே கூடுதலாகத் தெரிகின்றன. அவலம் நம்மை ஆட்கொள்ளுகிறது. மனநோய் அதிகரித்து வருகிறது. இந்தப் போக்குகளையெல்லாம் மேலும் விரிவாகப் பட்டியல் போடவேண்டியதில்லை.

இந்தச்சூழலில் தான் பின்-நவீனத்துவம் என்று நாம் பேசுகிறோம் நேரே பற்றிக் கொள்வதற்கான யதார்த்தம் என ஒன்றில்லை. நம் வாழ்க்கையில் எல்லாமே குழம்பிவிட்டன. வாழ்வின் பல்வேறு பரிமாணங்கள் தாறுமாறாகிக் கிடக்கின்றன. உறவுகள் எல்லாம் சிக்கலாகிவிட்டன. நேற்று நல்லனவெனக் கருதியவை இன்று தீயனவெனத் தெரிகின்றன. நேர்மையான வழியில் தொழில் செய்ய முடியாது. எவ்வளவோ பொய்கள் ஏமாற்றுக்கள் செய்துதான் வாழவேண்டியிருக்கிறது. நியாயத்திற்கு மரியாதையில்லை. அநியாயமே ஆட்சி செய்கின்றது. குடும்பங்கள் சிதறுகின்றன. ஆண்/பெண் உறவுகள் கலங்கிவிட்டன. கல்வி முதலிய நிர்வாகத்தில் நேர்மையில்லை. விபத்துக்கள் அதிகரிக்கின்றன. புதியவகை நோய்கள் தொடர்ந்து பெருகுகின்றன. நம்மால் எதையும் தீர்மானிக்க முடியவில்லை. பிறர் தீர்மானங்களுக்குக் கட்டுப்பட்டுச் செயல்படும் பொழுது நாம் அறிவற்றவர் ஆகிறோம், பண்பற்றவர் ஆகிறோம். அறிவிழந்த நிலையில் நமக்கே நாம் தன்மானமற்றவர்களாகத் தெரிகிறோம். சட்டமன்றங்கள், நீதிமன்றங்கள், அரசியல்கட்சிகள், அரசு நிறுவனங்கள் முதலிய அனைத்தும் தமக்கென வகுத்த நெறிகளில் செயல்படுவதில்லை. குறுக்கும், நெடுக்குமாக எல்லாமே உடைத்துக்கொண்டும், தகர்த்துக் கொண்டும் இருக்கின்றன. பாதைகள் இல்லை. வல்லான் வகுத்ததே பாதை, போக்கிரிகளுக்கே வாழ்க்கை, அறத்திற்கு மரியாதையில்லை, கற்புத் தேவையில்லை என்ற குரல். எல்லாமே வணிகப்பொருள் என்ற மனப்பான்மை. எதிலும் நிச்சயமில்லை. உலகில் இறுதியானது எனச் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இனி எதுவும் நேரலாம். ராணுவங்களும், காவல் துறையும், ஆயுத உற்பத்திகளும் தொடர்ந்து பெருகுகின்றன. நிதி நிறுவனங்கள் கொள்ளையடிக்கப்படுகின்றன.

அதிகாரத்தின் கருணை இருந்தால் கொஞ்சகாலம் வாழ்ந்துவிடலாம். வாழ்க்கை என்பது உணவு, உடை வாடகைக்கு வீடு, கொஞ்சம் பொழுதுபோக்கு ஆர்ப்பாட்டம், தலைவர்க்குத் துதிபாடுதல், கேவலங்களை உள்வாங்கிக் கொண்டு அமைதியாக இருப்பது, திருமணம், குழந்தைப்பேறு, யாரும் நம் பாதுகாப்பில் இல்லை. அவரவர்க்கு தனிவிதி, வாழ்க்கை. முடியுமானால் பணம் சேர்த்துக்கொள். கொள்ளையடி., தப்பித்துக்கொள் என்ற முறையில் வாழ்க்கை மாறிவிட்டது. இந்த வர்ணனை மத்தியதர வர்க்கத்திற்கு மட்டுமே பொருந்தியது அல்ல. உழைக்கும் மக்கள் அனைவர்க்குமே பொருந்தும். முதலாளிகள் இன்றைய சமூக நிலவரங்களிலிருந்து தப்பிச்சென்று விட முடியாது. அவர்களுக்கும் நிறையப் பாதிப்புக்கள் உண்டு.

இப்பொழுது மனிதனின் சுயம் என்னவாகியிருக்கிறது என்று பார்க்கலாம். உலகத்தை, புறத்தை அவன் நேரிடையாக உள்வாங்கிக் கொள்ள இயலாது. புறத்தோடு நேரிடையாக உறவு கொள்வது சாத்தியமில்லை. அகத்தினுள்ளும் எத்தனையோ அடுக்குகள், புறத்திலும் பல அடுக்குகள், எல்லாமே நிலை குலைந்து கிடக்கின்றன. ஒரு பலமாடிக்கட்டடம் விழுந்து கிடப்பதைப் போல, நிலநடுக்கத்தினால் அல்லது வெடிகுண்டின் தகர்ப்பினால் சரிந்து கிடப்பதைபோல. எந்த இடத்தில் நாம் இந்தக் கணத்தில் நிற்கிறோம் என்று சிந்திக்கும் பொழுதே வேறு இடத்தில் நம்மைக் காண்கிறோம். எந்த ஒன்றிலும் நம்மால் நிலைத்து நிற்கமுடியவில்லை. நாம் நிற்பதாகத் தெரியும் ஆதாரம் உடனடியாகக் குலைந்து விடுகின்றது. ஏதாவது ஒரு கோணத்தில் நின்று எல்லாவற்றையும் பார்த்துவிடலாம் என்றால் அப்படிப் பார்த்து விடுவது சாத்தியமில்லை என்று தெரிவதோடு, பார்க்கும் கோணமே சரிந்துவிடுகிறது. வாழ்க்கைப்பரப்பை ஒரு கோணத்தில் நின்று பார்க்க முடியாது என்பது நாம் முன்பே அறிந்து செய்திதான். சாதாரணமாக ஒரு மரத்தைச் சரியாகப் பார்க்க வேண்டுமானாலும் பல கோணங்கள் தேவைப்படும். தரையில் படுத்துக்கொண்டு பார்ப்பதும் கூட ஒருவகைக் கோணம், மரத்திற்கு மேலே சென்று - ஒரு கட்டடத்தின் மாடியில் நின்று பார்ப்பதும் ஒரு கோணம். ஒரு குழ்ந்தையைச் சரியாகப் பார்ப்பதற்கு எத்தனையோ கோணங்கள் தேவைப்படும். பிள்ளைத்தமிழ் என்ற இலக்கியம் சொல்லும் 10 கோணங்கள் கூடப்போதாது உலகிலுள்ள பலவகையான மதங்கள் வாழ்க்கையை வெவ்வேறு கோணங்களில் பார்க்கின்றன. இதைப்போலத்தான் தத்துவங்களும் கோட்பாடுகளும், ஒவ்வொன்றி னுள்ளும் பல கோணங்கள் இருக்கின்றன. வாழ்க்கையைக் குடும்பம் என்ற கோணத்திலிருந்து ஆண்/பெண் உறவு என்ற கோணத்திலிருந்து, அதிகாரம் என்ற கோணத்திலிருந்து, தொழில் என்ற கோணத்திலிருந்து,

இவற்றைப்போலவே கலையென்ற கோணத்திலிருந்து, மதம், சாதி என்ற கோணத்திலிருந்து திருட்டு, கற்பழிப்பு சிறை என்ற கோணத்திலிருந்து, இப்படி எத்தனையோ கோணத்திலிருந்து வாழ்க்கையைப் பார்க்கிறோம். சிறுவர், முதியவர், மத்திய தர வகுப்பினர், சினிமா, நாடகம், விளையாட்டு, விபத்து, நாசம், சூதாட்டம் போர் என்றும் கோணங்கள் மாறுகின்றன. வாழ்க்கையைப் பார்க்கப் பலகோணங்கள் தேவைப்படும் என்பதும் உண்மைதான். ஒவ்வொரு கோணமும் வாழ்க்கையின் ஏதாவது ஒரு பரிமாணாமத்தைக் குறிக்கிறது என்பதையும் புரிந்து கொள்ளலாம்.

ஆனால் இன்று நேர்ந்திருப்பது எல்லாப் பரிமாணங்களும், எல்லாக் கோணங்களும் ஒன்றோடு ஒன்று மோதி ஒன்று மற்றதை உடைத்து எந்த நொடியில் எந்தக்கோணம் என்று தெரியாதவகையில் நம்மை நொறுக்கிக் கொண்டிருக்கின்றன. நம்மை ஆதிக்கம் செய்கின்றவர்களுக்கு இந்தத் தடுமாற்றம் இல்லை. அவர்கள் உறுதியான தளத்தில் நின்று கொண்டிருக்கிறார்கள். அல்லது நின்று கொண்டிருப்பதாக நினைக்கிறார்கள். அவர்களும் அவ்வாறு இல்லை என்று சற்று ஆழச் சிந்தித்தால் அவர்களும் புரிந்து கொள்வார்கள். ஆனால் பாதுகாப்பு இருக்கிறவரை அப்படி அவர்கள் சிந்திக்க மாட்டார்கள். அவர்களின் ஆதிக்கத்திலுள்ள நமக்குத்தான் பிரச்சனை.

எந்தத் தளத்திலிருந்து எதைப் பார்ப்பது? நமக்குள் என்ன இருக்கிறது? நாம் என்னவாக மாற்றப்பட்டிருக்கிறோம்? எங்கே நாம் தொங்கிக் கொண்டிருக்கிறோம்? நாம் பற்றிக் கொண்டிருப்பது பாம்பா, பழுதா? நாம் உள்ளே இருக்கிறோமா, வெளியில் இருக்கிறோமா? நாம் வாழும் காலம் எது? நமக்குள் யார் யாரோ இருக்கிறார்கள். கள்ளர்கள் வியாபாரிகள், நல்லவர்கள் தீயவர்கள் என்று எத்தனையோ பேர். இவர்களில் நாம் யார், நமக்குள் நாம் சிறுவனாய் இருக்கிறோம் பள்ளியில் படிக்கிறோம். பெற்றோர்களிடம் அடிபடுகிறோம். நண்பர்களோடு உறவுகொண்டோம், நண்பர்களை ஏமாற்றினோம் தத்துவங்கள் கற்றோம், சிறைப்பட்டோம், வாழ்க்கையில் அனுபவப்பட்டோம். துன்புற்றோம், அவமானப்பட்டோம், உச்சத்திற்கு ஏறிச்செல்ல முயற்சி செய்தோம். வழுக்கிவிழுந்தோம். ஏமாற்றினோம், ஏமாற்றப்பட்டோம். மரணத்திற்கு அருகில் இருந்தோம். தப்பிவந்தோம், இப்படி எத்தனையோ அனுபவங்கள் நல்லதும் கெட்டதுமாய் எல்லாமே தோன்றுகின்றன. பிரித்துப் பார்ப்பது கடினம், மதிப்பீடு செய்வது அதைவிடக் கடினம், திருத்திக்கொள்வது அதைவிடக் கடினம், தண்டிக்கப்பட்டவர்களாகத் தான் வாழ்கிறோம். தப்புவதற்கு வழியில்லை. நம்மைநாமே பிறாண்டிக் கொண்டிருக்கிறோம். காயங்கள் அதிகரிக்கின்றன. இது ஒருவகையில் நிம்மதியாகக் கூட இருக்கிறது.

தோல்வி கூட ஒரு சுகம், வெற்றி கூட ஒரு சோகம், நமக்குள் நிறைய அசுத்தங்கள், கறைகள். அவையும் மணக்கின்றன. அசிங்கங்களை நேசிக்காமல் வாழ்ந்ததில்லை. கல்லெறிவதிலும் சுகம் கண்டிருக்கிறோம். கலைப்பதிலும் சுகம், இப்படியெல்லாமாகவும் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம், தொலைந்து போயிருக்கிறோம், தொலைத்திருக்கிறோம், ஒன்றைத்தேடினோம், இன்னொன்று கிடைத்தது. தெய்வங்களைத் தேடினோம் பிசாசுகளாய் மாறினோம் சடங்குகள் செய்தோம் மனநிம்மதி இழந்தோம். இப்படித்தான் வாழ்க்கை நமக்கு அமைந்திருக்கிறது.

இன்றைய உலகப்போக்கினால் ஊடுருவப்பட்டு மேலும், மேலும் கலங்கி, குழம்பி, பரிமாணங்கள் தளங்கள் தடுமாறி, கைப்பற்றுவதற்கு எதுவும் இல்லாமல், பற்றும்பொழுதே நழுவிப்போவதாய், பற்றாமல் இருக்க முடியாததாய், இப்படி உண்மையாய், இன்மையாய் இருக்கிற வாழ்க்கையை எங்கிருந்து, எந்தக் கோணத்திலிருந்து, எந்தத் தளத்திலிருந்து பார்ப்பது என்று சிந்திக்கும் பொழுது தான் பின்-நவீனத்துவம் சொல்லுகிறது கொலாஜ் (Collage) என்று சொல்கிறது. அந்தப்பார்வையை மாண்டேஜ் (Montage) என்றும் சொல்லலாம். முன்னைய பார்வைகளின் வசதியும், சுகமும், நம்பிக்கையும், அழகும் இதில் இல்லை. இவையெல்லாவற்றிற்கும் எதிர் நிலைகள் தான் கூடுதலாக இருக்கின்றன. எந்த ஓர் அறிவின் உறுதியான தளத்திற்கும் இதில் இடமில்லை. ஓர் அறிவின் தளத்தில் நிற்கும் பொழுது மற்ற தளங்கள் அறிவற்றவை. குதர்க்கமானவை. ஒன்றினழகில் நின்று பார்க்கும் பொழுது மற்றவை அழகில்லாதவை. ஒன்றில் அதிக நேரம் நிற்கமுடியாது. நிற்கும் பொழுதே மற்றதன் தாக்குதலில் இது குலைந்து விடுகிறது. இதற்குப்பெயர் எதிர் அழகியல்.

4. இந்தச் சமூக நிலவரங்களைத்தான் ஏகாதிபத்தியம் மற்றும் முதலாளியம் நமக்கு ஏற்படுத்தியிருக்கிறது. சகிக்கமுடியாத இந்தக் குழப்பமான சமூக நிலவரங்களில் நம்மால் வாழமுடியாது. அடிமைப்பட்டவர்களாய் ஆளுமை நொறுங்கியவர்களாய், பின்னங்களில் சிதைகிறவர்களாய், பின்னங்களும் அற்றவர்களாய் நாம் வாழத்தான் முடியுமா? இந்தக் குரூரமான உலகத்தை நாம் ஏற்றுக்கொள்ளப் போகிறோமா? ஏற்றுக் கொள்வதைத்தவிர நமக்கு வேறுவழியில்லை என்று சிலர் சொன்னால் நமக்கு உடன்பாடு தானா? நாம் என்ன செய்யப்போகிறோம்? நம் இந்தியச் சூழலில்,, தமிழகச் சூழலில் மரபுகள் இன்னும் முற்றாக அழிந்து விடாத சூழலில், இயந்திரங்கள் முதலியவற்றின் வசத்தில் இன்னும் முழுமையாக மாட்டிக்கொள்ளாத நிலையில், நமக்கான ஆளுமையை இன்னும் நாம் முற்றாகக் கைவிடாத நிலையில், மனநோயாளிகளாக நாம்

இன்னும் மாறாத நிலையில், இயற்கை இன்னும் மிச்சம் இருக்கிற நிலையில், நாம் என்ன செய்யப்போகிறோம்?

இந்தக் கேள்விகளோடு மேலும் ஒரு கேள்வி. நம் இலக்கியவாதிகள் இன்னும் எந்த உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் வாழ்வது யதார்த்த உலகம் என்றால் அது தொடர்ந்து சிதைந்து கொண்டிருப்பதை அவர்கள் அறியவில்லையா? பின்-நவீனத்துவ உலகமாக இது ஆகிவிடக்கூடாது என்ற எண்ணத்தோடு அவர்கள் எழுதுகிறார்களா? அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? புயல் பற்றி எச்சரிக்கைகள் வானொலியில் ஒலிபரப்பப்படுவதைக் கேட்காமல் கடலில் செல்ல மரக்கலங்களை அவர்கள் தயார் செய்து கொண்டிருக்கிறார்களா? என்ன செய்கிறார்கள்?. இளமைக்கால உலகத்திற்குள் அல்லது அழிந்துபோன, அல்லது கழிந்து கொண்டிருக்கும் உலகிலேயே தம் வாழ்வை முடித்துக்கொள்ள முடியும் என்று கருதிக்கொண்டிருக்கிறார்களா? இலக்கியம் என்பது அவர்களைப் பொறுத்தவரை வற்றாத சக்தியா? இலக்கியத்திற்குள் அவர்கள் வாழ்ந்துவிட முடியுமா? ஓரங்களில் எட்டிப் பார்க்கும் பொழுது புயல்களைச் சந்தித்த நிலையில் அவர்கள் பின்வாங்கித் தம் விளையாட்டு இடங்களைத் தேடிச்சென்று அங்கு மறைந்து விடுகிறார்களா? இலக்கியம் என எதை அவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள்?

# 6

**"ஐன்ஸ்டினின் சார்பியல் கோட்பாடு வந்தவுடன், நியூட்டனின் கோட்பாடு அழிந்துவிடவில்லை. இயற்பியல் தராசு கொண்டு விறகை நிறுக்க முடியாது. டிராக்டர் வந்தவுடன் எருதுகளுக்கு அவசியம் இல்லை என்பது பொருந்தாது"**

1. தமிழில் இதுவரை எழுதப்பட்ட தலித் நாவல்கள் மற்றும் சிறுகதைகள் பெரும்பாலும் யதார்த்தவாத முறையிலே எழுதப்பட்டன. பாமா-வின் `கறுக்கு' `சங்கதி' ஆகிய நாவல்கள் தலித் மக்களின் சுய அனுபவம் சொல்லும் முறையில் எழுதப்பட்டிருக்கின்றன. தலித் மக்களின் வாழ்வுக்குள் செலுத்தப்படும் அடக்குமுறைகள் சொல்லப்படுகின்றன. அடக்குமுறைகள் இருந்தபொழுதிலும் இவர்களின் மகிழ்ச்சிகள் விளையாட்டுக்கள், கேலிப்பேச்சுகளும் இடம் பெறுகின்றன. நம் சமூக அமைப்பின் ஆதிக்க எல்லைக்களுக்குள்ளிருந்தே இந்த அனுபவங்கள் சொல்லப்படுகின்றன. இந்த எல்லைகளை இந்த நாவல்கள் கடந்து செல்லவில்லை. கடந்து செல்ல முடியாத அளவுக்கு எல்லைகள் இறுக்கமாக இருக்கின்றன. ஒடுக்கப்பட்ட நிலையில் கிடைத்திருக்கிற வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளும் மனநிலை இந்த நாவல்களில் பெரும்பகுதி பதிவாகியிருக்கிறது. கடந்து சென்றால் வாழ்க்கை எப்படி இருக்கும் என்ற கனவுகள் இவற்றில் இல்லை. கிறித்துவ சமயக் கட்டமைப்புக்குள்ளும் சாதி ஏற்றத்தாழ்வுகளால் ஏற்படும் கடுமையான முரண்பாடுகளை மார்க்சின் `யாத்திரை' சொல்லுகிறது. பூமணியின் `பிறகு' நாவலில் ஆதிக்கச் சாதிக்கு எதிர்ப்பு இடம் பெறுகிறது. தங்கள் பெண்ணின் உடல் மீது நில உடைமையாளர் தன் ஆதிக்கத்தை செலுத்துகிறபொழுது இவர்களின் தன்மானம் காயம்பட்ட நிலையில் எதிர்ப்பு செயல்படுகிறது. சிவகாமியின் முதல்நாவலில் ஆதிக்கசாதியின் எதிர்ப்புணர்வை உள்வாங்கிக்கொண்ட நிலையில், காத்தமுத்துவின் எதிர்ப்புணர்வு செயல்படுவதைச் சொல்லுகிறது. இவர் மகள் கௌரி நடுத்தரவர்க்கமாகத் தன்னை உயர்த்திக்கொள்ள முனைந்திருக்கிறாள். இதன் காரணமாகத் தந்தைக்கும், மகளுக்கும் முரண்நிலை தோன்றுகிறது. கௌரி முற்போக்கு இயக்கத்தினரோடு உறவு கொள்கிறாள். காத்தமுத்துவிற்கான விடுதலை மத்திய தர வர்க்க ஆக்கத்தின் மூலமும், முற்போக்கு இயக்கத்தின் மூலமும் இடம் பெறலாம் என்பது ஆசிரியரின் கருத்தாக இருக்கக் கூடும். காத்தமுத்துவின் எதிர்ப்புணர்வு வரவேற்கத்தக்கது. அவளது குடும்ப உறவுகள் மரபின்

தொடர்ச்சி என்பதைத் தவிர வேறுவகையில் பாராட்டுவதற்கில்லை. ஆனந்தாயி நாவலில் தலித் வாழ்க்கை முன்னுக்கு வரவில்லை. பெரியண்ணனுக்குக் கீழும் ஒரு தலித் இருக்கிறான். பெரியண்ணன் காரணமாக அந்தக்குடும்பம் சீர்குலைகிறது. மற்றபடி ஒரு மத்தியதர வாழ்க்கையின் சிக்கல்கள்தான் இந்த நாவலில் இடம் பெறுகின்றன. 'ஆனந்தாயின் தாய்மை. லட்சுமியின் வீரம் ஆகியவை இந்த நாவலில் வாசகரைக் கொஞ்சம் பரவசப்படுத்தக் கூடும். காதலன் கணவனாகிறான். தனத்தை ஏமாற்றிவிட்டுப் போய்விடுகிறான். குழந்தையோடு வாழும் தனத்திடம் மீண்டும் அவன் வர முயன்றபோது அவனை உதறுகிறாள். இந்த அம்சம் நாவலில் குறிப்பிடத்தக்கது. மேற்கூறிய நாவல்கள் யதார்த்தவாத எல்லைக்குள்தான் இயங்குகின்றன. தமிழில் யதார்த்தவாதம் ஆழமாகப் பதிந்துவிட்டது என்பதும் இதற்குக் காரணமாகலாம். நம் சமூகத்தின் எல்லைகள் இன்னும் தகர்க்கப்படுவதற்கான தீவிர இயக்கங்கள் இல்லையென்பதும் காரணம். படைப்பாளிகளைப் பொறுத்தவரை வாழ்வில் குறைந்தளவுக்கேனும் பாதுகாப்புத் தேவை என்று கருதுவதும் ஒரு காரணம். எல்லைகளைத் தகர்ப்பதற்கான சிந்தனைகள் மேலோங்கிவருகின்றன. தலித் மக்கள் விடுதலைக்கான இயக்கங்கள் தீவிரப்படுகின்றன. ஆதிக்கத்திலிருந்து குறிப்பாகச் சாதீய ஆதிக்கத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொள்வது என்ற நோக்கம் இந்தப் போராட்டங்களில் முன்னிலைக்கு வந்திருக்கிறது. இந்தப் போராட்டத்தின் வீச்சு அதிகரிப்பதற்குத் தத்துவம் எந்தவகையில் உதவக்கூடும் என்பதில் இன்னும் தெளிவு ஏற்படவில்லை. பின்-நவீனத்துவம் என்று பேசினாலும் தலித் மக்களின் வாழ்க்கையை அல்லது சிந்தனையை இது எவ்வாறு புரட்டிப் போடும் என்பது பற்றிய போதுமான புரிதல் இன்னும் ஏற்படவில்லை. பின் நவீனத்துவ நோக்கில் யதார்த்த வாத வகைப்பட்ட இலக்கியம் பற்றிய அல்லது திரைப்படம் பற்றிய திறனாய்வுகள் கூர்மையாக முன் வைக்கப்பட்டிருக்கின்றன. பின்-நவீனத்துவம் என்ற போக்கு தோன்றுவதற்கான உலகளவிலான முதலாளியம் நம் சமூகத்தில் எத்தகைய தாக்கங்களை ஏற்படுத்தி வருகிறது என்பது பற்றியும் குறிப்பாகத் தலித் சமூகத்தின் மீது அதன் தாக்கத்தின் வீச்சுகள் என்ன என்பது பற்றியும் திறனாய்வாளர்கள் சொல்லவில்லை. பின்-நவீனத்துவத்தின் கொலாஜ் என்ற வடிவம் தலித் மக்களுக்குள்ளிருந்து எடுக்கப்படுவதாக இருக்க வேண்டும் அல்லது கொலாஜ் என்ற வடிவில்தான் தலித் மக்கள் வாழ்வும் சிந்தனையும், சரியாகவும், கூடுதலாகவும் சொல்லப்படமுடியும் என்பதை இவர்கள் இன்னும் சோதனைக்கு எடுத்துக்கொள்ளவில்லை. இலக்கியத்தைக் காட்டிலும் வாழ்வியல் மாற்றங்கள் முக்கியம் என்பதில் ஐயமில்லை. வாழ்வியல் மாற்றம் என்ற நோக்கில் மக்களின் சிந்தனையை முன் நகர்த்துவதற்கு இலக்கியம் பயன்படலாம். ஆனால் தமிழச் சமூகத்தில் நேற்றும்

இன்றும் நடைபெற்ற தலித் விடுதலைக்கான போராட்டங்கள் இன்றுவரை குறைந்தளவுக்கேனும் இலக்கியமாக, சுயசரிதையாக அல்லது போராட்ட வரலாறாகப் பதிவு செய்யப்படவில்லை. போராட்டத்தை முன்னெடுத்துச் செல்வதற்கு இத்தகைய எழுத்து வடிவிலான ஆக்கங்கள் பெரிதும் பயன்படும்.

2. பின்-நவீனத்துவம் இதுவரை இலக்கியம் என்ற வடிவத்தைப் பெருமளவு தகர்க்க முடியுமென்பது உண்மைதான். வாழ்விலிருந்து கதை சொல்லும் திறனையோ, மகிழ்ச்சியையோ, சுவை உணர்வையோ, பின்-நவீனத்துவம் ஒதுக்கிவிட அல்லது அழித்துவிட இயலாது. யதார்த்த வாதத்திற்கும் நவீனத்துவத்திற்கும் உரியது பரவச உணர்வு அன்று என்று சொல்லிப் பரவச உணர்வை வாழ்விலிருந்து களைந்துவிட முடியாது. காதலின் பரவசத்தை என்றைக்காவது நாம் களைந்து விடுவது சாத்தியமா? இசையின் மூலம் அல்லது பலர்கூடி ஆடுவதன் மூலம், பறை முதலிய கருவிகளோடு ஒத்திசைந்து ஆடலின்மூலம், வீரச்செயல் வடிவில் ஏற்படும் வெற்றியின் மூலம், ஓர் அரிய கண்டுபிடிப்பினைச் செய்வதன் மூலம் ஏற்படும் பரவசம் உன்னதமானது தான். இந்த உன்னதமான மனநிலை வாழ்வின் எல்லையை விரித்துப் போடுகிறது. அன்பையும், நேசத்தையும் இது தூண்டிப் பொங்கி எழச் செய்கிறது.

யதார்த்தவாதமும், நவீனத்துவமும் அறிவின் ஆதிக்கத்தோடு செயல்படுகின்றன என்று கூறுகிறார்கள். நவீனத்துவத்தின் செயல்பாட்டைக் கூர்ந்து கவனித்தால் தர்க்கத்தின் ஆதிக்கம் இதனுள் செயல்படும்போதே அதர்க்கத்தின் எல்லைக்குள் அது நுழைவதைப் புரிந்துகொள்ளமுடியும். யதார்த்தவாதமும் தன் முன்னைய இறுதி எல்லைகளைத் தகர்த்துப் புதிய எல்லைகளுக்குள் செல்லும்பொழுது இந்தப் போக்கை உணரமுடியும். பின்-நவீனத்துவம் அதர்க்கத்தை மனிதனுக்குள் மீண்டும் கண்டுபிடித்து முன்னுக்குக் கொண்டுவருவதை நாம் வரவேற்கிறோம். தர்க்கத்தின் போதாமையைத்தான் அது குறிக்கிறது. வாழ்வின் அடிப்படைகளைப் புரிந்துகொள்ள புதிய தர்க்கம் தேவையென்பதையும் இது புலப்படுத்துகிறது. பழைய பொருள்முதல்வாதம் நமக்குப் பயன்படாது என்பதையும் அது காட்டுகிறது. ஆனால் இங்கு மிகுந்த எச்சரிக்கையுணர்வுடன் இருக்க வேண்டும். நமக்குச் சமூக மாற்றங்கள் தேவை. இன்றைய ஆதிக்க சக்திகளின் கைகளிலிருந்து அரசு அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும். இத்தகைய செயல்பாடு பொருண்மை வடிவமான செயல்பாடு. இயக்க வடிவிலான செயல்பாடு. குறைந்தளவுக்கேனும் அதிகாரத்தைச் செயல்படுத்தாமல் இவைகள் எல்லாம் சாத்தியமில்லை. இங்கெல்லாம் பொருள்முதல்வாதம் பற்றிய,

பழைய புரிதலைக் கூட ஒதுக்கிவிட முடியாது. அனார்க்கிசம் என்று சொல்லக்கூடிய தத்துவநிலைப் பாட்டிற்கு ஒத்ததாகப் பின்-நவீனத்துவம் இருக்கக்கூடும். பெரியாரின் மெய்யியலைக் கூட அனார்க்கிசம் என்று புரிந்துகொள்வதன் மூலம் இன்னும் கூடுதலாக விளக்கமுடியும். ஐன்ஸ்டினின் சார்பியல் கோட்பாடு வந்தவுடன் நியூட்டனின் கோட்பாடு அழிந்துவிடவில்லை. ஒவ்வொன்றும் செயல்படும் தளங்கள் வெவ்வேறு ஆக இருக்கின்றன. இயற்பியல் தராசு கொண்டு விறகை நிறுக்க முடியாது. டிராக்டர் வந்தவுடன் எருதுகளுக்கு அவசியம் இல்லை என்பது பொருந்தாது.

பிற தத்துவங்களோடு உறவு கொள்ளாமல் ஒரு தத்துவம் தன்னை வளர்த்துக் கொள்ளவோ நிலைநிறுத்திக் கொள்ளவோ முடியாது. வேறுபடுத்தலில்தான் சொற்களுக்கு அர்த்தம் கிடைக்கிறது என்றால் இங்கும் அதுதான் உண்மை. பின்-நவீனத்துவம் மட்டுமே மனிதவிடுதலைக்கு முழுமையான கோட்பாடாக இருக்க முடியும் என்று சொல்வதையும், இதன் காரணமாக யதார்த்தவாதமோ, நவீனத்துவமோ பொருந்தாது என்பதையும் இப்படித்தான் விளங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. யதார்த்தவாதம் இருந்தால்தான் பின்-நவீனத்துவத்திற்கு அர்த்தம் ஏற்படுகிறது. இதற்காக பிற்போக்குத்தனத்தை நிரந்தரமாகப் பற்றிக்கொள்ள வேண்டுமென்பது பொருளல்ல. யதார்த்தமும், தத்துவமும் என்றைக்கும் முரண்பட்டுத்தான் இருக்கும். எதிர்நிலைகளுக்கிடையில் ஒத்திசைவு தற்காலிகமானது. போராட்டம் நிரந்தரமானது என்று லெனின் கூறியது இங்கு கூடுதலாகப் பொருந்தும். கொலாஜ் என்ற வடிவம் அர்த்தம் பெறுவது பிரதிபலிப்பு மற்றும் பிரதிநிதித்துவப் படுத்தலோடு ஒப்பிடும் பொழுதுதான். இவற்றிற்கிடையிலான உரையாடலின் போதுதான் இவற்றில் ஒவ்வொன்றும் அர்த்தம் பெறுகின்றன.

# II. மார்க்சியமும் இலக்கியமும்

## 1

சில சந்தர்ப்பங்களில் கலை அடைந்திருக்கிற உன்னதத்தை அந்தச் சமூகத்தின் பொருளியல் சூழலிலிருந்து விளக்க முடியாது என்று மார்க்ஸ் கூறினார். அடித்தளம்தான் மேற்கட்டுமானத்தைத் தீர்மானிக்கிறது என்ற மார்க்சிய வரையறைக்கு இது எதிரானதாகவோ, விதிவிலக்கானதாகவோ நமக்குத் தோன்றலாம். அல்லது இறுதி ஆய்வில் எல்லாவற்றையும் பொருளியல் அடித்தளம்தான் தீர்மானிக்கிறது என்ற வரையறைக்குள் இதை அடக்க முடியும் என்றும் சிலர் விவாதிக்கலாம். அதே சமயம் இலக்கியத்தின் தனித்தன்மை பற்றி ஏங்கல்சின் கூற்றையும் இங்கு நாம் நினைவுகொள்ளவேண்டும். கலைக்கு மட்டுமல்லாமல் சமயத்திற்கும் இந்தக் கூற்றுப் பொருந்தும் என்பதை ஏங்கல்சிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

இந்தச் சிக்கல் குறித்து விரிவான ஆய்வுக்கு இடம் இருக்கிறது என்ற போதிலும், பொருளியலும் இலக்கியமும் முரண்படுவதாகிய ஓர் அம்சத்தை மட்டும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளலாம். கலை மற்றும் இலக்கியங்கள் சமூகச் சிக்கலைத்தான் உள்ளடக்கமாகக் கொண்டிருக்கவேண்டும் என்று மார்க்சியர் என்று தம்மைக் கருதிக்கொள்வோர் இடையறாது வற்புறுத்துகின்றனர். இலக்கியம் என்பது மக்களுக்கானது என்றும், இதன் காரணமாகக் கலை இலக்கிய வடிவங்கள் மக்களால் எளிதில் புரிந்துகொள்ளக்கூடியனவாக இருக்கவேண்டும் என்றும் கூறுகிறார்கள். பொருளியல் முதலிய சிக்கல்களை முதன்மைப்படுத்தாமல் இலக்கியம் படைப்பதே எங்கள் குறிக்கோள் என்று கூறும் இலக்கியவாதிகளை மார்க்சியர் கடுமையாகக் குறை கூறுகின்றனர். "கலை கலைக்காகவே" என்பதே இவர்கள் கொள்கை என்றும் திறனாய்வு செய்கின்றனர். ஆனால் அதேசமயம் இவர்களின் இலக்கியம் மற்றும் கலைத்திறனை மார்க்சியரால் மறுக்கவும் முடிவதில்லை. இவர்களிடமிருந்து கலைத்திறன்களை மெல்லமெல்ல மறைவாகவேனும் மார்க்சியர் கற்றுக்கொண்டும் வருகின்றனர். இரு வட்டாரங்களும் நெருங்கி வருவதற்கான சூழல் ஒன்று நேர்ந்திருக்கிறது. ஆகவே பொருளியலும் கலையும் முரண்படுவதாகத் தோன்றும் இந்தப் போக்குக் குறித்து ஆய்வது இன்றையச் சூழலில் மேலும் ஒரு தேவையாகிறது.

இந்தச் சிக்கலை வேறு ஒரு கோணத்திலிருந்து முதலில் பார்க்கலாம். இசை மற்றும் கணிதம் முதலிய கலை மற்றும் அறிவியல்

நுண்ணியக்கம் பொருளியல் சூழலில் இருந்து பெரிதும் விலகி நிற்கிறது. இசை, சிற்பம், ஓவியம் முதலிய கலைகளில் பல்லாண்டுகள் தொடர்ந்து பயில்வதில் தம்மை ஆழ்த்திக்கொண்ட கலைஞர்களைப் பொறுத்தவரை, தாம் வாழும் சமூகத்தின் அரசியல் பொருளியல் முதலிய சிக்கல்களை அறிந்துகொள்வதில்லை, அன்றியும் புரிந்து கொள்ளவில்லை. நுட்பமான கலைத்திறன் ஒன்று தமக்கு வயப்படுவதற்காக, வாழ்வின் பல கூறுகளை இவர்கள் புறக்கணிக் - கின்றனர். இப்படிப் புறக்கணிக்கிறோம் என்பதுகூட அவர்களுக்குத் தெரிவதில்லை. கலை அந்த அளவுக்கு இவர்களைத் தன்வயப்படுத்தி இருக்கிறது. நெடுங்கால வரலாற்றின் வழியே இசை முதலிய கலைகள் இவ்வாறு பல பரிமாணங்களில் வளர்ச்சியடைந்திருக்கின்றன.

கலைஞர்கள் மட்டுமல்லாமல் அறிவியல் அறிஞர்கள் எனப்படுவோரும், அறிவியல் ஆய்வில் தம்மை முழுமையாக இழந்து விடுவதையும் நாம் காண்கிறோம். இத்தகைய இழப்பின் வழியேதான் கலை மற்றும் அறிவியல் திறன்களில் அவர்கள் மேம்பட்டவர்களாகத் திகழ்கின்றனர். இவர்களைப் பொறுத்தவரை கலைதான் தங்கள் வாழ்வு, அறிவியல்தான் தமக்கு வாழ்வு என்ற நிலை ஏற்பட்டு விடுகிறது. கலை அல்லது அறிவியலின் தாக்கத்திற்கு இவர்கள் முழுமையாக வசப்பட்டிருக்கிறார்கள்.

இவர்களைப் பற்றிய குற்றச்சாட்டு என்று நாம் எதைக் கூறமுடியும்? இவர்களின் கலை அல்லது அறிவியல் நமக்குத் தேவையில்லை என்று கூறலாமா? அல்லது சமூகமாற்றம் தேவைப்படுகிற இன்றையச் சூழலில் கலை மற்றும் அறிவியல் ஆய்வை இவர்கள் ஒதுக்கிவிட்டு நம்மோடு சேர்ந்துகொள்ளவேண்டும் என்று கூறலாமா? அல்லது இன்றையச் சூழலில் இவர்கள் ஆய்வு சமூகத்திற்குத் தேவையில்லை; சமூகத்திற்கு இவர்கள் ஒரு சுமை; இவர்கள் முதலாளியச் சமூகத்திற்குத்தான் சேவை செய்கிறார்கள்; உழைக்கும் மக்கள் இவர்களுக்காகவும் கூடுதலாக உழைக்க வேண்டியிருக்கிறது; இவர்கள் ஒட்டுண்ணிகள் - இப்படியெல்லாம் குற்றச்சாட்டுகளைச் சொல்லிவிடலாமா? இப்படியெல்லாம் நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

லெனின் வாழ்விலிருந்து இரண்டு நிகழ்ச்சிகளை இங்கு பார்க்கலாம். பாவ்லோவின் ஆய்வுபற்றி நமக்கு ஓரளவுக்கேனும் தெரியும். நாய்களை வைத்துச் சில ஆய்வுகளை இவர் செய்து கொண்டிருந்தார். நாய்கள் மற்றும் உயிரினங்கள் மட்டுமல்லாமல் மனிதனிடமும் பழக்கவழக்கங்கள் என்பவை எவ்வாறு நரம்பு மண்டலத்தில், மூளையில் பதிவாகின்றன என்பதைக் கண்டறிவதற்காக அவர் இந்த ஆய்வை மேற்கொண்டார். சில பழக்கங்கள், சிந்தனை

சார்ந்த சில உறுதிப்பாடுகள் நமக்குள் என்றோ ஏற்பட்டிருக்கின்றன எப்படி இவை ஏற்பட்டன என்றுகூட இன்று நம்மைப் புரட்டிப் பார்த்து அறிந்துகொள்ள இயலாது. நெடுங்கால வரலாற்றில் இவை உருவாகி இருக்கின்றன. மொழி என்ற வடிவில் இவை நம் மூளையில் பதிவாகி இருக்கின்றன. இந்தப் பதிவை மாற்றிக்கொள்வது என்றால் நாம் பெரிதும் சிரமப்படுகிறோம். குழந்தைகளிடம் எப்படியோ ஏற்பட்டுவிட்ட சில பழக்கவழக்கங்களை மாற்றுவதற்காகப் பெற்றோரும் ஆசிரியரும் முயற்சி செய்வதை இங்கு நினைவு கொள்ளலாம். நமக்குள்ளும் ஏற்பட்டுவிட்ட கடவுள், மற்றும் கடவுள்களின்மீது பற்று முதலியவற்றைக் களைந்து கொள்வதற்காக நாம் என்னென்ன முயற்சிகள் செய்கிறோம் என்பதையும் நினைத்துக் கொள்ளலாம். இப்படி மனிதனைப் புரட்டிப்போடுகிற மாபெரும் ஆய்வில் பாவ்லோ ஈடுபட்டிருந்தார்.

1917-இல் ஏற்பட்ட சோவியத் புரட்சியைப் பாவ்லோ கண்டு கொள்ளவில்லை. குறைந்த அளவு வசதிகளைக் கொண்ட தன் ஆய்வுக் கூடத்தில், தன் ஆய்விலேயே அவர் மூழ்கியிருந்தார். புரட்சி மற்றும் கம்யூனிசம் அவருக்கு உடன்பாடில்லை. தன் கொள்கைகளில் உறுதியானவர் பாவ்லோ. அன்று புரட்சியில் ஈடுபட்டிருந்த போல்ஸ்விக் கட்சியினருக்குப், பாவ்லோவைப் பிடிக்கவில்லை. ஆனால் லெனினைப் பொறுத்தவரை, பாவ்லோ ஆய்வு மனிதகுல வரலாற்றைப் புரிந்து கொள்வதற்கான ஆய்வு என்பதைப் புரிந்துகொண்டிருந்தார். பழங்கால உடைமை மற்றும் ஆதிக்கச் சமூகத்தின் பதிவுகளிலிருந்து மனிதனை எவ்வாறு விடுவிப்பது என்பதற்கான அணுகுமுறை பாவ்லோவின் ஆய்வில் அடங்கியிருந்ததைக் கண்டார். ஆகவே பாவ்லோவிடம் சற்றும் வெறுப்புக் கொள்ளாமல் அவரது ஆய்வுக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் அரசு செய்து தரவேண்டும் என்று அவர் ஏற்பாடு செய்தார். பாவ்லோவுக்கு வியப்பாக இருந்தது. மனித வளர்ச்சியில் பொதுவுடமைக் கோட்பாட்டிற்கு உள்ள பங்கை அவரால் புரிந்துகொள்ள முடிந்தது.

பாவ்லோவை லெனின் புரிந்துகொள்ளவில்லை என்றால் என்ன நேர்ந்திருக்கும்? அதைப்போலவே டால்ஸ்டாயை லெனின் புரிந்துகொண்டு பாராட்டி எழுதவில்லையென்றால் டால்ஸ்டாய்க்கு அன்றும் இன்றும் என்ன மரியாதை கிட்டியிருக்கும்? பௌன்ஸ்கி, இலெரோ, செர்னிசேவ்ஸ்கி முதலியவர்களின் ஆய்வுகளைக் காப்பாற்றி வைத்தவர் லெனின். இலக்கியம் தத்துவம் பற்றி மட்டுமல்லாமல் அறிவியலிலும் லெனினுக்கு இருந்த ஆழமான புரிதல் பற்றியும் இங்கே குறிப்பிடத்தான் வேண்டும். பொருள்முதலியலுக்காக லெனின் போராடினார் என்பது உண்மைதான். அதே சமயம் மெய்யியல்

வகைப்பட்ட கருத்துமுதலியலை லெனினால் புரிந்து கொள்ள முடிந்தது. இயந்திரத்தனமான பொருள்முதலியல்கள் மெய்யியல் வகைப்பட்ட கருத்துமுதலியல்களை வெல்லமுடியாது என்ற லெனின் கூற்றை இன்றையச் சூழலில் நமது சில அணுகுமுறைகளுக்குப் பொருத்திப்பார்ப்பது நல்லது. சிந்தனையின் இயக்கம் என்பது இடப்புறமும் வலப்புறமுமாக விலகி விலகித்தான் பயணம் செய்யும். நேர்கோட்டுப் பயணம் சாத்தியமில்லை. ஓர் எதிர்நிலைக்குச் சென்றவுடன் மேலும் பயணம் சாத்தியமில்லை என்ற நிலையில் அது திரும்பி வலதுகோடு வரை செல்லும். பின்னர் அங்கிருந்து விடுபட்டு எதிர்முனைக்குத் தாவும். இத்தகையதொரு வகையில் தாறுமாறான முறையில்தான் இயக்கம் நடைபெறுகிறது. வலதுசாரிவாதம், இடதுசாரி வாதம் என்பன இப்படித்தான் நிகழ்கின்றன. இவ்வாறெல்லாம் லெனின் விளக்கியிருக்கிறார். எதிர்நிலைகளில் தேங்குவது லெனினுக்கு உடன்பாடில்லை. இயக்கம் தேவை. இயங்கியல் இதைப் புரிந்துகொள்ள முடியும்.

இந்த இயங்கியல் இயக்கம் வரலாற்றுக்கும், சிந்தனைக்கும், மட்டுமல்ல, கலை இயக்கத்திற்கும் பொருந்தும் என்பதை நாம் பார்க்க முடியும். கலைவரலாற்றில் இது நேர்ந்திருக்கிறது. 18-ஆம் நூற்றாண்டில் முதலாளியப் போக்கு ஏற்படுத்திய சீர்குலைவுகளை ஒப்புக்கொள்ளாத பிரெஞ்சுக் கலைஞர்கள், கலையைக் காப்பாற்றும் முறையில், கலை கலைக்காகவே என்று செயல்பட்டதை பிளக்கனோவ் விரிவாக விளக்கி உள்ளார். அதைப்போலப் பொருளியல்தான் வாழ்க்கையை முற்றாக நிர்ணயிக்கிறது என்ற கருத்து இலக்கியத்திற்குள் நுழைந்து இலக்கியத்தை ஆக்கிரமிக்கும் சூழலில் கலைக்கு முதன்மை தரும்போக்கு எழுவதில் வியப்பில்லை. தமிழகச் சூழலிலும் இத்தகைய போக்கு நேர்ந்தது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். தமிழ் இலக்கிய ஆய்வு மற்றும் படைப்புக்குள் மார்க்சிய நுழைவை இலக்கியவாதிகள் முதலில் எதிர்த்தனர் என்பதை இங்கு சேர்த்துக் கொள்ளலாம். இந்த இருவகைப் போக்குகளுக்குள்ளும் எதிர்நிலைகள் சற்றுத் தீவிரம் குறைந்த நிலையிலும் இன்றும் செயல்படுவதை நாம் பார்க்கிறோம்.

லெனின் வாழ்க்கையில் இன்னொரு நிகழ்ச்சி:- கடுமையான அரசியல் சிக்கல்களில் லெனின் ஈடுபட்டிருந்த ஒரு சமயம் குரூப்ஸ்கயா மாஸ்கோவில் புகழ்பெற்ற அரங்கில் நடைபெற்ற பீத்தோவனின் இசை நிகழ்ச்சிக்கு அவரை அழைத்துச் சென்றார். பீத்தோவனின் இசைக்கு வசப்படாதவர் யாரும் இருக்கமுடியாது. லெனினையும் இந்த இசை வசப்படுத்தத் தொடங்கிய ஒரு கணத்தில் லெனின் தன் இருக்கையை விட்டு எழுந்தார். "இந்த இசைக்கு என்னை இழந்துவிட

முடியாது, எனக்கு வேலைகள் இருக்கின்றன" என்று கூறிப்புறப்பட்டு விட்டார். உண்மையில் லெனின் போன்ற தீவிரமான, நுண்ணுணர்வு கொண்டவர்களைத்தான் இத்தகைய இசை தீவிரமாகப் பாதிக்கும். உழைப்பவர்களுக்குத் தான் ஓய்வு இன்பம் தரும். உழைப்பில்லாமல் படுக்கையில் புரள்பவர்களுக்கு இசை முதலிய நுண்கலைகள் தேவையில்லை என்றும் நாம் பார்க்க முடியும். புரட்சியாளர்கள் நுண்ணுணர்வுடையவர்களாக இருக்கத்தான் வேண்டும். பீத்தோவன் இசையில் லெனின் முழுவதும் தோய்ந்திருப்பார் என்றால் லெனினுக்கு ஏதாவது இழப்பு நேர்ந்திருக்குமா? நேர்ந்திருக்க முடியாது.

மாயகோவஸ்கியின் புதுவகைக் கவிதையை லெனின் முதலில் ரசிக்கவில்லை. ஆனால் புரட்சிக்குப் பின்னர் ஒரு பள்ளியைப் பார்வையிடச் சென்றபோது மாயாகோவஸ்கியின் கவிதைகளைக் குழந்தைகள் உற்சாகமாகப் பாடியதுகேட்டு மனம் சிலிர்த்தார். பத்தாயிரக்கணக்கில் அந்தக் கவிதைகளை அச்சிட்டுவழங்க லெனின் ஏற்பாடு செய்தார். பீத்தோவனின் இசைக்கு வசப்பட லெனின் மறுத்ததிலிருந்து அவரிடமும் அரசியல் உணர்வு ஆதிக்கம் பெற்றிருந்ததைத் தான் நாம் புரிந்து கொள்கிறோம். அல்லது அரசியல் உணர்வும் கலை உணர்வும் லெனினுக்குள் நடத்திய மோதலைப் புரிந்து கொள்கிறோம். தான் வசப்பட விரும்பாத பீத்தோவனின் இசையை லெனின் தடை செய்திருக்கவும் முடியாது. இத்தகைய முரண்பாடு மாவோவிடம் அறவே இல்லை என்பதையும் இங்கு நாம் குறிப்பிடலாம். மெய்யியலை மட்டுமல்லாமல் கவிதை ஆக்கத்திலும் அவரது மேதைமையை நாம் ஏற்க முடியும். பண்டைய இலக்கியங்களில் அவர் என்றும் மனம் தோய்ந்திருந்தார்.

இசை முதலிய கலைகளை அவற்றின் ஆழத்தோடு மார்க்சியர் புரிந்துகொள்வதில்லை. புரிந்து கொள்ளாததற்கு முதன்மையான காரணம்பற்றி இங்கு ஆராயலாம். இவர்கள் கருத்துப்படி கலைஞர்கள் சமூகமாற்றம் குறித்துச் சிந்திப்பதில்லை. ஆனால் இவர்களுக்காகச் சமூகம் உழைக்கவேண்டியிருக்கிறது. கலைஞர்கள் சுகமாக வாழ்வதற்காக மக்கள் துயரப்படவேண்டியிருக்கிறது. கலைஞர்களுக்குப் பூர்வீகச் சொத்து அநேகமாக இல்லை, அல்லது இவர்கள் வாழ்வுக்குத் தேவையான பொருள்வளம் எங்கிருந்து எடுக்கப்படுகிறது, யாரால் எதன் தேவைக்காகத் தங்களுக்குத் தரப்படுகிறது என்பதைப் பற்றி இவர்களுக்கு அறிவு இல்லை, அக்கறையில்லை. மக்கள் துயரத்திற்கு எந்தவகையிலும் தாங்கள் காரணம் இல்லை என்றும் இவர்கள் கருதுகிறார்கள் அல்லது ஏதோ ஒருவகையில் தமக்கான தேவைகள் நிறைவேறும் வழியில் மக்கள் துயரத்திற்குத் தாமும் காரணமாக இருக்கிறோம் என்ற உணர்வு அவர்களுக்குள் ஏற்பட்டாலும் அதை

அவர்கள் பொருட்படுத்துவதில்லை. தமக்குள் ஏற்படும் குற்ற உணர்வை ஒதுக்கிவைத்து விட்டு இவர்கள் வாழ்கிறார்கள். வறுமைத் துன்பம் தங்களைத் தாக்கினாலும் அதை அவர்கள் கூடுமானவரை பொருட்படுத்துவதில்லை. பொருட்படுத்த நேர்ந்தபோதிலும் மக்களோடு, பாட்டாளிகளோடு இணைந்துகொள்வதில்லை. மிக மிக அரிதாகச் சிலர் இணைகின்றனர் என்ற போதிலும் பாட்டாளி வர்க்கச் சார்பு நிலை எடுப்பதில்லை, மார்க்சியத்தை ஏற்பதில்லை.

இப்படி மார்க்சியர் கலைஞர்களைக் குற்றம் சாட்டுகின்றனர். கலைஞர்களிடம் இந்தக் குற்றச்சாட்டிற்கான ஆதாரம் மிகச் சிறிய அளவிற்கே இருக்கின்றது. உண்மையில் முதலாளியச் சமூக அமைப்புத் தான் இப்படி மனிதர்களைப் பிளவுபடுத்தி வைத்திருக்கிறது. இதற்குள் கலைஞர்களும் அகப்பட்டு இருக்கின்றனர். உழைக்கும் மக்களிடமிருந்து உபரிமதிப்பைச் சுரண்டுவதன் மூலம் தன்னை நிலைநிறுத்திக்கொள்ளும் முதலாளியம் கலைஞர்களுக்குச் சற்றுக் கூடுதலாகத் தருகிறது. தொழிலாளர் போராட்டங்களைச் சமூகவளர்ச்சிக்கு எதிரானவை எனச் சித்திரிக்கிறது. மக்களுக்குக் கல்வியறிவு போதாது, கலைத்திறன்கள் இல்லை என்றெல்லாம் முதலாளியம் சொல்லுகிறது. மக்களுக்குத் தேவையான கல்வி முதலிய வாய்ப்புகளை மறுத்துவிடுகிற முதலாளியம் தான், மக்களுக்குக் கலை உணர்வு குறைவு என்று பேசுகிறது. கலைஞர்களும் முதலாளியத்தின் கூற்றுகளைத் தமக்குச் சாதகமானவை என ஏற்றுக்கொள்கின்றனர். மக்களுக்கும் கலைஞர்களுக்கும் இடையிலான பிளவு என்பது இன்று நேற்று ஏற்பட்டதல்ல. நெடுங்காலமாக இருந்துவரும் பிளவு இது. கலைஞர்களை மக்களிடமிருந்து பிரித்து வைப்பது ஒருவகையில் முதலாளியத்திற்கு வெற்றி.

கலைஞர்களுக்கு வாழ்வில் துயரங்கள் இல்லாமல் இல்லை. கலைஞர்கள் தனிப்பிறவிகளும் அல்லர். மக்களோடு தான் இவர்களும் வாழ்கிறார்கள். குடும்பத்தில் குழந்தைகளோடு உறவுகளோடு வாழ்கிறார்கள். சமூகத்திலுள்ள அனைத்துச் சிக்கல்களும் நெருக்கடிகளும் இவர்களையும் தாக்கத்தான் செய்கின்றன. முற்றான கலையியல் வாழ்வும் இவர்களுக்குச் சாத்தியம் இல்லாமல் போகிறது. இவர்கள் வாழ்வுக்குள்ளும் பணம் அதிகாரம் செய்கிறது. இவற்றையெல்லாம் மறந்துவிட்டுக் கலையில் அவர்கள் ஆழ்ந்துவிட முடியாது. சில சமயம் பணமோ, செல்வாக்கோ கூடுதலாக வந்தபோதிலும் அவை நிலைத்திருப்பதில்லை. உறவு நெருக்கடிகள் அவர்களையும் பாதிக்கின்றன. வாழ்வியல் துன்பங்கள்-நோய்நொடிகள் முதலியவை அவர்களைப் பாதிக்கின்றன. உலகியல் சூழலிலிருந்து அவர்களால் தப்ப முடியாது. கலை அவர்களுக்கு முற்றான பாதுகாப்பைத் தருவதும் இல்லை.

வாழ்வியல் நெருக்கடிகள், இவர்களைக் கடுமையாகத் தாக்கும் நிலையில்தான் பக்திக்குள் தம்மை மூழ்கடித்துக் கொள்கிறார்கள். சமூகத்தைப் பாதிக்கும் துன்பங்கள்தான் இவர்களது பாடல்களின் வழியாக வெளிப்படுகின்றன. சமூகத்திலிருந்து தன்னைப் பிரித்துக் கொண்டு கலைத்துறையில் மட்டும் தன் மேன்மையை ஒரு கலைஞன் காண்பதும் சாத்தியமில்லை. வரலாற்றின் வழியே தொடரும் கலையியல் முதலிய ஆற்றல்களை அதிக அளவில் சேகரித்துக் கொண்டவன்தான் பெருங்கலைஞன். சமூகத்தின் ஆற்றல்கள் மட்டுமல்லாமல் அவலங்களையும் அதிக அளவில் உள்வாங்கிக் கொள்பவனே பெருங்கலைஞன். துயரங்கள்தான் ஒருவனைச் செதுக்கிச் சிற்பமாக்குகிறது கலைஞனாக்குகிறது. துயரங்களில் தன்னைப் புடமிட்டுக் கொண்டவன்தான் தனக்குள் சுடர்விடுகிறான். சடையப்பனின் சோற்றுச் செருக்கல்லவா கம்பனைக் காவியம் பாட வைத்தது என்ற மார்க்சியரின் கூற்று உண்மையல்ல, மார்க்சியத்துக்கும் ஒத்ததல்ல. ஓய்வு அதிகம் கிடைக்கிறது என்பதினால் ஒருவர் காவியம் பாட முடியாது. நெஞ்சில் மூண்டிருக்கும் கனலில் தான் காவியங்கள் எழுதமுடியும். ஓய்வும் தேவைதான் என்பதை மறுப்பதற்கில்லை. நெஞ்சக் கனலைக் குளிரவைத்துக் காவியமாகச் சமைப்பதற்கு ஓய்வு தேவை. தவிர, கலைஞனிடம் வெளிப்படும் கலை உணர்வு என்பவை வரலாற்றின் வழியே மனிதருக்குள் சேர்ந்தவை. சாதாரண மக்கள் எனப்படுபவருள்ளும் கலை உணர்வுகள் பொங்கி ஊற்றெடுப்பதை நாம் பார்க்கிறோம். மிகச் சிறந்த இலக்கியங்கள் என்பனவற்றுள்ளும் நாட்டார் கலை உணர்வுகளே மேலும் செழித்திருப்பதைக் காண்கிறோம்.

இதிலிருந்து நாம் என்ன புரிந்துகொள்கிறோம்? கலைஞர்களை முதலாளியச் சார்பில் வைத்துப் பார்க்கும் பார்வை தவறான பார்வை. முதலாளிகளை நோக்கிக் கலைஞர்களைத் தள்ளும் பார்வை. முதலாளிகள் கலைஞர்களை ஆதரிப்பதாகப் போக்குக் காட்டுவது ஒரு பொய்த்தோற்றம். முதலாளிகளுக்கு ஆர்ப்பாட்டங்கள் தேவைப்படலாம்; அதிர்வுகளும், ஆரவாரங்களும் தேவைப்படலாம். தன் வருமானத்தை மறைத்துக் கொள்வதற்கு இந்த ஆரவாரங்கள் பயன்படலாம். சில கலைஞர்கள் முதலாளிகளிடம் மாட்டிக்கொண்டும் இருக்கலாம். பரிசுகள் வழங்கித் தம் கூடாரங்களில் ஒருசிலரைச் சிறைப்படுத்திக் கொள்ளவும் செய்யலாம். இத்தகைய கலைஞர்களிடம் நாளடைவில் கலை ஊற்றுவற்றிவிடும். தொழில் திறன்களை நாம் கலை என்று மதிக்கமுடியாது. உண்மையான கலைஞனுக்கு வாழ்வியல் பற்றிய தரிசனம் தேவை. இத்தகைய கலைஞன் முதலாளிக்கோ அரசாங்கத்திற்கோ சேவை செய்ய மாட்டான். பணத்தையும் பரிசையும் தேடி அலைய மாட்டான். கலையை இவர்கள் வணிகப் பொருளாக மாற்ற முடியாது.

தமிழகச் சூழலில் மார்க்சியர் செய்த தவறுகள் ஒன்று இரண்டு அல்ல. பல, மிகப்பல! மௌனியை மட்டுமல்லாமல் தி. ஜானகிராமன், லா.ச.ரா, சுந்தரராமசாமி, அசோகமித்திரன், நகுலன் முதலிய கலைஞர்களை எதிரி வர்க்கத்தோடு வைத்து மார்க்சியர் காண்கின்றனர். புதுக்கவிஞர்கள் என்பவர்களை இவர்கள் எதிரிவர்க்கத்தோடு வைத்துப் பார்த்ததிலும் வியப்பில்லை. கம்பனுக்குள் செயல்படும் சமூக ஆற்றல்களை அவர்கள் எங்கே கண்டார்கள்? வள்ளுவரையும் இளங்கோவையும் எப்படி மதித்தார்கள்? சங்க இலக்கியம் இவர்கள் பார்வையில் என்னவாயிற்று? தமிழ் இசையை இவர்கள் ஏன்போற்ற வில்லை? நாட்டார் கலைகளை இவர்கள் கண்டு போற்றியது உண்மைதான். உழைக்கும் மக்களோடு தம் உறவுகளை வலுப்படுத்திக் கொள்ளும் அரசியல் தேவைகளுக்காக இவர்கள் நாட்டார் கலைகளை மதித்தார்கள் என்பதும், கலைவளர்ச்சி என்பதும் அடிப்படைகளோடு நின்றுவிடுவதில்லை. மேலும் மேலும் பல கட்டங்களில், தளங்களில் வளர்ச்சி நடைபெறுகிறது. சமூக வளர்ச்சியில் ஆளும் வர்க்கத்திற்குப் பங்கு இருக்கிறது என்று வைத்துக் கொண்டாலும் பெரும்பான்மையான உழைக்கும் வர்க்கத்தின் ஒத்துழைப்பில்லாமல் சமூக வளர்ச்சி சாத்தியமில்லை. உழைக்கும் வர்க்கத்தை முற்றாக முடக்கிப்போட்டு விட்டு ஆளும் வர்க்கம் வாழ்வதும் சாத்தியமில்லை. அதிகாரம் செய்து மக்களின் படைப்பியக்கத்தைத் தூண்ட முடியாது.

ஆளும் வர்க்கச் சார்புடைய கலைஞர்கள் என்று அறியப்படுபவர்களின் படைப்பினுள் தேடிப்பார்த்தால் மக்கட் சார்பு இல்லாமல் இல்லை. ஆளும்வர்க்கம் விதிக்கும் வரையறைகளையும் மீறிக்கொண்டு, உடைத்துக்கொண்டு கலைஞர்களின் படைப்பியக்கம் செயல்படுவதை நாம் காணமுடியும். வர்க்கப் போராட்டம் என்பது கலைஞர்களுக்குள்ளும் நடைபெறுகிறது. அறிவுசார்ந்த புரிதல் என்ற முறையில் அவர்களிடம் ஆளும் வர்க்கச் சார்பு தெரிகிறது என்றே வைத்துக் கொண்டாலும் அது மேல்தளத்தில் தென்படும் தோற்றம் தான். அதைக்கடந்து உள்ளே பார்க்கும்பொழுது அவர்களின் மக்கட்சார்பை நம்மால் புரிந்துகொள்ள முடியும். இது அவர்களின் உணர்வுத் தளத்தில் செயல்படுகிறது. இந்தத் தளத்தின் ஆற்றல்தான் எப்பொழுதுமே அதிகம்.

வர்க்கச் சமூகத்தின் அங்கம் என்ற முறையில் மார்க்சியராகிய நாமும் இந்த வர்க்கச் சமூகத்தின் உற்பத்தியோடும், அதிகாரத்தோடும் தொடர்பு கொண்டிருக்கிறோம். தொழிலாளர்கள் எனப்படுவோர் உழவர்களையும், தலித் மக்களையும் பெண்களையும் சுரண்டுவதில் முதலாளிகளோடு சேர்ந்திருக்கிறார்கள். படிப்பாளிகள் முதலாளியச் சமூகம் தரும் சில வசதிவாய்ப்புக்களைக் கூடுதலாகப் பெறுகிறார்கள்.

முதலாளியச் சமூகத்தின் சுரண்டலும் ஒடுக்குமுறையும் நம் மூலமும் நடைபெறுகிறது என்பதைப் புரிந்துகொள்வதற்கு மார்க்சியம் நமக்கு உதவுகிறது. முதலாளிகள் மட்டுமே சுரண்டல் முதலிய ஆதிக்கங்களைச் செயல்படுத்துகிறார்கள் என்பது ஒருபக்கச் சார்பான உண்மை. நம் ஒத்துழைப்பில்லாமல் முதலாளியம் நிற்க முடியாது. நமக்குள்ளும் முதலாளியக் கூறுகள் செயல்படுகின்றன. நம் திறன்களை முடமாக்குவதில் முதலாளியத்திற்குப் பங்கு இருக்கிறது. நம் ஆர்வங்களை முடமாக்குவதோடு நம் வாழ்வுக்கான திசைகளை மாற்றுவதில் முதலாளியம் வெற்றிபெற்றிருக்கிறது. இந்த வரலாற்றுச் சூழலில் மார்க்சியம் அறிந்த நாமும் மாட்டிக்கொண்டுதான் இருக்கிறோம். முதலாளி மட்டுமே முழு அளவில் ஆதிக்கத்தைச் செலுத்துகிறான் என்பது கூட உண்மை இல்லை. அவனும் அச்சத்தோடுதான் வாழ்கிறான். தனக்குப் பாதுகாப்பு இல்லை என்பதை உணர்ந்தும் இருக்கிறான். தன் அதிகாரத்தை எல்லாச் சூழல்களிலும் தக்க வைத்துக்கொள்ள முடியாது என்பதும் அவனுக்குத் தெரியும். வெறித்தனத்திலும் போதையிலும் தன்னைச் சிதறடித்துக் கொள்கிறான். எத்தனையோ சதிகள், கேவலங்கள் முதலியவற்றையும் செய்துதான் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளமுடியும் என்பதை உணர்கிறான். அவனுக்குள்ளும் ஓர் ஆன்மா குறைந்த அளவுக்கேனும் துடிக்கத்தான் செய்கிறது. அவனுக்கும் தான் விடுதலை வேண்டும். செல்வச் செருக்கும் ஆணவமும் அவன் கண்களை எப்போதும் மறைக்க முடியாது. தியானம் முதலிய செயல்முறைகள் அவனுக்கு முற்றான விடுதலைக்கு வழிதிறப்பதில்லை. வன்முறை வடிவில் வரும் விடுதலையை அவன் விரும்பவில்லை. இசை முதலிய உயர் இன்பங்கள் அவனுக்கு இல்லை. ஒரு மார்க்சியன்தான், முதலாளியும் இந்தச் சமூக அமைப்பு என்பதினுள் மாட்டிக்கொண்டிருக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். சுதந்திரம் பிரிவுபடாதது என்ற மார்க்சின் கூற்று இங்குதான் பொருள் நிறைவுடையதாகிறது. தொழிலாளி தனக்கு விடுதலை வேண்டும் என்றால் முதலாளிக்கும் சேர்த்தே போராட வேண்டும் என்பது மார்க்சின் கருத்து.

வர்க்கச் சமூகச் சூழலில் நமக்குள்ளும் இருக்கிற வர்க்க முரண்பாட்டை நம்மால் இப்படிப் புரிந்துகொள்ள இயலுமானால் நம்மிலிருந்து கலைஞர்களை வேறுபடுத்திப் பார்க்க இயலாது. ஆகவே இலக்கியப் படைப்புக்கள் முதலியவற்றை நமக்குள்ளும் வைத்துப் பார்க்க நாம் தெரிந்து கொள்ள வேண்டும். இலக்கிய வாசிப்பு என்பது இந்தத் தளத்தில் நமக்குள் செயல்படவேண்டும். இலக்கியவாதி, நம்மை நாமே புரிந்துகொள்ளும் முறையில் ஏதாவது நமக்குத் தரமுடியும். நெருக்கடி மிக்க சமூகச் சூழலில் பல சந்தர்ப்பங்களில் நம்மை நாமே இழந்து விடுகிறோம். நிதானமான

இலக்கிய வாசிப்பின்போது நம்மைநாமே திரும்பப் பெறும் முறையிலும் புறநிலையில் நின்று நம்மை நாமே வாசித்துக் கொள்வதற்கும் இலக்கியவாசிப்பு நமக்கு உதவ முடியும். மேல்தளத்திற்கு வராமல் நமக்குள் உறைந்திருக்கும் மௌனங்களை இலக்கிய வாசிப்பு நமக்குள் வெளிப்படுத்த முடியும். சமூகவாழ்வில் நமக்கு ஏற்பட்டுள்ள இறுக்கங்களைத் தளர்த்திக்கொள்ள இலக்கியம் நமக்கு உதவும். ஆழ்ந்து வாசிக்க இயலுமானால் நெடுங்கால வரலாற்றினுள் நாம் இருப்பதை, இயங்குவதை நாம் காணலாம். நமக்குள் தெய்வங்களும், பிசாசுகளும் இருந்து போராடுகின்றன. நமக்குள் கோவலனும் இருக்கிறான். பாண்டியனும் இருக்கத் தான் செய்கிறான். கண்ணகிக்கு நாம் தவறிழைக்கிறோம். மாதவிக்கும் துரோகம் செய்கிறோம்.

## 2

மார்க்சியரைப் பொறுத்தவரை அவர்களுக்குப் பொருளியல் அடிப்படையிலான சமூகப் பார்வை, அழுத்தமாக இருக்கிறது. ஆனால் வாழ்வியல் பார்வை அறவே இல்லை அல்லது மிகக் குறைவாகவே இருக்கிறது. கட்சிக்குள் செயல்படும் ஊழியர்கள் முழு அளவில் கட்சிக் கண்ணோட்டத்திலேயே செயல்படுகின்றனர். வாழ்க்கைத் தேவைகள் அவர்களைப் பொறுத்தவரை மிகக் குறைந்த அளவிலேயே வைத்துக் கொள்கிறார்கள். ஆடம்பர வாழ்க்கை அவர்களிடம் இல்லை. நல்ல உணவு கூட அவர்கள் சுவைத்து உண்ண மாட்டார்கள், காலம் நேரம் என்று அவர்கள் கருதுவது இல்லை. கட்சி அரசியலை முன்னெடுத்துச் செல்வதுதான் அவர்களின் ஒரே நோக்கம். ஒருவகையில் கட்சியின் தேவைக்காகத் தம் வாழ்க்கையைத் தியாகம் செய்து கொண்டிருக்கிறார்கள். தோழமை என்பது இவர்களுக்குப் போதும். நண்பர்கள் உறவினர்கள் எனத் தெளிவாக இவர்களால் வைத்துக் கொள்ள இயலாது. திருமண வாழ்க்கை என்பது இவர்களுக்கு ஒரு கடுமையான சிக்கல்தான். மணவாழ்க்கையில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளும்பொழுது, மனைவி கட்சி சார்ந்தவள் என்ற போதிலும், குழந்தைப் பேற்றை அடுத்துச் சிக்கல்கள் எழுகின்றன. தனக்கொரு வீடுவேண்டும். குழந்தையின் எதிர்காலத்திற்காகச் சேமிக்கவேண்டும். கட்சிப்பணியில் இது சாத்தியமில்லை. இந்நிலையில் குழந்தைபெற்றுக் கொள்ளாமல் கட்சிப் பணியிலேயே இருவரும் முழுநேரம் ஈடுபடவேண்டும். புரட்சி முன்னேறிச் செல்லும்பொழுது இத்தகைய வாழ்வுக்குக் கூடுதலான சாத்தியங்கள் ஏற்படுகின்றன. அரசதிகாரத்தில் அமர்ந்து கொள்வது தான் தங்கள் நோக்கம் என்றமுறையில் செயல்படுகிற மார்க்சியக் கட்சி சார்ந்தவர்களைப் பொறுத்தவரை இத்தகைய சிக்கல்கள்

இல்லை. கட்சிப் பணியில் அவ்வப்பொழுது ஈடுபட்டுவிட்டுக் குடும்பத்திற்குள் அவர்கள் வந்துவிடலாம். முதலாளியக் குடும்ப நடைமுறையிலிருந்து இவர்களின் குடும்ப வாழ்க்கையை வேறுபடுத்திச் சொல்வதற்கில்லை. பெண்களைப் பற்றியோ, குழந்தைகளைப் பற்றியோ இவர்களுக்கு வித்தியாசமான கருத்துக்கள் இல்லை. பெருமளவுக்கு வருமானம் இல்லாத நிலையில் இவர்களின் வாழ்க்கையில் எளிமையைக் கடைப்பிடிக்கிறார்கள். முதலாளியச் சமூகத்தின் நுகர்வியம் இவர்களை விட்டு வைப்பதில்லை. மார்க்சியருக்கெனத் தனித்த வாழ்வியல் கண்ணோட்டம் என ஒன்றை இவர்கள் கண்டறியாத நிலையில், முதலாளியச் சமூகத்தின் பகுதியாகவே இவர்கள் செயல்படுகிறார்கள்.

புரட்சிகர இயக்கம் சார்ந்தவர்கள் முன்பெல்லாம் "கம்யூன்" என்ற முறையைக் கடைப்பிடித்ததாக அறிகிறோம். கட்சி ஊழியர்கள் பலர் ஓரிடத்தில் கூடி வாழ்வது, சமையல் முதலிய வேலைகளில் மாறி மாறி ஈடுபடுவது, வெவ்வேறு பணிகளில் ஈடுபட்டிருந்தபொழுதிலும் தம் வருமானத்தைப் பொதுவாக வைத்து உணவு முதலிய தேவைகளைப் பொதுவாக நிறைவேற்றிக் கொள்வது என்ற முறையில் அவர்கள் வாழ்ந்ததாகச் சொல்கிறார்கள். புரட்சிகர இயக்கத்தினர் கிராமப்புறங்களில் மக்கள் மத்தியில் பணிபுரியும் பொழுது உழவு முதலிய செயல்களில் இவர்களும் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள்; குடிசைகளில் வாழ்கிறார்கள். அவர்களுள் ஒருவராகவே தம்மை மாற்றிக் கொள்கிறார்கள். மக்களின் அன்றாடச் செயல்பாடுகளில் இணைந்து கொள்கிறார்கள். இதன்மூலம் மக்களைக் கற்பிக்கிறார்கள். மக்களிடமிருந்து கற்றுக்கொள்கிறார்கள். இவர்கள் வாழ்க்கையில் வைத்துத் தம் அரசியல் புரிதலை உரைத்துப் பார்த்துக் கொள்கிறார்கள். மக்களின் நம்பிக்கையைப் பெறுகிறார்கள். மக்களைப் போராடத் தூண்டுகிறார்கள். எதிரிகளால் தமக்கு ஏற்படும் துன்பங்களை ஏற்றுக் கொள்கிறார்கள். மக்களின் அன்பு என்பதை இவர்கள் புரிந்து கொள்கிறார்கள்.

கட்சி வாழ்க்கை என்பது ஒரு வகையில் துறவு வாழ்க்கை, பழங்காலத்தில் துறவிகள் வாழ்வை இரண்டாகப் பிரித்துப் பார்த்தனர். துறவறம் என்பதும் இல்லறம் என்பதும் அவர்கள் செய்துகொண்ட பிரிவினை. துறவிக்குச் சில இன்பங்கள் கூடாது. இல்லற வாழ்வுக்குச் சில ஒழுக்க நெறிகள் தேவை. துறவி புலால் உண்ணக் கூடாது; பொருள் சேகரிக்கக் கூடாது; பெண்ணோடு உடலுறவு கூடாது. இவை பொதுப்படையான நெறிகள். இந்த நெறிகள் எல்லாச் சமயங்களிலும் ஒன்றுபோலக் கடைப்பிடிக்கப்படவில்லை. அரசோடு, உடைமையாளர்களோடு தொடர்பு ஏற்பட்ட பொழுது துறவிகள் கெட்டுப் போனார்கள். துறவிகள் எனப்படுவோர் மொழியோடு,

இலக்கண இலக்கியங்களோடு, கல்வியோடு, கலைகள் சிலவற்றோடு ஆழ்ந்த உறவு கொண்டிருந்தனர். பிறப்பிலிருந்து விடுதலை என்றும் அவர்கள் தம் கொள்கையைப் படைத்துக் கொண்டனர். பிறவிகூடாது இறைவனோடு ஐக்கியப்பட வேண்டும். உடலியல் பற்றுக்களிலிருந்து விடுதலை தேவை.

இல்லறத்தார் சில ஒழுக்கநெறிகளை விடாது கடைப்பிடிப்பதன் மூலம் வாழ்வியல் துன்பங்களைக் குறைத்துக் கொள்ள முடியும். அவர்களும் திருட்டு கொலை முதலிய தீயசெயல்களில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளக்கூடாது. ஒருத்தியோடு வாழவேண்டும் உடலின்பங்களைக் குறைந்த அளவுக்கு வைத்துக் கொள்ளவேண்டும். செல்வம் நிலைப்பதில்லை, இளமை நிலைப்பதில்லை, வாழ்வு நிலைப்பதில்லை. ஆகவே வாய்ப்பு நேரும் பொழுதெல்லாம் அறச்செயல்களைச் செய்துகொள்ள வேண்டும். துறவிகளைப் பாதுகாத்தல்; யாசிப்பவர்களுக்கு உணவு இடுதல்; ஊனமுற்றோர்களுக்கு உதவுதல் முதலியவை அறச்செயல்கள். இவற்றின் மூலம் தம் உயிரை / ஆன்மாவைத் தூய்மையாக வைத்துக் கொள்ளலாம். மறுபிறப்பில் துறவியாகித் தவம் மேற்கொண்டு, அப்புறம் இறைவனை அடையலாம். பிறப்பில்லாத பேரின்பம் வாய்க்கும்.

இவ்வாறு சமயவாதிகள் அறம் வகுத்தனர். அரசு என்பதும் உடைமை என்பதும் இவர்களால் சமாளிக்க இயலாத சிக்கல்களாகவே இருந்தன. நகர வாழ்க்கையைத் துறவிகள் விரும்பவில்லை; காடு மலைகளுக்குச் சென்று அமைதியான வாழ்க்கையை மேற்கொண்டனர். பிறவியே துன்பம் என்ற அலைக்கழிப்போடு அவர்கள் இருந்தனர். உடல் தன் தேவைக்காகத் துறவியைக் கெஞ்சத்தான் செய்யும், துன்புறுத்தவும் செய்யும். உடலியல் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகத் துறவியும் கள்ளத்தனங்களில் ஈடுபட நேரிடும். எனினும் கல்வி இன்பம், இயற்கை இன்பம், தவம் செய்வதில் இன்பம் முதலியவை துறவியைப் பொறுத்தவரை கூடுதலான இன்பங்கள்

பிரம்மம் என்று அத்வைதிகள் பேசினார்கள். இவர்களின் பிரம்மம் குணங்கள் அற்ற பிரம்மம். நிர்குண பிரம்மம். தியானத்தின் போது மட்டுமே தரிசனம் தரும் பிரம்மம். இந்த பிரம்மத்தோடு வாழமுடியாது. பிரம்மவாதிகளுக்கு உலகம் இல்லை. உலகியல் இல்லை. உலகியலை ஒதுக்கிவிட்டும் நிற்க முடியாது. ஆகவே உலகம் முதலியவற்றை மாயை என்று இவர்கள் கூறினார்கள். மாயை இவர்களுக்குப் பாதுகாப்புத் தர முடியாது. இன்பம் தர முடியாது. ஆகவேதான் அத்வைதிகளை மறுத்துச் சமயவாதிகள் ஈஸ்வரன் என்றும் விஷ்ணு என்றும் பேசினர். இவர்களின் இறைவனுக்கு

உருவம் உண்டு, பெயர்கள் உண்டு. இந்த இறைவன் மக்களோடு கலந்தவன். மக்களுக்கு அருள் செய்பவன். மக்களின் திருமணம் மற்றும் பொருளியல் வாழ்வை அருள்பவன். வாழ்வியலை இந்த இறைவன் ஏற்றுக் கொள்கிறான்; வாழ்வின் வழியேதான் தன்னை அடைய முடியும் என்கிறான். இதற்காகவும் சில ஒழுக்க நெறிகள் உண்டு. சில சமயம் இந்த இறைவன் எதிரிகளோடு போர் செய்யத் தூண்டுகிறான்; அரசு அமைக்கச் சொல்கிறான். அதேசமயம் உடைமையோடு ஒன்றிவிட வேண்டாம் என்றும் சொல்கிறான்.

சமயங்கள் மற்றும் துறவிகள் வழியே வாழ்வியல் பற்றி நாம் தெரிந்து கொள்வது என்ன? மனிதனுக்கு உலகம், உடைமை, அரசு முதலியவைகள் இல்லாமல் முடியாது. மனிதவாழ்க்கை, குழந்தைப்பேறு, உழவு, வணிகம் முதலிய தொழில்கள் இல்லாமல் முடியாது. இவற்றோடு முற்றாக ஒட்டிக் கொள்வதும் கூடாது. தன் உடம்பை மனிதன் வெற்றிகொள்ளவேண்டும். உடைமைப் பற்றையும் வெற்றிகொள்ள வேண்டும். அரசு அதிகாரத்தில் தன்னை இழந்துவிடக் கூடாது. உடலும் உடைமையும் மனிதனைக் கடுமையாகப் பற்றிக்கொள்ளவும் செய்கின்றன; மனிதனைக் கெடுக்கின்றன. இந்நிலையில் என்ன செய்வது?

இந்நிலையில்தான் மதம் முதலிய சிந்தனைப் போக்கில் இரண்டு எதிர்நிலைகள் தோன்றின. உடம்பு, உடை, உடைமை முதலிய எல்லாவற்றையும் முற்றாகத் துறக்கவேண்டும் என்பது ஒரு நெறி. முற்றாகத் துய்க்க வேண்டும் என்பது ஒரு நெறி. இவை இரண்டும் சிறுபான்மை நெறிகள். இவற்றிற்கிடையில் ஒரு சமநிலை காணவேண்டும் என்பது பெரும்பான்மை நெறி. புத்தர் முன்வைத்த நெறி இத்தகைய சமநிலைநெறி. இரு எதிர் நிலைகளிலிருந்தும் விலகி எந்த விகிதத்தில் சமநிலையை மேற்கொள்வது என்பது இன்றுவரை ஓர் இடையறாத சிக்கல்தான்.

இப்பொழுது இதேவகையான சிக்கல் மார்க்சியனுக்கும் இருக்கிறது என்பதை நாம் காணமுடியும். புரட்சிகர இயக்கத்தினுள் பணியாற்றுகிறவர் தமக்கென உடைமை முதலியவற்றை வைத்துக் கொள்வதில்லை. ஒருவகையில் இவர்கள் துறவிகள் போலத்தான் என்று சொல்லலாம். இவர்கள் கட்சிக்கு வெளியில் உள்ள பெரும்பான்மையான மக்களுக்கு எத்தகைய வாழ்வை வரையறை செய்கிறார்கள்? முதலாளிகளின் வாழ்க்கை இவர்களுக்கு முற்றாக உடன்பாடில்லை. மக்கள் என்ற தொகுதியில் உள்ளடங்கக் கூடியவர்கள் வாழ்க்கை எப்படியிருக்க வேண்டும்? எதிர்காலத்தில் உடைமையோ அரசோ கூடாது என்று இவர்கள் கூறுகிறார்கள். குடும்பம் என்ற

அமைப்புப்பற்றி இவர்களுக்குத் தீவிரமான கருத்து இல்லை. உலகியல் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதைப் பொறுத்தவரை இவர்களுக்கு மறுப்பில்லை. உற்பத்தி பெருகப் பெருக வாழ்வியல் தேவைகளைக் கூடுதல் ஆக்கிக் கொள்ளலாம் என்பது இவர்கள் கருத்து. ஆடம்பர வாழ்க்கை தேவையில்லை அதிகாரம் தேவையில்லை. இவையெல்லாம் விதிவிலக்குகள். இடைக்காலத்தில் குறைந்த அளவுக்கேனும் முதலாளியம் தேவை. அரசு அதிகாரம் தேவை. நிறுவனங்கள் தேவை. குடும்பம் தேவை. முதலாளியத்தோடு முரண்படுகிறோம் எனினும் ஒத்துழைப்பதையும் தவிர்க்க இயலாது.

இடைக்காலத்திற்கான இந்த வாழ்வியல் கண்ணோட்டம் தான் நமக்குச் சிக்கல். இலக்கியம் என்று பேசும் பொழுது இந்த வாழ்வியல் கண்ணோட்டத்தின் பகுதி என்ற முறையில்தான் இலக்கியம் பற்றிய சிக்கல் நமக்குள் எழுந்திருக்கிறது.

ஒன்றை இங்கு தெளிவுபடுத்திக் கொள்ளலாம். இலக்கியம் பற்றி மட்டுமல்லாமல் வாழ்க்கை பற்றிப் பேசும்பொழுதும் மார்க்சியவாதி தன் அரசியல்/பொருளியல் வரையறைகளைத்தான் முன்வைக்க வேண்டியிருக்கிறது. இடைக்காலத்தில் வாழ்க்கை எப்படியோ இருக்கட்டும். இறுதி நிலையில் வாழ்க்கை அப்படி இருக்க முடியாது. சோசலிசம்/கம்யூனிசம் வந்தபொழுது வாழ்க்கை எனத் தனிச்சிக்கல் எதுவும் இராது. இன்று மனிதனை வாட்டும் உடலியல் முதலிய சிக்கல்கள் அன்று இராது. உடைமை இல்லை, அரசு இல்லை, என்ற நிலையில் மனிதர் தம் வாழ்க்கையைச் சுதந்திரமாக அமைக்கமுடியும். அனுபவிக்க முடியும். போராட்டங்களுக்கு வாழ்வில் இடமில்லை. இப்பொழுது கட்சிக்காரர்கள், கட்சிக்குவெளியே உள்ள மக்கள் தொகுதி என்ற வேறுபாட்டிற்கு இடமில்லை. கட்சிக்காரர்களும் திருமணம் செய்துகொண்டு குழந்தைகளோடு சுகமாக வாழலாம்; நிறைய ஓய்வு இருக்கும். கலைப் பயிற்சியில் ஈடுபடலாம். இலக்கியம் செய்யலாம். ஒருவேளை வாழ்க்கையில் முரண்பாடுகள் பெருமளவு குறைந்த நிலையில் இலக்கியம், கலைகள் என்பவை தேவைப்படாமலும் போகலாம்.

மேலும் ஒன்று. வரலாற்றுக் காலம் முழுவதும் மதவாதிகள் என்பவர்கள் வாழ்வியலை இரண்டாக வகுத்து வைத்தனர் என்று பார்த்தோம். மார்க்சியரும் அநேகமாக இத்தகைய பிரிவினையைத்தான் தமக்குள்ளும் ஏற்றிருக்கின்றனர். துறவிக்கு முன்வைத்த இலட்சியம் இறைவனை அடைதல் அல்லது பிறப்பு அறுபடல். மார்க்சியர் முன்வைக்கும் இலட்சியம் சோசலிசம்/கம்யூனிசம். தன் இலட்சியத்தை அடையத் தவம் வேண்டும் என்கிறான் துறவி. போராட்டம்

என்கிறான் மார்க்சியன். துறவும் போராட்டமும் சில அம்சங்களில் ஒன்றுபட்டவை. வாழ்க்கை என்பதற்குள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டால் துறவிக்கு விடுதலை இல்லை. மார்க்சியனும் விடுதலையைச் சாதிக்கமுடியாது. எத்தகையதாக வாழ்க்கை அமைய வேண்டுமென்று தீர்மானிக்கும் தகுதி தனக்கு இருப்பதாகத் துறவி நம்புகிறான்; மார்க்சியனும் நம்புகிறான். ஒருவகையில் இது அதிகாரத்தை உள்வாங்கிக் கொண்ட நிலை என்பதிலும் ஐயமில்லை.

சமயமும், மார்க்சியரும் இந்த அம்சத்தில் இணைந்துள்ளனவா என்ற கேள்விக்கும் இடம் உண்டு. சமயத்திற்கும் மார்க்சியத்திற்கும் உள்ள உடன்பாடு அல்லது மறுப்பு என்பதை விட வரலாற்றில் வாழ்க்கை முன்நிறுத்திய சிக்கல் எது என்று பார்ப்பது இந்தச் சிக்கலைப் புரிந்து கொள்வதற்கான நெறியாக அமையும். உடைமையையும் அரசு அதிகாரத்தையும் அதாவது சமூகத்திற்குள் வந்துவிட்ட ஏற்றத் தாழ்வுகளை, சமூகப்பிளவை என்ன செய்வது? இவற்றால் வாழ்க்கை எவ்வளவு சீர்கெடுகிறது என்பதாக இந்தச் சிக்கலை நாம் பார்க்க முடியும். ஒன்று பட்டு உழைப்பது, பகிர்ந்து கொள்வது என்பதான வாழ்க்கைதான் விடுதலைக்கான வாழ்க்கை. இந்த நிலை மாறும்பொழுதுதான் எல்லாச் சிக்கல்களும் எழுகின்றன. ஒருபக்கம் செல்வம். ஆகவே அங்கு கூடுதலான உடலியலின்பங்கள், ஆடம்பரங்கள், ஆணவங்கள் மறுபக்கம் வறுமை. உடலியல் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு வாய்ப்பில்லை. ஆகவே இந்த இன்பம் தேவையா? அந்த இன்பம் தேவையா? என்ற மனச்சிக்கல் அறவே வேண்டாம் என்ற துறவு நிலை. கிடைப்பதைப் பறித்துக்கொள் என்ற முரட்டுத்தனம். உடம்பே தீமையானது என்ற தத்துவம் பேதைமை, மற்றவர்க்காகத் தன்னைத் தியாகம் செய்து கொள்வது மேன்மை என்ற நிலை. குழந்தைப்பேறு இச்சையின் விளைவு, பிறப்பினால்தான் தோன்றுகிறது. அறியாமை தான் பிறவிக்குக் காரணம். பெண்தான் ஆணைத் தூண்டுகிறாள். பிறவித் தொடர்ச்சியில் ஆணை மாட்டி விடுகிறாள். பெண் தன் அடிப்படையிலேயே தீங்கானவள்; அவளுக்கு மோட்சம் இல்லை. அவளுக்கு வேதமில்லை; தவம் இல்லை; ஆணுக்குத்தான் தவம் மற்றும் மோட்சம். இத்தகைய சிக்கல்களெல்லாம் வரலாற்றின் வழியே தோன்றியவை.

இப்பொழுது சொல்லலாம். வரலாற்றை - அதாவது மனிதச் சிக்கல்கள் என்பவை வரலாற்றில் எவ்வாறு தோன்றின என்பதை - மதம் புரிந்து கொள்ளவில்லை. புரிந்துகொள்ளாத நிலையில் வாழ்க்கை பற்றிய சில கொள்கைகளை மதம் முன்வைத்தது. மனிதச் சிக்கல்கள் என்பவை எவ்வாறு தோன்றின என்பதை மார்க்சியன் அறிகிறான்.

அறிந்த நிலையில் வரலாற்றிற்குள், மதத்திற்குள், அதிகாரத்திற்குள் இவன் மாட்டிக்கொள்ள வேண்டியதில்லை. உடைமை இல்லாமல் அரசு இல்லாமல் வரலாற்று இயக்கம் இல்லை என்பதிலிருந்து மார்க்சியனுக்கும் சிக்கல்கள் நேர்கின்றன. இந்தச் சிக்கல்களை முன்நிறுத்தி, மையப்படுத்தி வாழ்வியக்கத்தை மார்க்சியன் புரிந்துகொள்ளவேண்டும் அப்படியானால் உடைமைக்கும் அதிகாரத்திற்கும் இடம் கொடுப்பதன் மூலம் வாழ்வியலைப் புரிந்துகொள்ள இயலுமா? ஆனால் இன்றுள்ள நிலையில் மார்க்சியன் இப்படித்தான் புரிந்து கொண்டிருக்கிறான். இதன் மூலம்தான் முதலாளியம் இவனுக்குள் வெற்றி பெற்றிருக்கிறது. இதன் காரணமாகத்தான் மார்க்சியன் அரசியலுக்கும் பொருளியலுக்கும் கூடுதலான அழுத்தம் தருகிறான். அதாவது முதலாளியிடம் வசப்பட்டிருக்கும் அரசியல் மற்றும் பொருளியல் ஆற்றலைத் தன்வசப்படுத்திக் கொள்ளவேண்டும். அதிகாரம் செய்வதில் தவறில்லை. உடைமையைத் தான் நிர்வாகம் செய்ய முடியும். மக்களுக்கான வாழ்க்கையை தான் நிர்ணயிக்க முடியும். இலக்கியம் பற்றியும் இவ்வகைப் பார்வை மார்க்சியனுக்குள் இருக்கிறது. இலக்கியம் ஒரு கருவி. அரசியல் என்ற உள்ளடக்கம் தான் இலக்கியத்திற்கு வடிவம் தருகிறது, உணர்வு தருகிறது. இலக்கியத்திற்கெனத் தனித்தன்மை இருப்பதாக வைத்துக் கொண்டாலும் இறுதியில் இலக்கியத்தை நிர்ணயம் செய்வது அரசியல் மற்றும் பொருளியல்தான் - அரசியல்வாதி தான், கட்சிக்காரன்தான்!

மார்க்சியரைப் பொறுத்தவரை பொருளியல் மற்றும் அரசியலில் தம் கவனத்தைக் குவித்துள்ளதால் வாழ்வியலின் சில கூறுகள் மட்டுமே வசப்படுகின்றன. இவற்றின் அடிப்படையிலான இலக்கியம் பற்றிய பார்வையைத்தான் மார்க்சியரால் கொள்ள முடிகிறது, என்பதைத் தொடர்ந்து பார்த்து வருகிறோம். சிலவற்றை மையங் கொள்ளும் பொழுது வேறு சில அல்லது பல நம் பார்வைக்குள் இடம் பெறுவதில்லை என்பது பொதுவான உளவியல் விதி. வரலாற்று முறையில் ஏற்பட்ட வர்க்க ஏற்றத்தாழ்வுகளை ஒழிப்பதற்கான வர்க்கப் போராட்டம் என்பதில் கவனம் வைத்துள்ள மார்க்சியரின் உளவியல் போக்கின் விளைவு இது என்றும் பார்க்கிறோம். அன்றியும் முதலாளியப் பொருளியல் மற்றும் அரசியலோடு முரண்பட்டு மார்க்சியர் போராடும் பொழுதே தவிர்க்க இயலாமல் முதலாளியப் பார்வையும் இவர்களுக்குள் வந்துவிட்டதன் காரணமாக, இவர்களது வாழ்வியல் மற்றும் இலக்கியம் பற்றிய பார்வை உருவாகி இருக்கிறது என்றும் பார்க்கிறோம் மார்க்சியத்திற்குள்ளிருந்த முதலாளியக் கூறுகளைக் களைவதன்மூலம் மட்டுமே இவர்களின் வாழ்வியல் மற்றும் இலக்கியப் பார்வை மேலும் விரிவுபட முடியும் என்றும் பார்க்கிறோம் ஒருவகையில் வரலாற்றின் நெருக்கடி எனவும் இதைக் குறிப்பிட விரும்புகிறோம்.

வரலாற்றுச் சூழலுக்கு எதிர்வினையாகத் தன்னைப் படைத்துக் கொள்ளும் மார்க்சியன் வரலாற்றுச் சூழலின் வரையறையிலிருந்து முற்றாக விடுபட இயலாது என்பதையும் நாம் கவனிக்கிறோம்.

வரலாற்றின் உபரி மதிப்பு என்பதன் உற்பத்தி இல்லாமல், வரலாற்றின் வளர்ச்சி இல்லை. உபரிமதிப்பு என்றவிதி முதலாளியச் சமூகத்தில் கண்டறியப்பட்டது என்றபோதிலும் இதற்கு நிகரான முறையில் ஏதோ ஒரு வகையில் அல்லது பல வகைகளில் மக்களிடமிருந்து உபரி மதிப்பானது ஆளும்வர்க்கத்தால் எடுக்கப்பட்டது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். கல்வி, சுகாதாரம், வாழ்வுக்கான வசதி வாய்ப்புக்கள், குடியிருப்பு, சாலைகள், மருத்துவ வசதிகள் எனப் பலவற்றிற்கு நிதி ஒதுக்காமல் எந்தச் சமூக அமைப்பும் நிற்க முடியாது. இதைப்போலவே தொழில் வளர்ச்சி, அரசு நிர்வாகம் முதலியவற்றிற்கும் நிதி ஒதுக்கவேண்டும். ஆளும் வர்க்கம்தான் இவற்றையெல்லாம் தீர்மானிக்கிறது என்ற போதிலும், அடிமைப்பட்ட உழைக்கும் வர்க்கத்தின் நலன்களை முற்றாக ஒதுக்கிவிட்டு ஆளும் வர்க்கம் தன்னிச்சையாக நிதி ஒதுக்கீடுகளைச் செய்யவும் முடியாது. உழைக்கும் மக்களை ஏதோ ஒரு வகையில் அவர்களைப் பயிற்றாமல், ஆளும்வர்க்கம், தான் செயல்படவும் இயலாது. இலக்கியம் முதலியவற்றிற்கு நிதியோ, பிறவாய்ப்புக்களோ இத்தகைய சூழலில்தான் கிடைக்கின்றன. மன்னர்கள் புலவர்களை நெருக்கமாக வைத்துக் கொள்வதையும் அவர்களை வைத்துத் தம்மைப் பெருமைப்படுத்தும் இலக்கியங்களை இயற்றுவித்துக் கொள்வதையும், நாம் வரலாற்றில் பார்க்கிறோம். மன்னர்களோடு புலவர்கள் முரண்பட்டதையும் நாம் பார்க்கத்தான் செய்கிறோம்.

உபரிமதிப்பு உற்பத்தி இல்லாமல் எந்தச் சமூக அமைப்பும் நிற்க முடியாது என்பது ஒரு பொதுவிதி. அதேபோல உபரிமதிப்பைப் பகிர்ந்து கொள்வதில் வர்க்கங்களுக்கிடையிலான போராட்டமும் நிரந்தரமானது என்பதும் ஒரு பொது விதிதான். முதலாளியச் சமூகம் தனது வளர்ச்சி அல்லது பெருக்கத்தை, முதன்மைப்படுத்தும் முறையில், உழைக்கும் மக்களுக்குச் சேரவேண்டிய பங்கை மேலும் மேலும் குறைத்து தான் எடுத்துக்கொள்கிறது. இதன் காரணமாகத் தான் முதலாளியச் சமூகத்தை அநீதியான சமூகம் என்று கூறவேண்டியிருக்கிறது. குறிப்பாக இராணுவப் பெருக்கம், அரசு அதிகாரப் பெருக்கம் முதலியவற்றுக்குக் கூடுதலான தொகையை ஒதுக்கும்பொழுது மக்களின் வாழ்க்கை தொடர்ந்து விளிம்புக்குத் தள்ளப்படுகிறது. இதன் காரணமாக மக்கள் மத்தியில் எழும் போராட்டங்களை ஒடுக்கும் முறையை அரசு கூடுதலாகப் பயன்படுத்துகிறது. மக்கள் வாழ்வில் இப்பொழுது அவலங்கள்

அதிகரிக்கின்றன. வாழ்வுக்கு அர்த்தம் இல்லை என்ற எண்ணங்கள் மக்கள் உள்ளங்களில் எழுகின்றன.

பொதுவாக மார்க்சியரைப் பொறுத்தவரை உபரிமதிப்பு என்பதையும் முழு அளவில் சுரண்டல் என்று புரிந்து கொண்டு, இந்த உபரிமதிப்பு முதலாளிக்குச் சொந்தமல்ல, தொழிலாளிக்குத் தான் முழு அளவில் சொந்தம் என்ற கருத்தில் அழுத்தம் கொள்ளும்பொழுது வரலாற்று இயக்கத்தை இவர்கள் புரிந்து கொள்ளாதவர் ஆகின்றனர். கோதா திட்டம் என்ற சிறுநூலில் மார்க்ஸ் இந்த உண்மையை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறார். மேலும் ஓர் உண்மையை நாம் காணவேண்டும். உபரி மதிப்பு முதலாளியிடம் சேருவதாகிய இயக்கப்போக்கில் தொழிலாளர்கள் மட்டுமல்லாமல் உழவர்கள் முதலியவர்களை உள்ளடக்கிய சமூகத்தின் பெரும்பகுதி அடங்கியிருக்கிறது என்பதையும் நாம் புரிந்து கொள்ள முடியும். ஆகவே உபரிமதிப்பு என்பதில் தொழிலாளர்க்கு மட்டுமே முழு உரிமை உண்டு என்பது மார்க்சியம் பற்றிய புரிதல் இல்லாததைத் தான் காட்டுகிறது. ஆக, மார்க்சியக் கட்சிகள் ஒட்டுமொத்தமான வர்க்கப் போராட்டத்திற்குத் திட்டமிட வேண்டுமே தவிர, பாட்டாளி வர்க்கத்தின் மேம்பாட்டிற்காக மட்டும் திட்டமிடுவது, மார்க்சியர் முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்டதைத்தான் காட்டுகிறது.

இந்த உண்மையைத்தான் நாம் திரும்பத் திரும்பச் சொல்லுகிறோம் சுரண்டலும் அடிமைத்தனமும் இல்லாமல் வரலாறு இல்லை; வரலாற்றில் வளர்ச்சி இல்லை. சுரண்டலுக்கும் ஒடுக்குமுறைக்கும் எதிரான போராட்டம் இல்லாமல் இயக்கம் இல்லை, வளர்ச்சி இல்லை வரலாற்றின் நெருக்கடி என்பது இத்தகையது ஒவ்வொருவருக்குள்ளும் இது நடைபெறுகிறது. வரலாற்றின் வளர்ச்சிக்கான திசை எதுவோ, வர்க்கம் எதுவோ, அதன் சார்பில் நிற்பதன் மூலமே, வாழ்க்கை அர்த்தம் பெறுகிறது; வாழ்வில் திறன்களும் அழகுகளும் சேர்கின்றன. இலக்கியம் இந்த அடிப்படையில் படைக்கப்படுகிறது/படைக்கப்பட வேண்டும். அதாவது கட்சிக்குள்ளும் வர்க்கப் போராட்டம் நடைபெறுகிறது. தொழிலாளிக்குள்ளும் நடைபெறுகிறது. குடும்பத்தினுள்ளும், கணவன் மனைவிக்கு இடையிலும், கல்வி நிறுவனங்களிலும், இலக்கியத்தினுள்ளும், அறிவியல் ஆய்வினுள்ளும் நடைபெறுகிறது என்ற பார்வை வளமான பார்வை, மார்க்சியம் தரும் பார்வை. இந்தப் பார்வையிலிருந்து தான் வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் புதுப்பிக்க முடியும்.

முதலாளியத்ததை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியர் பொருள், அதிகாரம் போன்ற சில வரையறைகளில் முடங்கிக் கிடக்கிறார்கள்.

இவர்களால் வாழ்வின் அனைத்துக் களங்களோடும் உறவுகொள்ள இயலவில்லை. வாழ்வின் சில கூறுகளை மையப்படுத்தித்தான் இவர்கள் இலக்கியம் படைக்கின்றனர். அதிகாரத்தைக் கைப்பற்றுவதாகிய அரசியலைத்தான் இலக்கியத்தின் உள்ளடக்கம் ஆக்குகின்றனர் என்று முன்பு பார்த்தோம். இப்பொழுது உறுதியாகச் சொல்லலாம். முதலாளியத்தை - அதாவது பொருள் அதிகாரம் முதலிய கூறுகளைத் தமக்குள்ளிருந்து வெளியேற்றிக் கொண்ட மார்க்சியர், வரலாற்றுச் சூழலில், வர்க்கப் போராட்டம் தமக்குள்ளும் நடைபெறுகிறது என்ற பார்வையில் நிலைகொள்ளும் பொழுது வாழ்வின் அனைத்துக் களங்களும் மார்க்சியருக்கு வசப்படும்.

வரலாற்றின் வழியேதான் மனிதன் வந்திருக்கிறான் என்ற முறையிலும், வரலாற்றின் அனைத்துக் களங்களின் பதிவும் பாதிப்பும் இவனுக்குள் உண்டு என்ற முறையிலும், பிறந்தது முதற்கொண்டு சமூகத்தோடு உறவுகொண்டவன் என்ற முறையிலும், தன் அனுபவ உலகின் பாதிப்புக்கு உள்ளானவன் என்ற முறையிலும் தன் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் எதிரானவை பலவற்றோடும் இவன் முரண்பட்டிருக்கிறான் என்ற முறையிலும், இவற்றுக்கு எதிரான போராட்டத்தின்மூலம் தன்னைத்தானே உருவாக்கிக் கொண்டான் என்ற முறையிலும் இந்த மனிதனை நாம் பார்க்க முடியும். இவனுக்குள் குழந்தைப்பருவம், இன்னும் அதன் கள்ளங் கபடமற்ற தன்மையோடும், புதிய புதிய விளையாட்டுக்களோடும் உயிரினங்களின் தொடர்போடும் இன்னும் இவனுக்குள் குளிர்ச்சியாய் நிழல்பரப்பி இருக்கிறது. இளமைக் காலம் முதல் இவன் செய்த பயணங்கள், பார்த்த இடங்கள் வழிபட்ட தெய்வங்கள், பெற்றோர், ஆசிரியர்கள் என்று எத்தனையோ இவன் ஆளுமைக்குள் இணைந்திருக்கின்றன. இவனுக்குள் வானமும், பெரிய நிலப்பரப்பும், ஆறுகளும், கடல்களும் இணைந்திருக்கின்றன. பறவைகளோடு இவனும் பாடினான், பறந்தான். வயல்வெளிகளில் உழைத்தான், திரிந்தான். உழைப்பு இவனுக்குள் உரமாய் உறவாய்ப் பதிந்திருக்கிறது. நட்புக்களில் தன்னை இழந்திருக்கிறான்; இயற்கைக் காட்சிகளில் தன்னை மறந்திருக்கிறான். ஆடுகளோடும் மாடுகளோடும் இவன் அலைந்து திரிந்து தன் அன்பை வளர்த்திருக்கிறான்.

பள்ளிப் படிப்பில் இவன் எவ்வளவோ கற்றான். குழந்தைப் பருவம் முதல் இவன் கேட்ட கதைகள் இவனுக்குள் இன்னும் தங்கியிருக்கின்றன. தன் அனுபவங்களை இவனும் கதைகள் ஆக்கினான். பசி இவனைத் துன்புறுத்தியிருக்கிறது. காதல் தந்த போதையில் இவன் தன்னை மறந்திருக்கிறான். மரணத்தை இவன் பார்த்தவன் குடும்பத்திற்குள் இவன் முடங்கியும் இருக்கிறான். குடும்பத்திற்கு

வெளியில் வாழ்வின் பெரும்பரப்பை நுகர்ந்திருக்கிறான். எத்தனையோ வகைகளில் தன் அறிவுத்திறனையும், கலைத் திறனையும் இவன் பெற்றிருக்கிறான். உறவுகளில் இவன் விரிவடைந்திருக்கிறான். சிக்கல்கள் மோதல்கள் என வந்தபோது அவற்றின் தீர்வில் இவன் மேம்பட்டிருக்கிறான். புதிய பார்வைகளைப் பெற்றிருக்கிறான். கடவுளும் பிசாசும் இவனுக்குள் வந்துபோயிருக்கின்றன. இவன் இப்படித்தான் உலகச் சூழலில் பலரோடு கொண்ட உறவில் பயிற்சியில் தன் ஆளுமையைப் பெற்றிருக்கிறான். அடிமைப்படும்பொழுது துன்புற்றிருக்கிறான். பிறர் துயரத்தைத் தீர்க்க முடிந்தபோது இன்புற்றிருக்கிறான். வாழ்க்கை இன்னும் பெரியது என்று இவன் அறிந்திருக்கிறான். எதற்குள்ளும் இவன் முற்றாக முடங்குவதில்லை. தன்னைக் கட்டுப்படுத்துவதன் மூலம் தனக்கான வலிமையைச் சேகரித்திருக்கிறான். கட்டுப்பாடின்றி அலைந்தபொழுது தன்னை இழந்திருக்கிறான். இவனுக்குள் கவிதைகள் இயல்பாய்ப் பூத்திருக்கின்றன. இவனே தலைவனாகவும் தொண்டனாகவும் இருந்திருக்கிறான். அழகுகளை இவன் சேகரித்திருக்கிறான். தன்னைச் சிறுமைப்படுத்துவனவற்றை அசிங்கம் என ஒதுக்கியிருக்கிறான். தெய்வங்களோடு இவன் உறவாடினான். வாழ்வின் புதிர்களை இவன் உணர்ந்திருக்கிறான். பிரபஞ்சத்தின் எல்லையின்மையைத் தனக்குள் உணர்ந்திருக்கிறான். தன்னையே அண்டமாகவும் அணுவாகவும் இவன் உணர்ந்திருக்கிறான். எல்லாமும் தனக்குள் இருப்பதைப் பார்த்திருக்கிறான். இவன் பல சமயங்களில் தன்னைத் தாழ்த்தப்பட்டவனாக உணர்ந்து தலை கவிழ்ந்திருக்கிறான். தன்னைத் தாழ்த்தியவர்களைத் துரும்பென வெறுத்திருக்கிறான். தன் திமிர்த்தனத்திற்காகத் தன்னையே இவன் அருவெறுத்திருக்கிறான். கருணை தனக்குள் பொங்குவதையும் இவன் அனுபவித்திருக்கிறான்.

வரலாற்றோடும்பிரபஞ்சத்தோடும் எல்லாவகை உயிரினங்களோடும் உறவுகொள்வதன் மூலம், தன் வாழ்வும் வளர்ச்சியும் இயங்குவதைப் புரிந்துகொண்ட முறையில் இவன் மனிதனாயிருக்கிறான்.

இந்த மனிதன்தான் மார்க்சியம், வரலாற்றின் வழியே கண்டறிந்த மனிதன். மதமோ, வேறு எந்தத் தத்துவங்களோ இத்தனை விரிவான மனிதனைக் கண்டதில்லை. மார்க்சியம் கண்ட இவன்தான் மனிதன்; உண்மையான மனிதன். இவன்தான் கலையின் இலக்கியத்தின் உள்ளடக்கம்.

# 3

முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியரைப் பொறுத்தவரை வானம் தேவையில்லை, பறவைகள் தேவையில்லை, மலர்கள் தேவையில்லை, பறவைகளில் நூறு வகை, மலர்களில் ஆயிரம் வகை தேவையில்லை. வானம் இல்லாமல் சூரியன் இல்லை, உலகம் இல்லை, மனிதன் இல்லை என்பதால்தான் இவர்களுக்கு வானமோ சூரியனோ தேவைப்படுகின்றன. பரிணாமத்தை மார்க்சியர் ஏற்கின்றனர் என்ற முறையில் மனிதத் தோற்றத்திற்கு முற்பட்டதாகிய விலங்குகளையும் தாவரங்களையும் இவர்கள் மறுப்பதில்லை. பூமியில் மனிதன் வாழ்வதற்கு, மனிதனின் உடலியல் தேவைகளாகிய உணவு முதலியவற்றை இவர்கள் ஏற்பது இதற்காகத் தான். மார்க்சியரின் பொருள்முதல் வாதம் இப்படித்தான் அவர்களுக்குக் கற்பித்திருக்கிறது.

முதலாளியத்தைக் களைந்துவிட்ட மார்க்சியத்தின் பார்வை ஆழமானது. வானம் இயற்கை ஆகியவற்றின் சூழலில் மனிதன் வாழ்கிறான் என்பது மட்டுமல்ல. வானமும், கடலும், காற்றும், மலர்களும், பறவைகளும் இவனுக்குள் சென்று மனிதனைப் படைத்திருக்கின்றன; மனிதனின் ஆளுமையை உருவாக்கியிருக்கிறான். மனித இருப்பின்/இயக்கத்தின் இன்றியமையாத கூறுகளில் இவையும் அடங்குகின்றன. புறம் என்பதும், அகம் என்பதும் தனித்த நிலையில் இல்லை. புறத்தினுள் அகமும், அகத்தினுள் புறமும் ஊடுருவி, ஊடாடி ஒன்றை மற்றது உருவாக்கி, அதன் பின்னர் இரண்டென்பதற்று ஒன்றாகி மனிதனை உருவாக்கியுள்ளன. மனித இருப்பின் கூறுகளைப் பகுத்துக் கொண்டே செல்ல முடியுமானால், இறுதியில் கடல் என்றும், காற்று என்றும், வானம் என்றும் காணவேண்டிவரும்.

ஆதி மனிதனுக்குள் எவையெவை இவ்வாறு இணைந்திருந்தன என்று இன்று திட்டவட்டமாகக் கூறுவது சாத்தியமில்லை. ஆனால் வரலாற்றின் வழியே மனிதன் தன்னைப் பெரியதாக, நுட்பமாக, வளமாக, அழகாக, ஆற்றலுடையோனாக வளர்த்துக்கொண்டிருக்கிறான். பல நாடுகளைப் பார்த்திருக்கிறான்; எண்ணற்ற உயிரினங்களைப் பார்த்திருக்கிறான். தொலை பெருக்கி, நுண்பெருக்கி முதலியவற்றின் மூலமும் இவன் பார்க்கிறான். வாழ்வியல் அனுபவங்கள் என இவன் இலட்சக் கணக்கில் சேர்த்துக் கொண்டிருக்கிறான். இவையெல்லாம் இவனுக்குள் திரண்டு, சிக்கலான மனம் என்பதை இவனுக்குள் உருவாக்கியுள்ளன. ஒரு கட்டத்தில் இவன்மனமே இவனை மயக்குகிறது. தீர்க்கமுடியாத முரண்பாடுகள் கொண்ட மனம் இவனைத் துரத்துகிறது. தனக்குத் தானே அந்நியன் ஆகிறான், தவம் செய்கிறான், அரிய காட்சிகளைக் காண்கிறான். எவை எவற்றையோ

இணைத்துக் காண்கிறான். புறத்தில் பார்க்க முடியாத எத்தனையோ காட்சிகள், வண்ணங்கள், வடிவங்கள் இவனுக்குள் எழுகின்றன. எத்தனையோ இசைக்கோலங்கள் தன் மனத்தினுள் உருவாக்கிக்கொண்ட இலட்சியங்களோடு இவன் விரிந்து நிற்கிறான்; வீரத்துடன் போராடுகிறான்; பெருமிதத்தோடு நிமிர்ந்து நிற்கிறான். வெற்றிகளைக் கூட உதறிக்கொண்டு எளியவனாகிறான். பட்டினி கூட இவனுக்கு இன்பம். தோல்வி கூட இவனுக்குக் கல்வி எல்லாவற்றிற்கும் இவன் தாய். சமத்துவம் இவனது உயிரியக்கம். வானமும் பூமியும் இவனுக்குத் தோழர்கள். இவன் கலைஞன். இவன் மனிதன். தன்னை இழப்பது இவனுக்கு உயிரியக்கம். தியாகம் என்பது பெருமை, ஒருவகையில் ஆணவம் இது மனிதனைச் சிறுமைப்படுத்தும். பெண்ணின்றி வாழ்க்கை இல்லை. உழைப்பின்றி மனிதன் இல்லை. உழைப்பின் மூலம்தான் சமூகத்தோடு, வரலாற்றோடு உறவுகொள்ள முடியும். சமூகத்தோடு "தான்" அற்றுக் கலந்துவிட முடியும். பறவைகள் மலர்கள் இவன் உயிரியக்கத்திற்கு உரம் சேர்க்கின்றன. வன்முறையும் வாழ்வின் ஒருகூறு என்பதற்காக ஆடுமாடுகளை வளர்த்து இவன் கொல்லமாட்டான். இவனுக்குள் ஆறுகளும் குளங்களும் இணைந்திருக்கின்றன. ஆறுகளோடும் குளங்களோடும் நீர்நிலைகளோடும் தான் இவனுக்கு வாழ்க்கை. நீர் நிலைகளை இவன் மாசுபடுத்த மாட்டான்; தன்னைத்தானே இவன் அழித்துக் கொள்வதில்லை; ஆகவே இயற்கையை இவன் அழிப்பதில்லை.

வாழ்வியல் என்பதில் இப்படி எத்தனையோ தளங்களில் வைத்து, பரிமாணங்களில் வைத்து ஒரு மார்க்சியனைப்போலவே இலக்கியவாதியும் புரிந்து கொள்ளவேண்டும். வாழ்வியலில் சில கூறுகளோடு மட்டும் தொடர்புகொண்டவன் வியாபாரியாக இருக்கலாம், முதலாளியாக இருக்கலாம், திருடனாக இருக்கலாம், அரசியல்வாதியாக இருக்கலாம். அவனை இலக்கியவாதி என்று சொல்ல முடியாது. வாழ்வியலில் அனைத்துப் பரிமாணங்களோடும் உறவுகொள்பவன் வணிகனாக இருக்கமாட்டான். அரசியல் வாதியாகவும் இருக்கமுடியாது. இத்தகையவனுக்குள் இலக்கியம் இயல்பாய்ச் சுரக்கும். வணிகம் செய்பவன் ஒரு பொருளை, பிற மனிதர்களை வெளியில் வைத்துத்தான் பார்க்க முடியும். தன்னைப் போலப் பிறமனிதர்களையும் எண்ணத் தொடங்கினால் அவனால் வணிகம் செய்யமுடியாது. பிறரைத் தன் அதிகாரத்திற்கு உட்படுத்த வேண்டுமென்று அரசியல்வாதி கருதுகிறான். தனக்குள்ளும் அதிகாரம் வேண்டாம் என்பவன் அரசியல்வாதியாக இருக்கமுடியாது. தன்சிந்தனைக்கு/உணர்வுகளுக்குப் புறப்பொருள்கள்தான் ஆதாரம் என்று கருதுபவன் புறப்பொருளையும் தன்னையும் பிரித்துப் பார்க்கிறான். தனக்குள் புறப்பொருள்கள் செல்வதை, தன்னைப்

பாதிப்பதை, தன்னைப் படைப்பதை அவன் பார்ப்பதில்லை. புறத்தைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க விரும்புபவன் தன்னையும் புறத்தையும் பிரித்துப் பார்க்கிறான். புறத்தால்தான் தன் அகம் உருவாயிற்று என்று கருதுபவன் தன் அகத்தைப் பெரிதெனக் கருதுவதில்லை. புறத்தை மாற்றினால் அகம் தானே மாறிவிடும் என்று கருதுகிறான். அகத்தின் படைப்புத் திறனை இவன் பார்ப்பதில்லை. இதன் காரணமாகவே கலைகளுக்கு இவன் அழுத்தம் தருவதில்லை. இசையின் இயக்கத்தைப் புரிந்துகொள்வதில்லை. புற உலகத்தைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டு வருவதற்காக இவன் அறியியல் கற்றான், கணிதம் கற்றான். ஆனால் இவற்றின் வழியே தனக்குள் வெளிப்பட்ட ஆக்கத்திறன்களைப் புதிர்களை இவன் அறியமாட்டான். நவீன ஓவியம் தேவையில்லை என்பான். நவீன எழுத்துக்கள் கூட இவனுக்கு உடன்பாடாக இருப்பதில்லை. இவனுக்குத்தான் மலர்கள் என்பவை வெறும் காட்சிப்பொருள், வெறும் அழகுப்பொருள். இவை இல்லாமல் இவன் வாழ்ந்துவிட முடியும் இவனது பொருள் முதல்வாதம் முதலாளியத்தை உள்வாங்கிக்கொண்ட பொருள் முதல்வாதம்.

இத்தகைய மார்க்சியன் தன் வரையறைகள் உணர்ந்து அடக்கமாக இருக்கத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். உண்மையில் ஏற்றத்தாழ்வில்லாத சமூகமாற்றம் தேவை என இவன் கருதுவானெ - ன்றால் இத்தகைய சமூக மாற்றத்திற்காக இவன் உழைப்பதற்கான நோக்கில்தான் இலக்கியம் முதலியவற்றையும் தான் பார்க்கிறேன் என்று சொல்லி நிறுத்திக்கொள்ள வேண்டும். இலக்கியத்தின் எல்லை கண்டதாக இவன் சொல்லக்கூடாது. இலக்கியத்தின் நோக்கம் அரசியல்தான் என்று சொல்லக்கூடாது. இத்தகைய நோக்கம் வாழ்வியக்கத்தைக் குறுக்குகிறது என்பதையேனும் இவன் புரிந்துகொள்ள வேண்டும். "வெளிப்படையாக முதலாளியத்தை ஆதரித்துப் பேசுகிற இலக்கியவாதிக்கு எதிராகத்தான் மார்க்சியனாகிய நான் பேசுகிறேன்" என்றாவது இவன் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த இருவருக்குமே வானம் பெரிதாக இருக்க வேண்டியதில்லை, மலர்கள் ஆயிரம் வண்ணங்களில் தேவையில்லை, உயிரியக்கம் இத்தனை கோடிவகைகளில் செயல்பட வேண்டியதில்லை. இந்த உலகில் இவர்கள் மட்டும் இருந்தால் போதும். இவர்களுக்கு அனுசரணையாக மற்றவர்கள், மற்ற உயிரினங்கள் இருக்கவேண்டும். இவர்கள் எல்லாவற்றையும் தம் தேவைகளை உள்ளடக்கி வடிவமைப்பார்கள். எல்லோரையும், எல்லாவற்றையும் வாழவைப்பது இவர்கள்தான். தம் அறிவாற்றலால் எல்லோரையும், எல்லாவற்றையும் புரிந்து கொள்வதும் இவர்கள்தான். காடுகளை அழித்து இவர்கள் காகிதம் செய்வார்கள்.

தேவைப்பட்டால் மலைகளை இவர்கள் தகர்ப்பார்கள், கடல்களை வற்றச் செய்வார்கள். திமிங்கலத்தை ஆயிரக்கணக்கில் சொல்வார்கள். விலங்கினங்களையும் தாவரங்களையும் அழிப்பார்கள். எல்லாவற்றையும் வேதிப்பொருள்களாக மாற்றுவார்கள். ஆதிவாசிகளுக்கு நாகரிகம் கற்றுத் தருபவர்கள் இவர்கள்தான். உழவர்களைத் தொழிலாளிகளாக மாற்றுவது இவர்கள் நோக்கம். எண்ணிக்கையில் அவர்கள் அளவு கடந்து பெருகும்போது அவர்களை அழிப்பதற்கும் இவர்கள் திட்டம் தீட்டுவார்கள். இவர்கள் வாழ, உலகம் அழியவேண்டும். உலகத்தை அழிப்பதன் மூலம் தம்மையும் அழித்துக் கொள்கிறோம். என்ற உணர்வு இவர்களுக்கு இல்லை.

## 4

முதலாளியத்தைக் களைந்துகொண்ட மார்க்சியத்தின் வாழ்வியல் பார்வையைச் சமயப்பார்வை என்று சிலர் சொல்வதற்கு இடமிருக்கிறது. மதத்தையும் மார்க்சியத்தையும் எதிர்நிறுத்திக் காண்பவர் இதில் கடுமையான குற்றம் காண்பர். இதை அத்வைதப் பார்வை என்று சொல்வதற்கு இடமிருக்கிறது. ஹெகலியத்தோடு ஒத்த பார்வை என்றும் சொல்லலாம்.

கிரேக்க இலக்கியம், அதுதோன்றி இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் கடந்த நிலையிலும் இன்றும் நம்மைப் பாதிப்பது ஏன்? என்ற கேள்வியை மார்க்சே எழுப்பி விடை கூறியிருக்கிறார். ஆதிப் பொதுமைச் சமூகம் அழிந்த, அடுத்த அண்மைக் காலத்தியது கிரேக்கச் சமூகம். இயற்கையோடும் சமூகத்தோடும் தன்னோடும் மக்கள் ஒன்றி ஆதிச் சமூகத்தில் வாழ்ந்தனர். கிரேக்கச் சமூகத்தின் தொடக்க நிலையில் முன்னைய ஒன்றிற்கும்/ஒருமை இன்னும் முற்றாகத் தகர்ந்துவிடவில்லை. இடைக்கண்ணிகள் இன்னும் மீதமிருக்கின்றன. கிரேக்கச் சமூகத்தை, வரலாற்றில் மனிதனின் குழந்தைப்பருவம் என்கிறார் மார்க்ஸ். குழந்தைப் பருவத்தில் உலகம் நமக்கு அந்நியமானதாகத் தோன்றுவதில்லை. குழந்தைப் பருவத்தில் வேறுபாடுகள் தெரிவதில்லை. வளரவளரத்தான் வேறுபாடுகள் குழந்தைக்குள் திணிக்கப்படுகின்றன. தொடக்கநிலையில் குழந்தை பிற உயிரினங்களோடு நெருக்கமாகத்தான் இருக்கிறது.

வளரும்பொழுது வேறுபாடுகளைக் குழந்தை ஏற்றுக் கொள்கிறது. கிரேக்கச் சமூகத்தில் வர்க்கவேறுபாடுகள் ஏற்படத் தொடங்கிய நிலையிலும், முன்னைய ஒருமை காரணமாக, பிரபஞ்சம் பெரியதாகவும் மனிதனுக்குள் ஊடுருவுவதாகவும் தோன்றியது. இயற்கையோடு மனிதன் தன்னை இணைத்துத்தான் காண்கிறான்.

மனிதனுக்குக் கிடைப்பது ஒன்றான காட்சி. இப்படி உலகத்தை தனக்குள் செறித்துக்கொள்ளும் மனிதன் வீரனாகவும், பெருமிதம் மிக்கவனாகவும், அழகனாகவும் இருக்கிறான். மரணமோ, அழிவுகளோ, இவனைத்தாக்கி அச்சுறுத்தவது இல்லை. வாழ்வின் நிரந்தரத்தன்மை இவனுக்குள் இயங்குகின்றது. இவன்தான் மாபெரும் கட்டடங்களை, பேரழகு பொருந்திய சிற்பங்களை, ஆற்றல்மிக்க இலக்கியங்களைப் படைக்கிறான். தன்னை விட்டுச் செல்லும் அந்த அற்புத உலகத்தைத் தனக்குள் இவ்வாறு பொதிந்து வைக்கிறான். மார்க்ஸ் தந்த விளக்கத்தை இவ்வாறு நம்மால் புரிந்துகொள்ள முடியும்.

இயற்கையோடும், சமூகத்தோடும், தன்னோடும் மனிதன் ஒன்றிவாழ்ந்த ஒருமைநிலை என்பது வரலாற்றின் தொடக்க நிலையில் மனிதனுக்குள் வந்து சேர்ந்த பேரனுபவம். இந்த அனுபவத்தைத் தனக்குள் மீண்டும் மீண்டும் பெற்றுக் கொள்ளவே மனிதன் விரும்புகிறான். வர்க்க வேறுபாடுகளால் தான் பிளவுபடும்பொழுது இந்தப் பேரனுபவம் தன்னைவிட்டுச் செல்கிறது என்ற போதிலும் இவனுக்குள் இது ஆழமாகப் பதிந்து விடுகிறது. இதைத்தான் இறைமை நிலை என்று, இந்த அனுபவத்தை உள்வாங்கிக்கொண்ட சமயங்கள் பிறகு கூறுகின்றன. மனிதனின் இன்றியமையாத இந்தப் பேரனுபவத்தைச் சமயம் தனக்கே உரியதாகிய அனுபவம் என்று உரிமை கொண்டாடுவதை நாம் ஏற்பதற்கில்லை. இதுமட்டுமல்ல, இந்த அனுபவம் எல்லாக் காலங்களிலும் மனிதர்களுக்குள் தொடரும் அனுபவம். கவிஞர்கள் இந்த அனுபவத்தை இயல்பாகக் கண்டு கொள்கிறார்கள். மார்க்ஸ் கூறியபடி மனிதன் வரலாற்று வளர்ச்சியின் இன்னொரு கட்டத்தில் மீண்டும் இயற்கையோடும், சமூகத்தோடும், தன்னோடும் முழுவதும் இணைவதாகிய உயர்நிலையைப் பெறத்தான் போகிறான். சமூகம் முழுவதற்கும் இந்தப் பெருநிலை வாய்க்கத்தான் போகிறது. அதற்குப் பெயர்தான் கம்யூனிசம்/கூட்டுவாழ்வு/ ஒன்றித்தவாழ்வு.

வரலாற்றுக் காலம் முழுவதும் மனிதனுக்குள் நிலவுகிற இந்த ஒருமை நிலையை மெய்யியல் வெளிப்படுத்துகிறது, கவிதை வெளிப்படுத்துகிறது. இந்த ஒருமை நிலையைச் சமுதாய அளவில் திரும்பவும் சாதிப்பதற்காக, ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராக மனிதன் போராடுகிறான். மனிதனுக்குள் இருக்கும் இந்த ஒருமை நிலைதான் அவனை இடையறாது தூண்டுகிறது. போராட்டத்தில் இவனுக்கு அழிவில்லை என்கிறது. தொடர்ந்த, இடையறாத போராட்டங்களின் வழியேதான் சமூகம் இந்த ஒருமைநிலையைப் பெறமுடியும். மனத்திற்குள் மட்டும் இந்த ஒருமை நிலையை வைத்துக்கொண்டு தியானத்தின்வழியே சில கணநேர அனுபவங்களைப் பெறுவது

போதாது. உடைமைகளைப் பொது ஆக்குவதாகிய பொருளியல் வடிவம்தான், உணர்வுவடிவில் மட்டும் மனத்திற்குள் தங்கியிருக்கிற இந்த ஒருமை உணர்வு புறத்தில் பெறும் வடிவம். இதைச் சாதிப்பதற்காகத்தான் மார்க்சியன் போராட்டம் தேவை என்கிறான்.

மனிதனை இடையறாது தூண்டுவது இந்த ஒருமை நிலை என்று கூறுகிறோம். இது மதம் அல்லவென்றும் கூறுகிறோம். மனிதனின் இயல்பான உணர்வு நிலை என்றும் கூறுகிறோம். இதைக் கண்டறிவதுதான் மெய்யியல் என்கிறோம். கலைஞனுக்குள் இந்த உணர்வு நிலை இடையறாது அவனை எழுச்சி கொள்ளச் செய்கிறது என்றும் கூறுகிறோம். இலக்கியம் பயில்வதென்பது, இந்த நிலையில், முதலில் தனக்குள் கண்டறிவது தான் என்றும் கூறுகிறோம். ஹெகலையும் மார்க்சையும் இந்தப் புள்ளிதான் இணைக்கிறது. சங்கரனும் நாமும் கூட இந்தப் புள்ளியில்தான் இணைகிறோம். இந்த அனுபவத்திலிருந்து தான் விவேகானந்தரும் பாரதியும் சோசலிசம் என்று பேசினர். இந்த அனுபவத்தோடு நின்றுவிடுபவன் சமயவாதி. இதுவே போதும் என்றும் அவன் கூறுவான். இறைவனின் அருட்கொடை இந்த அனுபவம் என்றும் கூறுவான். சிலருக்கே இந்த அனுபவம் வாய்க்கும் என்பான். ஆனால் அந்த அனுபவத்தை நாம் காணும் முறை வேறுவகைப்பட்டது. வரலாற்றுச் சூழலில் மனிதனுக்குள் தங்கியிருக்கும் ஒருமை உணர்வு என்று நாம் பார்க்கிறோம். இந்த ஒருமையுணர்வு எல்லோருக்குள்ளும் இருக்கிறது. இது பொருளியலாக மட்டும் இல்லை. பண்பாடாகவும், அறமாகவும், கலையாகவும், மெய்யியலாகவும் எத்தனையோ பரிமாணங்களைப் பெறுகிறது. மனிதன் பொருளியலோடு மட்டும் இணைந்தவன் அல்லன். மனிதனுக்குள் அறம், பண்பாடு, கலை, செயல்திறன் முதலிய பல்வேறு இழைகளும் இணைந்திருக்கின்றன. இவற்றுள் எந்த ஒன்றையாவது புறக்கணித்துவிட்டு மனிதனைப் பார்க்கமுடியுமா என்பதுதான் கேள்வி. எல்லா இழைகளும் வரலாற்றின் எல்லாக் கட்டங்களிலும் மனிதனுக்குள் இணைந்து, கலந்து இருக்கவில்லை. ஆனால் நெடுங்கால வரலாற்றின் விளைவாக மனிதனை ஆக்குகின்ற இந்தப் பல்வேறு இழைகள் பற்றி நாம் கண்டறிந்துள்ளோம். இம்முறையில் பன்முகப் பரிமாணங்கள் கொண்ட மனிதனைத்தான் இங்கு வேண்டுகிறோம். இத்தகைய பன்முகப் பரிமாணங்களைக் கொண்டதுதான் வாழ்வு என்கிறோம், வாழ்வியல் என்கிறோம். இத்தகைய வாழ்வியல்தான் மனிதனுக்கே உரியது, மனிதனுக்குத் தேவைப்படுவது, மனிதனை ஆக்குவது என்றும் நாம் கூறுகிறோம்.

இத்தகைய பார்வைவழியே பார்க்கும்பொழுது மனிதனை ஆக்குகிற பரிமாணங்களின் எந்த ஒன்றையும் நாம் குறைத்துச்

சொல்லமுடியாது. பன்முகப் பரிமாணங்களைப் பெறுவதற்குப் பயிற்சி அவசியம். சமூகம் இதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இதுதான் வளமான சமூகம். ஒருவனுக்கு இசைத்திறன் உண்டென்றால், அதை வளர்த்துக்கொள்ள அதில் அவன் நிறைவுகாண வாய்ப்புக்கள் கிட்ட வேண்டும். இப்படி ஒவ்வொரு மனிதனின் ஆளுமை வளர்ச்சியின் விளைவாகத்தான் ஒட்டுமொத்தமான சமூகம் வளம்பெறும். ஒன்று உயர்ந்தது, இன்னொன்று தாழ்ந்தது என்று இந்தப் பரிமாணங்களில் ஏற்றத்தாழ்வு சொல்ல முடியாது. தனக்குள் முடங்கிய பொருள்முதல் வாதம் தான் இந்த ஏற்றத்தாழ்வைக் கற்பிக்க முடியும்.

இந்த நீண்ட கட்டுரையின் அடித்தளம், மேற்கட்டு என மார்க்சின் சில வரையறைகளைப் பார்த்தோம். அடித்தளம்தான் மேற்கட்டைத் தீர்மானிக்கிறது என்பது ஒரு முக்கியமான கூற்று. மார்க்சின் ஆதாரக்கூற்று என்றும் இதைக் குறிப்பிடுகிறார்கள். ஏங்கல்ஸ் விளக்கியபடி பொருளியலுக்கு அழுத்தம் தராத அந்தக் காலச் சூழலில், இவ்வாறு பொருளியலுக்கே அழுத்தம்தரும் நோக்கில், அடித்தளம்தான் தீர்மானிக்கிறது என்று கூறியது சரி என்பதை நாம் புரிந்துகொள்கிறோம். இந்த நிலை முற்றாக மாறிவிடவில்லை. ஆனால் பொருளியலுக்கு அழுத்தம் தரும்போக்கு இறுதியில் மார்க்சியத்திற்குள் முதலாளியம் நுழைந்து மார்க்சியத்தை ஆக்கிரமிக்கிற போக்காக மாறியிருக்கிறது. சோசலிசத்திற்குள்ளும் ஏற்றத்தாழ்வை இந்தப்போக்கு உறுதிப்படுத்தியது. ஆகவே இதை இப்பொழுதேனும் களைந்துகொள்ள வேண்டும். எப்படி என்பது சிக்கலான கேள்வி என்றாலும் நாம் முயற்சி செய்யவேண்டும்.

அடித்தளம் என்பதனுள் உற்பத்திச் சக்திகள், உற்பத்தி முறை என்பதையும் உற்பத்தி உறவுகள் என்பதையும் உள்ளடக்குகிறோம். உற்பத்திக் கருவிகள் நிலம் முதலிய உற்பத்திச் சாதனங்கள் உற்பத்திச் சக்திகளில் அடங்குகின்றன. உற்பத்திச் சக்திகளுக்குள் மனிதர்களையும் உள்ளடக்குகிறோம். இன்றைய சமூகச் சூழலில் முதலாளி, தொழிலாளிக்கான உறவை உற்பத்தி உறவு என்கிறோம். மேற்கட்டு என்பதனுள், அரசியல், சித்தாந்தம், தத்துவம், கலாச்சாரம், கலை இலக்கியங்கள் முதலியவற்றை உள்ளடக்குகிறோம். மொழியை எதனுள் அடக்குவது என்ற சிக்கல் சோவியத் யூனியனில் எழுந்த பொழுது, இவை இரண்டிற்கும் இடையில் மொழியை வைக்கவேண்டும் என்றும், மொழி அடித்தளத்திற்கு நெருக்கமானது என்றும் ஸ்டாலின் விளக்கினார். ஸ்டாலினுடைய விளக்கம் ஒட்டுமொத்தமான இந்த வரையறைகள் பற்றிய ஒரு மீள்பார்வைக்கு வழிசெய்திருக்க வேண்டும், செய்யவில்லை என்பது வரலாறு. வரலாற்றுச் சூழலின் நிர்ப்பந்தம் என்று இதைக் கூற முடியும்.

உற்பத்திச் சக்திகளில் மக்களை உள்ளடக்கிப் பார்க்கிற பொழுதே, மொழி மட்டுமல்லாமல் அறிவியல், அரசியல், மெய்யியல், கலை முதலிய அனைத்தும் உள்ளே வந்துவிடும். அதைப்போலவே மக்கள் மத்தியில் நிலவுகிற பல்வேறு வகையான உறவுகள் என்பதை ஒதுக்கிவிட்டு மக்களை/மனிதனைப் பார்க்கவும் முடியாது. வரலாற்றில் உற்பத்திக் கருவிகளின் வளர்ச்சிக்கு/மாற்றத்திற்கு ஆன பங்கை நாம் மறுக்கவில்லை. அதைப்போலவே உற்பத்தி முறையில் ஏற்படும் மாற்றத்தின் பங்கையும் நாம் மறுக்கவில்லை. சமூகத்தில் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையில் உள்ள உறவுதான் சமூகத்தின் பல்வேறு நிறுவனங்களினுள்ளும் மக்களிடையில் ஏற்படும் உறவு நிலைகளுக்கு ஆதாரம் என்பதைக் கூட நாம் மறுக்கவில்லை. குடும்பத்தினுள்ளும், கல்வி நிறுவனங்கள் முதலியவற்றினுள்ளும் முதலாளி, தொழிலாளி உறவை நாம் பார்க்கத்தான் செய்கிறோம். ஆனால் இதே படிவத்தில் உறவுகள் அமைந்திருக்கின்றன என்று சொல்லிவிட முடியாது. முன்னைய நிலவுடைமைச் சமூகக் கூறுகள் இவற்றினுள் ஆதிக்கம் பெறவும் வாய்ப்புக்கள் இருக்கின்றன. உற்பத்திக் கருவிகள் பற்றிக் குறிப்பிட்டோம். உற்பத்திக் கருவிகளின் நுட்பங்களை உள்ளடக்கிய அறிவியல் அறிவு முதலியவற்றை மக்களோடு சேர்த்துத்தான் காண வேண்டியிருக்கிறது.

அடித்தளம், மேற்கட்டு என்று ஒரு தேவைக்காக நாம் பிரித்துப் பார்த்தாலும் மேலும் நுட்பமாகப் பார்க்கிற பொழுது இவற்றின் கூறுகள் அனைத்தும் ஒன்றை மற்றது சார்ந்ததாகவும், ஒன்றினுள் மற்றது/மற்றவை ஊடுருவுவதாகவும் அமைவதைப் பார்க்கிறோம். இவை அனைத்துமே இயங்குநிலையில் உள்ளன. உற்பத்திக் கருவிகளின் மாற்றத்தோடு உற்பத்திமுறை மாறுகிறது என்றும், உற்பத்தி முறைக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் மோதல் ஏற்படுகிற பொழுது புரட்சி வெடிக்கிறது என்றால், இதன் விளைவாக நாளடைவில் மேற்கட்டு மாறுகிறது என்றும் கூறுகிறார்கள். இத்தகைய சமூக மாற்றத்திற்காகப் புரட்சிகர இயக்கம் உழைக்கவேண்டும் என்றும் கூறுகிறார்கள். அதற்குப் பெயர் புரட்சிகரமான அரசியல். அதற்குரியது மார்க்சிய சித்தாந்தம் அல்லது மெய்யியல். ஊன்றிப் பார்த்தால் மெய்யியலின் தோற்றம் இல்லாமல் அரசியல் உருவாக்கம் இல்லை, கட்சி இல்லை, பேராட்டங்கள் இல்லை. அப்படியானால் அடித்தளத்தை மாற்றுவதற்கான ஆயத்தங்களைச் செய்வதற்கு அரசியலும் மெய்யியலும் தேவைப்படுகின்றன. இவற்றில் எது முதல், எது இரண்டாவது என்று நாம் பட்டிமன்றம் நடத்தவேண்டியதில்லை. இவை அனைத்துமே இயங்கியல் உறவு உடையவை. முதலாளியச் சமூகச் சூழலில் சோசலிசம் நோக்கிய சமூகமாற்றம் தேவைப்படுகிற

சூழலில்தான் இத்தகைய பிரிவினைகள் நம் சிந்தனைக்குள் ஏற்பட்டன. இத்தகைய போக்கின் விளைவுகளையும் பார்த்துவிட்டோம்.

ஆகவே அடித்தளம் மேற்கட்டு என்ற பிரிவுகளையும் இவற்றினுள் அடங்கிய கூறுகளையும், இவற்றின் கட்டமைப்பிலிருந்து கலைத்துப் போடுவதைத் தவிர்க்க இயலாமல் இன்று நாம் செய்ய வேண்டியிருக்கிறது. சமூகத்தில் பொருளியல் வடிவிலான மாற்றங்களை முன்நிறுத்துவதற்கான தேவைகள் இன்றும் குறைந்து விடவில்லை. சரியாகச் சொன்னால் இத்தகைய தேவை இன்று பலமடங்கு அதிகரித்துள்ளது. ஆனால் அதேசமயம் பொருளியலுக்கு அழுத்தம் தருவதற்குப் பிற கூறுகளின் பங்கைக் குறைப்பதன்மூலம் பொருளியல் மாற்றத்தையும் நாம் பின்னுக்குத் தள்ளுகிறோம் என்ற உண்மையும் இன்று தெளிவாகிவருகிறது. அரசியல்வாதி அல்லது கட்சிக்குமட்டுமே முதன்மை என்பது அவனுடைய அதிகாரத்திற்கு மற்றவர்கள் உட்படவேண்டும் என்பதாகிறது. இது இன்று சாத்தியமில்லை. அதிகாரம் மனிதனை அழிக்கிறது. அமைப்புக்கள் தேவை என்றாலும், அமைப்பை அதிகாரம் இறுக்கிவிடக் கூடாது. அது மக்களின் செயல்திறனை ஒடுக்கும். வாழ்வியல் பார்வையை அழிக்கும். இந்த அடிப்படையில்தான் இலக்கியத்தின் தனித்தன்மையை நாம் வேண்டுகிறோம். வரலாறு மற்றும் சமூகத்தின்வழியே நடைபெறும் இயங்கியலை இலக்கியத்தின் படைப்புத்திறன் குறித்து நாம் அழுத்தமாக பேசுகிறோம். எல்லா மனிதர்க்குள்ளும் படைப்புத்திறன் மேம்பட வேண்டும் என்கிறோம். படைப்புத்திறனின் வளர்ச்சியில்தான் மனித ஆளுமை செழிக்கும் என்று கூறுகிறோம். மனிதனின் படைப்புத் திறன்களை அழிப்பதாகிய உடைமைச் சமூகத்தின் அழிவில்தான் மனிதனின் படைப்புத்திறன் மேம்படும் என்று கூறுகிறோம். வாழ்வியலைப் பற்றிய முழுமையான பார்வையைத் தனக்குள் தரித்துக்கொள்வது இலக்கியம். இதன் காரணமாகத்தான் இலக்கியம் பற்றி இங்கு நாம் கூடுதலாகப் பேசுகிறோம். வாழ்வியலை இலக்கியம் தனக்குள் முழுமையாக உள்வாங்கிக் கொள்ளும்பொழுதுதான் இலக்கியமும் சிறக்கும்.

## 5

வர்க்கங்கள் தோன்றாத ஆதிப் பொதுமைச் சமூகத்தின் பொதுமை உணர்வு இலக்கியவாதிக்குள் தங்கியிருக்கிறது என்ற அடிப்படையில் இலக்கியவாதியையும் மனிதனுக்குரிய வாழ்வியலையும் நாம் பார்த்து வருகிறோம். சரியாகச் சொன்னால் இலக்கியவாதி தன் ஆழ்மனத்தில் வர்க்கச் சார்பு அற்றவனாக இருக்கிறான். மனத்தின்

மேற்பரப்பில் வர்க்கம், சாதி, பொருள், அதிகாரம் ஆகியவற்றின் பார்வைகொண்டவனாக இருக்கிறான் என்றாலும், ஆழ்ந்துசெல்லும் பொழுது வர்க்கம், சாதி, முதலியவற்றைக் கடந்தவன் ஆகிறான். இவ்வாறு கடப்பவனைத்தான் சிறந்த இலக்கியவாதி, பெருங்கவிஞன் என்று நாம் கூற முடியும்.

சமயவாதிகள் இறைவனுக்கும் மனிதனின் ஆன்மாவுக்கும் ஏதோ ஒருவகையில் தொடர்பு கூறுகிறார்கள். இறைவனும் ஆன்மாவும் ஒன்றுதான் என்றும், இரண்டும் வேறுவேறு என்றும், ஒன்றோடொன்று ஊடாடுகிறது என்றும் பலவகைகளில் உறவு சொல்கிறார்கள். சமயம் கூறும் ஆன்மா, ஆன்மீகம் என்பதற்கும், வர்க்கம் சாதி ஆகியவற்றைக் கடந்தவன் இலக்கியவாதி என்பதற்கும் உறவு சொல்வதற்கில்லை. அதாவது பிரபஞ்சத்தோடு கலந்தும் நிறைந்தும் இருப்பவனாகிய இறைவன் மனித ஆன்மாவுக்குள் இருப்பதன் காரணமாகத்தான் மனிதன் ஆழ்மனத்தில் தான் என்பவன் அற்றவனாக இருக்கிறான் என்று சொல்வதற்கில்லை. மனிதனுக்குள் சமயம் இறைமையைக் காண்கிறது என்பதை நம்மைப் பொறுத்தவரை வேறுவகையில் புரிந்து விளக்குகிறோம். பிரபஞ்சமும், இயற்கையும், வரலாறும் மனிதனுக்குள் வந்து கலக்கின்றன என்பதாக இதை விளக்குகிறோம். குழந்தைப் பருவத்திலேயே இவ்வகை உணர்வுக் கலப்பு ஏதோ ஒரு வகையில் ஏற்படுகிறது. குறிப்பாகக் கிராமப் புறங்களில் இயற்கைச் சூழலில் வளரும் குழந்தை/சிறுவனுக்குள் இத்தகைய உணர்வு ஆழப் பதிகிறது என்று கூறுவதில் தவறு இருக்க முடியாது. வெட்ட வெளிகளில், பரந்த நிலப்பரப்புகளில், மரச்செறிவுகளுக்கிடையில் தன் தோழர்களோடு, உயிர்வகைகளோடு இவன் ஓடி ஆடிக் கலந்து பழகி இந்த உணர்வைப் பெறுகிறான். நான் என்ற உணர்வு இவனுக்குள் உறுதிப்படுவதற்குமுன்பே இந்தப் பொதுமையுணர்வு அவனுக்குள் பதிந்து விடுகிறது. இந்த உணர்வுதான் பிறகு, அன்பாய், கருணையாய் இவனுக்குள் பொங்குகிறது. மனிதச் சமூகச் சூழலில் தனக்குள் இவன் பிளவுபடுகிறான். சிறுத்துப் போகிறான் என்ற போதிலும், தன் ஆழ்மனத்தில் பொதுமையுணர்வை இவன் இழந்துவிடுவதில்லை. இந்தப் பொதுமையுணர்வோடு கலந்து விடுவதற்காகத்தான் இவன் தியானம் பழகுகிறான். திரும்பத் திரும்ப மலைகளையும், காடுகளையும், கடலையும் தேடிச் செல்கிறான். பேராறுகள் இவனைக் கவர்கின்றன. பெரிய வானம் இவனுக்குள் வந்து போகிறது.

வானமும், கடல் முதலிய இயற்கைப் பேரழகும் வர்க்கம் அற்றவை; சாதி அற்றவை. இவற்றுக்குள் "நான்" இல்லை; அதிகாரம் இல்லை. ஆகவேதான் இயற்கைச் சூழலில் மனிதன் தன்னை இருத்திக்கொள்ள விரும்புகிறான்; தன்னை இழக்க விரும்புகிறான்.

சமூகச் சூழலில் காயப்படும் பொழுதெல்லாம் இயற்கையை, தனிமையைத் தேடிச்செல்கிறான். இயற்கை இவனது காயத்தை ஆற்றுகிறது. அதாவது இயற்கை, இவனுக்குள் இருக்கிற பொதுமை உணர்வைத் தூண்டுகிறது. சமூகச் சூழலில், மனிதனுக்குள் ஏற்பட்டு இருக்கிற வக்கிரங்கள் முதலியவை ஏன் ஏற்பட்டன என்பதைப் புரிந்து கொள்கிறான், பொறுத்துக் கொள்கிறான். தானும் அவ்வாறு பிறருக்கு ஏற்படுத்திய காயங்களை நினைத்துக் கொள்கிறான். தனக்குக் காயம் ஏற்படுத்திய இன்னொரு மனிதனை இவன் அந்நியனாக இப்பொழுது கருதுவதில்லை. அவனுடைய சூழலில் தானும் இருந்திருந்தால் இப்படித்தான் "நானும் நடந்து கொண்டிருப்பேன்" என்ற உணர்வு கொள்கிறான். இந்தப் பொதுமை உணர்வு அவனுக்குள் நிரந்தரப்படப்பட அவன் ஒருவகையில் சந்நியாசி ஆகிறான், தான் அற்றவன் ஆகிறான். ஆதிப்பொதுமைச் சமூகத்தவனை ஆதிவாசி என்று கூறுவதைப்போலவே சந்நியாசி ஆதிவாசி என்று கூறுவதைப்போலவே சந்நியாசி என்று கூறுவது கூடப் பொருந்தும்.

சிறுகதை நாவல் முதலியவற்றை ஒருவர் எழுதும்பொழுது அவர் எத்தகைய மனநிலையில் செயல்படுகிறார் என்பதைச் சற்றுக் கூர்ந்து கவனித்தால் ஓர் உண்மையை நாம் புரிந்துகொள்ள முடியும். எந்த ஒரு மனிதனையும் அவனது சூழலில் வைத்துப் புரிந்து கொள்வதோடு அவனுக்கான நியாயத்தோடுதான் இலக்கியவாதி அவனை ஒரு பாத்திரமாகப் படைக்க முடியும்.

சாதாரண வாழ்வில் மனிதர்களை எதிர்ப்படும்பொழுது விருப்பு வெறுப்புக்கள் ஏற்படுவது இயல்பு என்றாலும், இவர்களை வைத்து இலக்கியம் எழுதும்பொழுது தன் விருப்புவெறுப்புக்களைத் தன்னிலிருந்து உதறிக்கொண்டுதான் ஓர் இலக்கியவாதி இவர்களைத் தன் படைப்புக்குள் இயங்கவிடுகிறான். தாகூர் முதலிய பெருங்கலைஞர்கள் கூறியதைப் போலத் தன்னால் படைக்கப்பட்ட பாத்திரங்கள் தன்னை இழுத்துக் கொண்டு செல்கின்றன. "நான் பார்வையாளனாகத் தான் அவர்களின் கதையை எழுதிக்கொண்டிருக்கிறேன். அவர்களின் செயல்களில் நான் குறுக்கிடுவதில்லை " என்று கூறுகிறார்கள். டி. எஸ் எலியட் "Dissociation of Personality" என்று கூறியது இதைத்தான் என்று புரிந்து கொள்கிறோம். எழுதும்பொழுது ஓர் எழுத்தாளன் தன்னிலிருந்து, தன் ஆளுமையிலிருந்து விலகி நிற்கவேண்டும். இது வெறும் உத்திமுறை மட்டுமன்று. பழகப்பழக இதுவே பண்பாகிவிடும். இவனைப்பொறுத்தவரை யாரையும் குற்றவாளியாகத் தன் படைப்பில் நிறுத்துவது இல்லை. சூர்ப்பனகைக்கும், இராவணனுக்கும் அவர்களுக்குரிய நியாயங்கள் இருக்கத்தான் செய்கின்றன. இவ்வாறு விருப்பு வெறுப்பு அற்றநிலையில் மனிதர்களைப் பார்க்கப் பழகாதவன்

இலக்கியத்திற்குள் வரவேண்டியதில்லை. வரலாற்றின் முன்னிலையில் வைத்து மனிதர்களை இவன் பார்க்கவேண்டும். எந்த மனிதனுக்குள்ளும் வரலாறு ஏதோ ஒருவகையில் இயங்குகிறது. வரலாற்றின் சில சூழல்களில் மனிதன் தனக்குள் முடங்கி விடுகிறான். இப்படித்தான் ஒருவன் குற்றவாளியாகிறான். காமுகன் ஆகிறான். கோழையாகிறான். அதிகார வெறிபிடித்தவன் ஆகிறான். வைத்தியகாரன் ஆகிறான். சமூகச்சூழல்தான் இப்படி அவர்களை மாற்றியிருக்கிறது. இத்தகைய குற்றங்களில் அவர்களின் பங்கு என்பது மிகச்சிறியதுதான்.

இப்பொழுது நாம் உறுதியாகச் சொல்ல முடியும். இலக்கியவாதி தனக்குள் ஆழ்ந்துசெல்லும் பொழுது, வர்க்கம் சாதி முதலியவற்றைக் கடந்து இயங்குகிறான். இதன் காரணமாகத்தான் கட்சிக்கோ அதிகாரத்திற்கோ இவன் கட்டுப்படுவதில்லை. அரசியல்வாதிக்கு இவன் சேவை செய்ய முடியாது. அதிகாரத்தை உள்வாங்கிக்கொண்ட கட்சி அமைப்புக்கும், அரசு அமைப்புக்கும் இவன் எப்பொழுதும் எதிராகவே இருக்கிறான். ஒரு கலைஞன் என்பவன் இத்தகையவன் தான் என்று "ஹெர்பர்ட் மார்க்யூஸ்" கூறியதை இப்பொழுது நம்மால் புரிந்துகொள்ள முடியும். கலைஞனுக்குச் சித்தாந்தமில்லை என்று இயேனெஸ்டு ஃபிஸ்ஸர்" கூறியதையும் இப்படித்தான் புரிந்துகொள்ள முடியும். இப்படிச் சொல்வதன் காரணமாக இவர்களைச் சமூகப் பொறுப்பு அற்றவர்கள் என்றோ, சமூகத்திலிருந்து விலகிநிற்பவர்கள் என்றோ சொல்வது தவறாகி விடும். வர்க்கம், சாதி கடந்த பொருளுக்கும் அதிகாரத்திற்கும் இடமில்லாத ஒரு சமூகத்தை நமக்குள் இலக்காகக் கொண்டு செயல்படுகிறோம் என்பது உண்மையானால் இத்தகைய கலைஞர்கள் இத்தகைய ஒரு தளத்தில் நின்றுதான் நம்மோடு உறவு கொள்கிறார்கள், நம்மைத் தூண்டுகிறார்கள். இந்த அடிப்படையில்தான், எல்லாக் காலத்து இலக்கியவாதிகளையும் நாம் பார்க்க வேண்டும், மதிப்பிட வேண்டும். இத்தகைய ஆழமான உறவில்தான் ஒருமனிதனுக்குப் பன்முகப் பரிமாணங்கள் வாய்க்கும். இவன்தான் வரலாறு, தத்துவம், பொருளாதாரம், மானுடவியல் எனப்பலவற்றையும் உள்வாங்கிக் கொள்வான். எப்பொழுதும் தன்னை இவன் விரிவுபடுத்திக் கொண்டிருப்பான். இத்தகையவன்தான் லெனினை மயக்கிய பேரிசையைத் தனக்குள் தாங்கியிருக்க முடியும். மார்க்ஸ், எங்கல்ஸ் ஆகியோர் சேக்ஸ்பியர், மில்டன், ஹோமர் எனப் பெருங்கலைஞர்களை இவ்வாறுதான் ரசித்தனர் என்பதை வேறு எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?

# III. தமிழ் மரபின் தடங்கள்

குறிப்பு : மதுரை ஆய்வு வட்டத்தின் சார்பில் 1997 மே 24, 25 தேதிகளில் திராவிட இயக்கம் குறித்த ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. எல்லாவற்றையும் ஒரு மறு ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய காலச் சூழலில் நாம் வாழ்கிறோம். தமிழகத்திலும் திராவிட இயக்கம் குறித்து ஒரு மறுபார்வை செலுத்துவது இன்றைய தேவையாகிறது.

தமிழக வரலாற்றிலிருந்து திராவிட இயக்கத்தை விலக்கிப் பார்க்க இயலாது. பெரியார் முன்னிலைப்படுத்திய திராவிட இயக்கம் மட்டுமல்லாது நெடுங்காலத் தமிழ் வரலாற்றினுள்ளும் திராவிடம் என்று அறியத்தக்க வாழ்வியல், இலக்கண இலக்கியம், மற்றும் மெய்யியல் முதலிய கூறுகளை நாம் கவனிக்க முடியும். தமிழக வரலாற்றைக் கட்டமைக்கிற முதன்மையான கூறுகளில் ஒன்று என்று ஆரியர்/திராவிடர், உறவு/பகை என்பதை நாம் குறிப்பிட முடியும். இனம் என்ற கருத்தியலையும் கடந்து அரசியல், பொருளியல் முதலிய கூறுகளிலும் இந்தப் போக்கை நாம் காணலாம்.

தமிழகச் சூழலில் திராவிட இயக்கங்கள் இன்று நெருக்கடியில் உள்ளன. இதன் காரணமாகத்தான் திராவிட இயக்கம் குறித்த மறு ஆய்வு இன்று தேவைப்படுகிறது. திராவிட இயக்கம் என்றதன் கருத்தியலை இன்றைய உலகச் சூழலுக்கு ஒத்ததாக வளர்த்தெடுக்க வேண்டும்.

மதுரைக் கருத்தரங்கிற்காக நான் எழுதிய நீண்ட கட்டுரையிலிருந்து சில பகுதிகளை இங்கு தமிழ் மரபின் தடங்கள் என்ற தலைப்பில் தொகுத்துத்தருகிறேன். திராவிட மரபு என்பதையும், தமிழ் மரபு என்பதையும் நான் பெரும்பாலும் வேறுபடுத்தவில்லை. 20 ஆம் நூற்றாண்டில் தமிழகச் சூழலில் செயல்பட்ட இயக்கங்கள், தமிழ் மரபு என்பதை எவ்வாறு உள்வாங்கிக் கொண்டன/ பொருள்படுத்தின என்பதுதான் என் ஆய்வின் மையம்.

## 1. தேவை ஓர் உரையாடல்

திராவிட இயக்கத்திற்கும் பிற இயக்கங்களுக்கும் இடையில் உரையாடல் தேவை என்பதை நாம் ஒப்புக்கொள்ளும் பொழுதே, எந்த எந்தக் களங்களில் உரையாடல் சாத்தியப்படும் என்பது பற்றியும் ஆராய வேண்டும். திராவிட இயக்கம் சாதி, மத, பார்ப்பன எதிர்ப்பு என்பதை முதன்மையாகக் கொண்ட ஒரு பகுதியாகவும்,

இந்திய தேசியத்தினுள் தன்னை இணைத்துக்கொண்டு, மைய அரசின் தொழில்கொள்கை முதலியவற்றை ஒப்புக்கொண்டு தமிழகத்தின் மேம்பாட்டை நோக்கமாகக் கொண்டு அரசமைத்து நடத்துகிற திராவிட முன்னேற்றக் கழகம் இன்னொரு பகுதியாகவும், இவர்களைப் போலவே வேறுசில கொள்கைகளுக்கு அழுத்தம் தரும் முறையில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம், மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக்கழகம் என்பனவும் அமைந்துள்ளன. வீரமணியின் தலைமையில் உள்ள திராவிட இயக்கத்தோடு மாறுபட்ட நிலையில் தோழர் ஆனைமுத்து அவர்களின் தலைமையில் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கழகமும் கு. இராமகிருட்டிணன் தலைமையில் இன்னோர் அமைப்பும் ஆனூர் ஜெகதீசன் தலைமையில் பெரியார் திராவிட கழகமும் செயல்படுகின்றன. இவையனைத்தையும் திராவிட இயக்கத்தின் பகுதிகள் என வைத்துக்கொண்டு, இவற்றோடு மாறுபடுகிற வேறு இயக்கங்கள் எவை என்பதை ஒருவாறு தொகுத்துக் கொள்ளலாம். கம்யூனிஸ்டு இயக்கம் இவற்றுள் முதன்மையானது. காங்கிரசு இயக்கத்தோடு உரையாடல் சாத்தியமா என்பது கேள்வி. நெடுமாறன், சுபவீரபாண்டியன், மணியரசன் ஆகியோரின் தலைமையில் அமைந்துள்ள இயக்கங்களும் குறிப்பிடத்தக்கவை. இந்த அமைப்புக்கள் பெரியாரியத்தைக் கூடியவரை ஏற்கக் கூடியவை. அநேகமாகத் திராவிட இயக்கத்தின் பகுதிகளான நாம் பார்த்த சில கட்சிகளும், திராவிட இயக்கக் கூறுகள் சிலவற்றைக் கொண்டதாகத் தெரிகின்ற சில அமைப்புக்களும் பார்ப்பனியத்திற்கு எதிர்நிலை எடுத்துள்ளன.

தமிழகச் சூழலில் திராவிட இயக்கச் செயல்பாட்டுக்கான தேவைகள் இன்றளவும் இருக்கின்றன. இந்துத்துவம் மேலோங்கிவரும் சூழலில் திராவிட இயக்கம் தன் கருத்தியலையும், செயல்பாடுகளையும் சீர்படுத்திக் கொள்ளவேண்டியிருக்கிறது. இந்து முன்னணி தன் செயல்பாடுகளில் தீவிரம் கொண்டுள்ளது. தமிழகத்தில் சாதி அமைப்புக்கள் தொடர்ந்து வளர்ச்சி பெற்று வருகின்றன. சாதிகளுக்கு இடையில் மோதல்களும் நாம் அதிர்ச்சியடையத்தக்க வகையில் கூடுதலாகி வருகின்றன. இந்து முஸ்லிம் மோதல்கள் என்று சொல்லப்படுகின்ற மதக் கலவரங்களும் கூடி வருகின்றன. பல்வேறு வடிவங்களில் புதியபுதிய கடவுள் வழிபாட்டு மன்றங்கள் தோன்றி வருவதையும் நாம் பார்க்கிறோம். மத நிறுவனங்கள், கல்வி நிறுவனங்களை அமைத்துச் செயல்படுத்துகின்றன. இத்தகைய சூழலில் திராவிட இயக்கத்தின் தேவையை நாம் புரிந்து கொள்கிறோம்.

திராவிட இயக்கம் எனத் தன்னைக் கூறிக்கொள்ளும் அதி.மு.க மதநிறுவனங்களோடு ஒத்துழைப்பதில் தீவிரம் காட்டுகிறது. தி.மு.க. வும் மத நிறுவனங்களை எதிர்ப்பதில்லை. மூட நம்பிக்கைகள் பற்றிச்

சிலசமயம் இவர்கள் பேசினாலும், சமூகத்திலிருந்து இவற்றை அகற்றும் முயற்சியில் ஈடுபடவில்லை. பார்ப்பனீயத்தோடு இவர்கள் மோதிக் கொள்வதில்லை. அதேசமயம் மதம் மற்றும் பார்ப்பனியம் பற்றி இவர்களுக்கு ஆழ்ந்த பார்வையும் இல்லை. இதே விமர்சனத்தைப் பிற திராவிட அமைப்புக்கள் மீதும் வைக்க முடியும். மதம், சாதி. பார்ப்பனியம் ஆகியவை குறித்து விரிவான உரையாடல் இன்றைய சூழலில் தேவை. இந்துத்துவத்தோடு இத்தகைய உரையாடலை நடத்தமுடியாது. ஆனால் பிற இந்துமத அமைப்புக்களோடு உரையாடலுக்குத் தேவை இருக்கிறது.

சாதியை ஒழிப்பதுபற்றி எல்லோருக்கும் ஒருமித்த கருத்து இருக்கிறதென வைத்துக்கொண்டாலும், சாதி ஆதிக்கத்தை முதலில் நாம் களைந்தாக வேண்டும். கலப்பு மணம் முதலியவற்றுக்குக் கூட இன்றளவும் எதிர்ப்புக்கள் நீடிக்கின்றன. தாழ்த்தப்பட்ட மக்கள் எனச் சொல்லப்படுகிற பட்டியலில் உள்ள சில சாதிகள் தம் எழுச்சிக்கான போராட்டங்களைத் தீவிரமாகத் தொடங்கியுள்ளன. இவற்றோடு ஒத்துழைப்பது நம் கடமை. சாதி ஆதிக்க ஒழிப்புக்கான உரையாடலும் இங்கு தேவைப்படுகிறது.

கல்வி நிறுவனங்களை அமைத்து நடத்துகிற மத நிறுவனங்களோடும் உரையாடல் தேவை. மதச்சார்பின்மை என்பது அரசின் கொள்கை என்ற முறையில் இந்த உரையாடலை நடத்தமுடியும்.

தமிழகத்திலிருந்து திராவிட இயக்க வேர்களை என்றைக்கும் களைந்து விட முடியாது. தமிழ்நாட்டு வரலாற்றில் இந்த அளவுக்கு ஆழமாக வேரோடியுள்ளது திராவிடர் இயக்கம். பெரியார் தலைமையில் திராவிடர் இயக்கம் உருவாவதற்கு முன்பே மனோன்மணீயம் சுந்தரனார், மறைமலையடிகள் முதலியவர்கள் திராவிட நாகரிகம் என்று பேசினர். இவர்களிடம் இத்தகைய உணர்வெழுச்சிக்கு நியாயமான காரணங்கள் இருந்தன. இதன் வரலாறு மிக விரிவானது. இத்தகைய வரலாற்றுக்கு முன்பே பல நூற்றாண்டுகளுக்கு முன்பும் ஆரியர் திராவிடர் போராட்டம் இருந்தது/தொடர்ந்தது. எத்தகைய காரணிகளோடு, எத்தகைய பரிமாணங்களில் இந்தப் போராட்டங்கள் நடைபெற்றன என்றெல்லாம் நாம் பார்த்துக்கொள்ள முடியும்.

20 ஆம் நூற்றாண்டு வரலாற்றுச் சூழலில் என்ன நேர்ந்தது? ஆங்கிலேயருக்கு எதிரான விடுதலைப் போராட்டம் அரசியல் களத்தில் அரைகுறையாகத்தான் நடந்தது. சமூக விடுதலைக்கான போராட்டம் தவிர்க்கப்பட்டது. விடுதலைபெற்ற பிறகு சாதி மதம் முதலிய பிரச்சனைகளைப் பார்த்துக் கொள்ளலாம் என்பது காங்கிரஸ்

கட்சியின் கருத்தாக இருந்திருக்கக் கூடும். பொருளியல் துறையில் விடுதலை என்பது பேச்சளவில் மட்டுமே இடம்பெற்றது. ஆங்கில ஆதிக்கத்தோடு சமரசம் என்பது முற்றாக மறுக்கப்படுவதும் இல்லை. காங்கிரஸ் கட்சிக்குள் சாதியுணர்வு மேலோங்கி இருந்தது கண்டு. பெரியார் வெளியேறினார். நாளடைவில் காந்தியையும் காங்கிரஸ் கட்சியையும், பார்ப்பனர்களையும் ஒழிப்பது என முடிவு செய்திருந்தார். ஒரு கட்டத்தில் கம்யூனிஸ்டுக்கள் அவரிடமிருந்து பிரிந்து சென்றனர். சமதர்மம் என்பதைப் பெரியார் கைவிடவில்லை. எனினும் சமதர்மத்திற்கான இயக்கம் தளர்ச்சி அடைந்தது. இவ்வாறு அரசியல், சமூகம், பொருளியல் ஆகிய மூன்று முனைகளும் ஒன்றிணைந்து நடைபெறவேண்டிய விடுதலைக்கான இயக்கம் பிளவுபட்டது. பிளவு பட்டதற்கான அடிப்படைக் காரணம் இவ்வகை இயக்கங்களோடு தொடர்பு கொண்டிருந்த ஏற்றத்தாழ்வான சமூகப்பிரிவுகள்.

ஆங்கிலேயர்கள் நிலக்கிழாரிய முறையை வலுப்படுத்தினர். மன்னர்களையும் விட்டு வைத்தனர். மதநிறுவனங்களில் தலையிடுவதில்லை என்பது அவர்கள் கொள்கை. இவை மட்டுமா? இந்தியாவின் தொழில் மற்றும் வேளாண்மை முதலியவற்றை ஒழித்தனர். இந்தியாவைச் சுரண்டுவதற்கான காலனியாக அமைத்தனர். தமக்குத் தேவையான கல்விமுறையை ஏற்படுத்தினர். தமக்குச் சேவை செய்யும் நிர்வாக அமைப்பை உருவாக்கினர். மைய அரசு, மாநில அரசு எனப் பிரித்துக் கொண்டனர். இரட்டையாட்சி முறையை ஏற்படுத்தினர். அரசு நிர்வாகத்தில் பார்ப்பனர்களுக்கு இடம் அளித்தனர். இந்திய மக்களைக் கொண்டு இராணுவத்தை வலுப்படுத்தினர். தமக்கு விசுவாசமாக இந்தியக் குடிமக்களைத் தயார் செய்தனர். இவ்வாறு தம் காலனி ஆதிக்கத்தை இந்தியர்களைக் கொண்டே வலுப்படுத்திக் கொள்வதற்கான சமூக அமைப்பைத் தோற்றுவித்தனர். இந்தச் சூழலில் விடுதலைக்கான போராட்டங்கள் தீவிரமாக நடைபெறாததில் வியப்பில்லை. பழைய சாதிமுறையும் இத்தகைய அமைப்போடு தன்னைச் சமரசம் செய்து கொண்டது.

திராவிட இயக்கம் தொடக்கம் முதலே வகுப்புவாரி உரிமையை வற்புறுத்தியதன் மூலம் தீண்டப்படாதவர் என்று சொல்லப்படும் மக்களுக்கு ஆதரவாகச் செயல்பட்டது. தேவதாசிமுறை ஒழிப்பு, விதவைத் திருமணம் முதலியவற்றுக்காகப் பாடுபட்டது. இட ஒதுக்கீடு என்ற கோரிக்கை தமிழகச் சூழலில் வலுப்பெற்றதற்குத் திராவிட இயக்கம்தான் முதன்மையான காரணம். நிர்வாகத்தில் பார்ப்பனர் அல்லாதார் இடம் பெறுவதற்கும் திராவிட இயக்கம் முதன்மையான காரணம். இவற்றிற்கு அப்பால் திராவிட இயக்கத்தின் சாதனைகள் என எவற்றைச் சொல்ல முடியும்? சாதி வேண்டாம்,

மதம் வேண்டாம், பார்ப்பனியம் வேண்டாம் என்ற பிரச்சாரத்தின் விளைவுகள் என்னவென்பது இன்று வெளிப்படையாகத் தெரிகிறது.

இவற்றுக்குமேல் கல்விமுறை, அரசு அமைப்பு, தொழில் முறை, வேளாண்மை, மருத்துவம், ஊராட்சி, வணிகம் என்பன குறித்துத் திராவிட இயக்கத்தின் கொள்கைகள் செயல்பாடுகள் எவை என்பதை நாம் ஆராய்ந்து காணவேண்டும். தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்குத் திராவிட இயக்கத்தின்பங்கு என்ன என்பதையும் ஆராய்ந்து அறிய வேண்டும். மேற்கத்திய நாகரிகத்தைத் திராவிட இயக்கம் வரவேற்றது. முன்மாதிரியாகக் கொண்டது. மேற்கத்திய அறிவியலை, தர்க்க முறையைத் திராவிட இயக்கம் ஏற்றது. பகுத்தறிவுப் பார்வையை மேற்கிலிருந்து எடுத்துக்கொண்டது. கூடியவரை மேற்குலகைத் தனக்குள் உள்வாங்கிக்கொள்ளும் முறையில் திராவிட இயக்கத்தின் கருத்தியல் அமைந்தது. இந்திய மரபு என்பதைப் பார்ப்பனிய மரபு என்று புறக்கணித்தது. தமிழ் மரபு என்பதனுள்ளும் பார்ப்பனியச் சார்பைக் கண்டது. இந்தியச் சமூகம் சாதியச் சமூகம்தான் என்றது. தமிழ் மரபிலிருந்து திருக்குறளையும், சித்தர் பாடல்களையும் ஓரளவுக்கு ஏற்றுக்கொண்டது.

அதாவது திராவிட இயக்கம் தன் கருத்தியலை இவ்வாறு நவீனமயப்படுத்திக்கொண்டது என்று சொல்லலாம். தமிழ்ச் சமூகத்தை முழு அளவில் நவீனப்படுத்துவது திராவிட இயக்கத்தின் நோக்கமாகத் தெரியவில்லை. பகுத்தறிவு என்பதோடு திராவிட இயக்கம் தன்னை நிறுத்திக்கொண்டது. திராவிட இயக்கம் இன்றைய வரலாற்றுச் சூழலில் தன்னை நிலைநிறுத்திக் கொள்வதற்கான தகுதிபற்றி நாம் இவ்வகையில் கேள்வி எழுப்புகிறோம். சமதர்மத்தோடு எந்த எந்த முனைகளில் தன்னைத் தொடர்புபடுத்திக் கொள்ள முடியும்? அரசு அமைப்பில் எத்தகைய மாற்றங்களை இந்த இயக்கம் கோர வேண்டும்? சந்தைப் பொருளாதாரத்தோடு என்ன உறவு? தமிழ் மரபை எந்த அளவில் தனக்குள் உள்வாங்கிக் கொள்ளவேண்டும்? தொழில் மற்றும் வேளாண்மைச் சிந்தனைகள் எவ்வாறு இருக்க வேண்டும்? இவ்வாறெல்லாம் திராவிட இயக்கம் தன்னை உருமாற்றிக்கொள்ள இயலுமா? என்பது நம் கேள்வி. இதற்காகத்தான் திராவிட இயக்கத்தோடு உரையாடல்.

# 2. இந்தியாவின் திராவிட மரபு

தமிழ் மரபு என்பதைத் திராவிட இயக்கத்தினர் எவ்வாறு உள்வாங்கிக் கொண்டனர் என்பது பற்றி இப்பொழுது காணலாம்.

எந்த ஒரு சமூகத்திலும் -ஒரு குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலில் பல்வேறு சமூகப்பிரிவுகள் இருக்கின்றன. இவைகளுக்கிடையில் முரண்பாடுகளும், மோதல்களும் இருக்கின்றன. வாழ்நிலை தொடங்கிச் சிந்தனை மற்றும் உணர்வு நிலைகளிலும் ஒத்திசைவுகள், மாறுபாடுகள், முரண்பாடுகள், மோதல்கள் இல்லாமல் சமூக இயக்கம் என்பதும் இல்லை. முன்னைய வரலாற்றின் தொடர்ச்சியும் இவர்களுக்குள் ஊடாடுகிறது. எந்த ஒரு சமூகப்பிரிவும் தனித்து வாழ்வதில்லை, வாழமுடியாது. பிற சமூகப் பிரிவுகளோடு ஏதோ சில வகைகளில் உறவு கொள்வதன் மூலமே தனக்கான வாழ்நிலை மற்றும் சிந்தனைகளைப் பெறமுடியும். வாழ்வியக்கம் என்பது இத்தகைய உறவு கொள்வதன் மூலம்தான் நடைபெறுகிறது.

ஆக, எந்த ஒரு சமூகப்பிரிவையும் புரிந்துகொள்வதற்குப் பிற சமூகப் பிரிவுகளோடு அதுகொள்ளும் உறவு அல்லது பகைமூலமே அறிந்து கொள்ளமுடியும். பிற சமூகப்பிரிவுகளை ஒதுக்கிவிட்டுத் தன் வாழ்வியல் மற்றும் சிந்தனைகளைத் தானாகவே பெற்றுக் கொண்டதாக எந்தச் சமூகப்பிரிவும் உரிமை கொண்டாட முடியாது. வாழ்வியல் என்பது ஆண் பெண் உறவு, தொழில்வகை உறவுகள், வணிகம் வேளாண்மை, கல்வி மருத்துவம், அரசு, மெய்யியல் இலக்கியம், கலை, தர்க்கம், உணவு, உடை, இருப்பிடம் கட்டடம் எனப்பலவற்றினுள்ளும், சில அல்லது பல சமூகப்பிரிவுகளின் உறவுகள் இயக்கம் கொள்வதைக் காண்கிறோம். பலசாதிகளும் இவ்வகையில் உறவு கொண்டிருக்கின்றன. இதன் காரணமாக, தூய்மை, உன்னதம், தனித்தன்மை, கற்பு, நேர்மை, தியாகம், தவம், தானம், முதலியவற்றையும் இவற்றின் எதிர்க்கூறுகளிலிருந்து பிரித்துக் கொள்ள இயலாது. சில சமயம் சமூகத்தின் ஒரு பிரிவோ அல்லது ஒரு சிந்தனை மரபோ தன்னை வளர்த்துக் கொள்வதற்காகத் தனி இயக்கம் கொள்வது என்பதுகூடத் தற்காலிகமான நடைமுறையாகத் தான் இருக்க முடியும். இச்சமயங்களில் சமூகப்பிரிவுகளுக்கிடையில், சிந்தனை மரபு முதலியவற்றுக்கு இடையில் பகைமை தோன்றலாம். இந்தப் பகைமை கூடத் தற்காலிகமாகத் தான் இருக்கமுடியும். பகைமை முற்றி எதிர்நிலைகளில் இறுக நேருமானால் அந்த அளவுக்குச் சமூக இயக்கமும், சிந்தனை முதலியவற்றின் வளர்ச்சியும்

தடைப்படத்தான் செய்யும். இத்தகைய தடைகளைக் கூடியவரை நீக்கிக் கொள்வது அறிவுடைமை.

இந்திய/தமிழ்ச் சூழலில் இத்தகைய இறுக்கங்கள் பல நேர்ந்துள்ளதை இந்த இருபதாம் நூற்றாண்டில் பார்க்கிறோம். ஆரிய நாகரிகம் X திராவிட நாகரிகம் என்பது இரு தீவிர எதிர்நிலைகள். இதைப்போலவேதான் கட்சிகளுக்கு இடையிலும் தீவிர எதிர்நிலைகள், காங்கிரஸ், கம்யூனிஸ்டுக்கட்சி, திராவிட இயக்கம் முதலியவற்றுக்கிடையில் எதிர்நிலைகள். இவைபற்றி இப்பொழுது சுருக்கமாகப் பார்த்துக் கொள்ளலாம்.

ஆரிய நாகரிகம் தான் இந்திய நாகரிகம் எனச் சிலர்/பலர் சாதிக்கின்றனர். ஆனால் உண்மையில் இந்திய நாகரிகம் என்பதன் அடித்தளம் முழுவதும் திராவிட நாகரிகமாகத்தான் இருக்கிறது என்பது டாக்டர் ராதாகிருஷ்ணன், சுனித்குமார் சட்டர்ஜி முதலிய ஆய்வாளர்களின் துணிபு. ஆரியர் வருவதற்கு முன்பு இந்தியா முழுவதும் வாழ்ந்தவர்கள் திராவிடர்கள் அல்லது நாகர்கள். சாங்கியம், வைசேடிகம், யோகம், உலகாயதம், சாக்தம், சமணம், பௌத்தம் முதலிய சிந்தனைப் போக்குகள் விளைகின்ற நிலமாக அன்றைய "இந்தியா" இருந்தது. நூற்றுக்கணக்கான இனக்குழுக்கள், பல்வேறு வகையான வாழ்க்கை முறைகளோடும் சடங்குகளோடும் இங்கு வாழ்ந்தனர். இந்தச் சூழலில் ஆரியர் வந்து சேர்ந்தனர். பகை நிலவியது ஒருகாலம். உறவும் தொடர்ந்தது. நாகரிக மோதலைப் போலவே கலப்பும் நேர்ந்தது. ஆரிய மரபுகள் என்று சிலரால் உரிமை கொண்டாடப்படும் மரபுகளில் பெரும்பான்மை திராவிடக் கூறுகளை உள்வாங்கிக் கொண்டவை. வேள்விகள் என்பதை ஆரிய மரபு எனப் பிரித்துச் சொல்லமுடியும். வேதங்களினுள்ளும் இருவகை மரபுகள் காணப்படுகின்றன. ஆரிய மரபு இறுக்கம் கண்டபொழுது அதற்கு எதிர்மரபு எனப் புத்தமும், சமணமும் மேலோங்கின. தொடக்க காலத்தில் ஆரிய மரபினுள் துறவு இல்லை. மட நிறுவனங்கள் இல்லை. தவம் என்ற போக்கு தொன்மையான திராவிட மரபு. எந்த ஒரு தொன்மைச் சமூகத்திலும் தவம் போன்ற முயற்சிகளையும், இயற்கையை வசப்படுத்துவதற்கான பல்வேறு சடங்குகளையும் நாம் காண்கிறோம். திராவிட மரபிலும் இத்தகைய கூறுகள் இருக்கத்தான் செய்கின்றன. நால்வருண முறையை ஆரிய மரபு என்று கூறமுடியும். சாதி என்பது திராவிடக் கூறுதான். கடவுள் என்றகருத்தாக்கம், கோயில், உருவ வழிபாடு, பக்தி, புராணம் முதலியவை திராவிடக் கூறுகள்தான். இந்தியச் சூழலில் சாதி முதலிய கூறுகளை வலுப்படுத்துவதில் ஆரியமும் திராவிடமும் ஒத்துழைத்தன. விதி, பல பிறப்புக்கள் முதலிய சில கொள்கைகள் நிலைபெறுவதில்

இவ்விரு மரபுகளும் ஒத்துழைத்தன. பகையும் தொடர்ந்து நிலவத்தான் செய்தது. 19,20-ஆம் நூற்றாண்டுச் சூழலில் பகைநிலை முதன்மைக்கு வந்தது. எதிர்நிலைகள் இறுகின. திராவிட இயக்கம் இத்தகைய எதிர்நிலைகளில் ஒன்று, காங்கிரசுக்குள், இந்து மகா சபைக்குள் ஆரியர்களின் ஆதிக்கம் செயல்பட்டது.

அத்வைதம் என்பது ஆரிய மரபு எனச்சிலர் கூறுவது உண்மையில்லை. சங்கரர்தான் அத்வைதத்தைப் பௌத்தரிடமிருந்து பெற்றவர் என்பது வரலாறு. அத்வைதம் என்பது வேதங்களிலேயே காணப்படுகின்ற இறை-மனித உறவு வகைகளில் ஒன்று இயற்கையைத் தனக்குள் வைத்து, அதன்வயப்பட்டு மனிதன் தன்னைப் பார்க்கிற பார்வை இயல்பான கவித்துவம் பொருந்திய பார்வை. எந்த மனிதச் சமூகமும் இத்தகைய பார்வையைக் கொண்டிருக்கிறது. இதை அத்வைதம் எனத் தனியே பிரித்து ஆரியர்க்கு உரிமைப்படுத்துவது, வரலாற்றையும் மனித அனுபவத்தையும் மறுப்பதாகும். பிரம்மத்தை உணர்ந்தவன் பிராமணன் என்று கூறுகிறார்கள். எல்லா உயிர்களுக்குள்ளும் இறைவனைக் காண்பவன் பிராமணன் என்றால் இந்தக் கருத்தோடு நமக்கு முரண்பாடு இல்லை. இப்படிப் பார்ப்பவன், இயற்கையோடும், சமூகத்தோடும் தன்னைக் கரைத்துக் கொள்வான். இவனுக்குப் பூணூல் தனிச்சின்னமாக முடியாது. சாதியில் தான் உயர்ந்தவன் என்று இவனால் சொல்ல முடியாது. இப்படிச் சொல்பவன் பிரம்மத்தை அறிந்தவன் அல்லன். ஆனால் சொற்களில்மட்டும் பிரம்மத்தை ஓதி, மக்கள் சமூகத்தைப் பாகுபடுத்திப் பகைமை வளர்த்த பிராமண சமூகம் என ஒன்று இந்தியாவில் தோன்றத்தான் செய்தது. இவர்கள்தான் ஆரியமரபு மேலானது, வேதங்கள் தங்களுக்கே சொந்தம், தாங்கள் தூயவர்கள் என்றெல்லாம், உண்மையைத் திரித்துப் பேசுபவர்கள்.

ஆரிய மரபும் திராவிட மரபும் கலந்ததன் விளைவாகச் சைவம் வைணவம் முதலிய சமய இயக்கங்கள் இந்தியாவில் வலுப்பெற்றன. இவற்றினுள்ளும் திராவிட மரபின் அடித்தளப் பண்பையே நாம் பெரிதாகக் காண்கிறோம். திராவிட மரபு தெய்வத்தை மறுக்கவில்லை. வழிபாடு சடங்கு முதலியவற்றை மறுக்கவில்லை. திராவிட மரபில் பெண் தெய்வத்திற்குக் கூடுதலான அழுத்தம் உண்டு. சக்தி இன்றிச் சிவம் இல்லை என்பது திராவிட மரபு. உலகியல் வாழ்க்கையோடு இறைவன் ஒத்துச் செல்லவேண்டும் என்பது திராவிட மரபு. முற்றான துறவைத் திராவிட மரபு ஏற்பதில்லை. திராவிட மரபின் ஆதாரம் வேளாண்மை. இதை வேளாளர் மரபு என்று மாற்றுப்பெயர் சொல்வதிலும் தவறில்லை. இயற்கையோடு ஒத்து இயங்குவது வேளாளர் வாழ்க்கை. இதன் காரணமாக இயற்கையின் கருணை

என்ற பண்பு வாழ்வியலுக்கு வந்து சேருகிறது. விருந்தோம்பல், முதலிய நற்குணங்கள் இதன் வெளிப்பாடு. இந்திரன், வருணன், பிரம்மன் முதலிய தெய்வங்கள், ஆரியமரபு சார்ந்த தெய்வங்கள் என வைத்துக் கொண்டால் பின்னர் அந்தத் தெய்வங்கள் செல்வாக்கு இழந்ததையும், சிவன் திருமால் முதலிய தெய்வங்களுக்கு முதன்மை ஏற்பட்டதையும் பார்க்கிறோம்.

இந்திய மரபு என்பதில் ஆரிய மரபு என்பதைக் காட்டிலும் கூடுதலான அழுத்தம் உடையது திராவிட மரபு என நம்மால் புரிந்து கொள்ள இயலுமானால் இந்தியாவைத் திராவிட இந்தியா என்றே நாம் சொல்லமுடியும். உலகியலுக்கு அழுத்தம் தரும் திராவிட மரபை, உலகியலை மறுக்கிறது என்ற முறையில் ஆரிய மரபிலிருந்து வேறுபடுத்திப் பார்க்க இயலும். உழவர்கள், கைவினைஞர்கள் முதலிய பெரும்பகுதியினரை உள்ளடக்கியது திராவிட மரபு. சாதியில் தாம் உயர்ந்தவர், தாங்கள் தூய்மையானவர் என்பதை முதன்மைப்படுத்திப் பிராமணர் கூறும் மரபை ஆரிய மரபு என்று பெயரிட முடியும். நம் காலச் சூழலில் இந்திய தேசியம் என்று பேசும் மரபை ஆரிய மரபு என்றும் சொல்லமுடியும்.

மக்கள் நலம் சார்ந்தது திராவிட மரபு என்ற முறையில் முதலாளியம் ஏகாதிபத்தியம் ஆகியவற்றை மறுப்பது திராவிட மரபு என்று சொல்லலாம். சமத்துவம் சமூகநீதி என்பவை திராவிட மரபு, இவற்றை மறுப்பது ஆரியமரபு. பெண்ணைப் போற்றுவது திராவிடமரபு ஆண் ஆதிக்கத்தைத் தூண்டுவது ஆரிய மரபு. கடவுளை மனிதனுக்குள் வைத்துப் பார்ப்பது திராவிட மரபு. கடவுள் இல்லாமல் உலகியல் வாழ்வை ஒழுங்காக வைத்துக்கொள்ளமுடியும் என்பது திராவிட மரபு. நிறுவனங்களிலிருந்து மதத்தைப் பிரித்துப் பார்ப்பது திராவிட மரபு. நிறுவனமயப்படுத்தல் ஆரிய மரபு. சித்தர் மரபு அசலான திராவிட மரபு. மீண்டும் நால்வருணம் தேவை, சாதி தேவை என்பது ஆரிய மரபு. தவிர, திராவிட மரபைத் தமிழ் மரபு எனக் காண்பதில் தவறு எதுவுமில்லை.

## 3. திராவிட இயக்கங்கள் வழியே - தமிழ் மரபு

தமிழகச் சூழலில் செயல்பட்ட முரண்பாடுகளின் வழியே ஒவ்வோர் இயக்கத்தவரும் தமிழ் மரபு என்பதை எவ்வாறு புரிந்து கொண்டனர் அல்லது செரித்துக் கொண்டனர் என்பதை இனிப்பார்க்க முடியும். பெரியாரின் திராவிட இயக்கமும், அண்ணாவின் தலைமையில் அமைந்த திராவிட முன்னேற்றக் கழகமும் தமிழ்மரபு என்று செரித்துக் கொண்டதில் சில அழுத்தமான வேறுபாடுகள்

இருக்கின்றன. பெரியார் சிலசமயம் தமிழ்மரபு என்பதைப் புராண மரபு, மத மரபு என்றுகூடக் கண்டித்தார். தமிழைக் காட்டு மிராண்டிகளின் மொழி என்று கூடப் பேசினார். திருக்குறள் கருத்தரங்குகள் நடத்தினார். திருக்குறளில் சுமார் 300 குறள்கள் தான் தேறும் என்றார். சாதியையோ மதத்தையோ வெளிப்படுத்தும் தமிழ் இலக்கியக் கூறுகளை அவர் ஆரியம் என விளக்கினார். சித்தர்களை அவர் பாராட்டத் தவறவில்லை. கண்ணகி, கற்பு என்றெல்லாம் அவர் மதித்துப் பேசவில்லை. பெண்களின் விடுதலை அவரைப் பொறுத்தவரை முழுஅளவில் தேவை. குன்றக்குடி அடிகளாரோடு அவர் ஒத்துச் செயல்பட்டார். அடிகளாரை அவர் வணங்கினார். சில சந்தர்ப்பங்களில் ஒரு கடவுளையாவது வைத்துக் கொள்ளட்டும் என்றார். இலக்கியங்கள் ஒழுக்கத்தைப் போதிக்க வேண்டும், அறிவை வளர்க்க வேண்டும் என்பது பெரியாரின் கருத்து. தமிழ் மரபு என்பதிலிருந்து அவர் எடுத்துக் கொள்வதற்கு அதிகம் இல்லை எனினும் சமத்துவம்/சமநீதி, பார்ப்பன மறுப்பு, மனிதனுக்கு அழுத்தம் போன்ற சில கூறுகளை அவர் எடுத்துக்கொள்கிறார்.

திராவிட இயக்கத்தோடு அண்ணா முதலியவர்கள் நெடுங்காலம் இருந்த நிலையிலும், தமிழின் பெருமை என்று தொடங்கிப் பலவற்றை அவர்கள் பேசினார்கள். தமிழன் உலகளந்தவன், அரசாண்டவன், கடல்கடந்து வாணிகம் செய்தவன், தன் நாகரிகத்தைப் பரப்பியவன் என்பதற்கு இவர்கள் அழுத்தம் தந்தனர். அரசியல் கட்சியாகத் திராவிடர் இயக்கம் தன்னை மாற்றிக் கொள்வதில் பெரியாருக்கு அக்கறை இல்லை. அரசுஅதிகாரம் மனிதனை நாசப்படுத்திவிடும் என்பது அவர் கருத்து. காங்கிரஸ் கட்சி எவ்வாறு கெட்டது என்பதையெல்லாம் அவர் நேரடியாகப் பார்த்தார். சமூகமாற்றம்/ புரட்சிதான் முக்கியமேயன்றி அரசைக் கைப்பற்றி ஆட்சிசெய்வது அல்ல என்பதில் பெரியார் அழுத்தமாக இருந்தார். சமூகநீதி மறுக்கப்பட்ட மக்களைப் பற்றித்தான் அவர் சிந்தித்தார். சாதி மதம் முதலியவற்றை அவர் கடுமையாகச் சாடியது இதனால்தான். மனித உரிமை, தாழ்த்தப்பட்டவர்களுக்கு, பெண்களுக்கு மறுக்கப்படுவதை அவரால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. ஆகவேதான் திருமண உறவு முதலியவற்றை அவர் எதிர்த்தார். உடைமைமுறை அவருக்கு உடன்பாடில்லை. அரசு அமைப்பு என்ற ஒன்று இல்லாத அராஜகம் அவருக்கு உடன்பாடு. அவரது தன்மானம் என்ற மெய்யியலை அராஜகவாதம் என்பதற்கு நிகராகச் சொல்லலாம்.

அண்ணாவுக்கு அரசு அதிகாரம் வேண்டும். சேர, சோழ, பாண்டியர்கள் முன்பு நாடாண்டதைப் போலத் தமிழன் இன்று அரசாள வேண்டும். அண்ணாவுக்கு உலக அரசியல் தெரிந்திருந்தது.

ஐரோப்பிய வரலாறு முதலியவற்றைக் கல்லூரி வாழ்வில் கற்றிருந்தார். மேற்கத்திய மக்களாட்சி அவருக்கு உடன்பாடு. முதலாளியத்தை அவர் திறனாய்வு செய்த போதிலும், சீர்திருத்தப்பட்ட ஒரு முதலாளியத்தை அவர் ஏற்றார். தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இடையில், ஆளும் கட்சிக்கும் எதிர்க்கட்சிக்கும் இடையில் சமரசம் ஏற்படுத்திக்கொள்வதை அவர் அரசியல் என்று கணித்தார். ஒன்றேகுலம், ஒருவனே தேவன் என்றார். பெரியாருடைய அணுகுமுறைக்கு இந்தப் போக்கு ஒருவகையில் எதிரானதுதான். அரசியல் என்று வந்துவிட்டவுடன் அதன்பகுதியாகிய தேர்தலை மறுக்க முடியாது. இந்நிலையில் பார்ப்பனர், கடவுள், மதம் முதலியவற்றை ஏதோ ஒருவகையில் ஏற்கத்தான் வேண்டும்.

அண்ணாவைப் பொறுத்தவரை ஆழ்ந்த தமிழ் இலக்கியப் பயிற்சியில் தோய்ந்தவர். தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்குப் பாடுபட்டவர்களில் முதல்வரிசையில் அவருக்கு இடம் உண்டு. தமிழ் உரைநடையை, மேடைத்தமிழை, அரசியல் தமிழை அவர் அற்புதமாகப் புதுப்பித்தார். தமிழர் பண்பாடு பற்றி விரிவாகப் பேசினார். தமிழ் இலக்கியத்தில் அகத்திணையின் செல்வாக்கு அதிகம். காதலுக்கு முக்கியத்துவம் உண்டு. காதலைப் போலவே வீரமும் பெரிதாகப் போற்றப்பட்டது. காதலும் வீரமும் தமிழினத்தின் இரு கண்கள் என்றுகூடப் பேசினார். தமிழகச் சூழலில் ஆதிக்கத்தில் இருந்த ஆரியருக்கும் வடவருக்கும் அடிமைப்பட்டிருந்த தமிழ் மக்களை - குறிப்பாக இளைஞர்களைத் திரட்டுவதற்கு இவ்வகை முழக்கங்கள் காரணமாக அமைந்தன.

கருத்தியலில் அண்ணாவைக் காட்டிலும், பெரியாருக்கு நெருக்கமாக இருந்தவர் பாரதிதாசன். தமிழ் இலக்கியத்தைப் பெரியார் ஒதுக்கியது போலப் பாரதிதாசன் ஒதுக்கவில்லை. தமிழின் பக்தி இலக்கியத்தைக் கூடப் பாரதிதாசன் போற்றினார். குமரகுருபரரின் தமிழ் அவரை வெகுவாகக் கவர்ந்தது. முற்றான கடவுள்மறுப்பு அவரிடம் இல்லை. தம் கவிதைகளில் பெண்ணுக்கே அவர் தலைமை தந்தார். பெண் இன்பத்தைப் பெரிதாகப் பாடினாலும் பெண்ணின் வீரத்திற்கு அழுத்தம் தந்தார். பொதுவுடைமைக் கருத்துகளுக்கு அவர் தந்த அழுத்தம்போல, பொதுவுடைமைக் கட்சிக் கவிஞர்களில் எவரையும் சொல்லமுடியாது.

அண்ணாவைப் போலவே அவரது தம்பிகள் என, அண்ணாவின் அன்பைப் பெற்று வளர்ந்தவர்கள் தமிழைப் பலபடப் போற்றினார்கள். கலைஞர் முதலியவர்களுக்கு முக்கியமான இடம் உண்டு. இன்று ஒரு மீள்பார்வை எனப் பார்க்கும்பொழுது, தமிழ் இளைஞர்களை

இவர்கள் இலட்சக்கணக்கில் திரட்டிய அதேசமயம், அரசு அதிகாரத்தைக் கைப்பற்றுவது என்ற நோக்கில் முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்டிருந்தனர். டாடா பிர்லாக்கள் வேண்டாம்; தமிழ் முதலாளிகள் வளரவேண்டும் என்றனர். தமிழுக்குள் இருந்த ஆதிக்கமரபு என்பதைத்தான் இவர்கள் தமக்குள் செரித்துக் கொண்டிருந்தனர். இராசராசனுக்கு விழா எடுத்தல், பெண்ணை ஒரு போதைப்பொருள் எனப் பார்த்தல் - முதலிய பார்வைகளுக்குள் இந்த ஆதிக்க மரபைத்தான் காண்கிறோம். பெரியாரைப் பொறுத்தவரை இந்த ஆதிக்கமரபை முற்றாக வெறுத்தார். தமிழ் இலக்கியத்தை அவர் கண்டித்துப் பேசியதற்குக் காரணம், தமிழ் இலக்கியத்தினுள் அடிமைப்பட்ட சாதிகளுக்கான விடுதலைக் கூறுகள் இல்லை என்று இவர் கண்டதுதான்.

கருணாநிதியைப் பொறுத்தவரை தாழ்ந்த நிலையிலிருந்து மேலுக்கு வந்தவர் என்ற போதிலும், கட்சி அதிகாரத்தைத் தன்கையில் தக்க வைத்துக் கொள்வதில் எப்பொழுதும் முனைப்போடு செயல்பட்டார். ஈ.வி.கே. சம்பத் போன்ற அறிவாளர்கள் இந்த இயக்கத்தினுள் முன்னணிக்கு வர இயலாததற்குக் கலைஞர் முக்கியக் காரணம். தமிழ்த் தேசியம் குறித்துச் சம்பத் அவர்களுக்குக் கூடுதலான அக்கறை இருந்தது. கலைஞரின் தமிழ் உணர்வைக் குறைத்துச் சொல்லமுடியாது. 1965இல் இந்தி எதிர்ப்புப் போர் தமிழகத்தில் காட்டுத் தீயாகக் கிளம்பியபோது, இந்தப் போராட்டத்தில் தம் உயிரைத் தந்து போராடிய மாணவர்களுக்கும் தங்கள் கட்சிக்கும் உறவு இல்லை என்று அண்ணா அறிக்கை விட்டார். மாணவர் இயக்கத்தோடு தன்னை இணைத்துக்கொண்ட கலைஞர் சிறைப்படுத்தப் பட்டார். சங்க இலக்கியம், திருக்குறள் எனக் கலைஞர் நிறைய எழுதினார். கவிதைத் தன்மையோடு கூடிய உரைநடையில் கவிதைகளைத் தந்தார். நாவல்கள், சிறுகதைகள் எனப் பலதுறைகளில் ஈடுபட்டார். நாடகம், சினிமா எனப் பலதுறைகளில் அவரது திறமையைக் குறைத்துச் சொல்வதற்கில்லை. இவர்களைப் போலவே இன்னும் பலரை நாம் குறிப்பிடலாம். இவர்கள் எப்பொழுதுமே, சேரன் செங்குட்டுவன், கண்ணகி, கற்பு என்பனவற்றுக்குள் எளிதாகச் சென்றுவிடுவார்கள்.

வாழ்வியல் கோட்பாடு பற்றி இரண்டு எதிர்நிலைக் கோட்பாடுகளை பிராய்டு முன்வைத்தார். 1. இன்பக் கோட்பாடு, 2. மரணக் கோட்பாடு. இன்பத்தையே வாழ்வின் முதன்மையாகப் பார்த்தது இன்பக் கோட்பாடு. துன்பம், துயரம், போராட்டம், சாவு என்பனவற்றுக்கு முதன்மை தருவது மரணக் கோட்பாடு. இன்பம் என்பதற்கு அழுத்தம் தரும்பொழுது, உடைமை மற்றும் ஆதிக்க

மறுப்பு என்பது இவர்களின் வாழ்நெறியாக இருக்கமுடியும். மரணக்கோட்பாட்டோடு பெரியாரையும், இன்பக்கோட்பாட்டோடு அண்ணா முதலியவர்களையும் நாம் இணைத்துப் பார்க்க முடியும்.

திராவிட இயக்கம் என நாம் பொதுப்படையாகக் குறிப்பிட்ட பொழுதிலும், பெரியாரை முதன்மைப்படுத்துகிற திராவிட இயக்கம் பற்றித்தான் நாம் அழுத்தம் தந்து பேசுகிறோம். பெரியாருக்கு முன்பும் திராவிடம் பற்றிப் பேசிய அமைப்புக்கள் இருந்தன. செயல்பட்டன. தென்மாவட்டங்களில் சைவ வேளாளர்கள் சில திராவிட அமைப்புக்களைத் தோற்றுவித்து இருந்தனர். சைவத்தைப் போற்றியது போலவே தமிழையும் போற்றினர். சைவத்தையும் தமிழையும் இருகண்கள் என்றனர். சைவம் மதம் என்ற போதிலும் இதனுள்ளும், பொருள்முதல் கூறுகள் இருப்பதைக் காண்கிறோம். தமிழக வரலாற்றில் சைவ சமயத்தின் பங்களிப்பை நாம் மறுப்பதற்கில்லை. திருமூலர் முதலிய சித்தர்கள் சைவ சமயத்தின் எல்லைக்குள் புரட்சியாளர்களாகச் செயல்பட்டனர். சைவர்கள் தமிழின் வளர்ச்சியில் பெரும்பங்கு ஆற்றினர்.

பெரியார் தலைமை தாங்கிய திராவிடர் இயக்கம் சைவர்களுக்கு எதிராகச் செயல்பட்டது என்பதும் உண்மைதான். பெரியார் இயக்கத்தினால் பாதிப்புக்கு உள்ளாகிய மறைமலையடிகள் போன்றவர், சைவம் கூறும் புராணக் கதைகளை மறுக்கவும் செய்தனர். சைவ சமயத்தினர் சாதி அமைப்பை மறுக்கவில்லை. திராவிடம் பேசிய சைவ அமைப்பினரே ஆரியத்திற்கு எதிராகச் செயல்பட்டனர். தனித்தமிழைப் போற்றினர். இவர்களின் தனித்தமிழ் முயற்சியைப் பெரியார் மதிக்கவில்லை. இத்தகைய போக்கைப் "பார்ப்பனியம்" என்றுதான் அவர் மதிப்பிட்டார். எனினும் தமிழகச் சூழலில் தனித்தமிழ் இயக்கத்தின் ஆக்கத்தை நாம் மறுப்பதற்கில்லை. தமிழ் மரபு என்பதனுள் சில பழமைவாதக்கூறுகள் இவர்களுக்குள் செயல்பட்டன. எனினும் இவர்களையும் தமிழக வரலாற்றுச் சூழலில் திராவிட இயக்கத்தின் இன்னொரு கிளை என்றுதான் நாம் பார்க்க வேண்டும்.

## 4. மார்க்சிய இயக்கமும் தமிழ் மரபும்

தமிழ் மரபை வரித்துக் கொள்வது தொடர்பாகத் திராவிட இயக்கத்திற்கும், மார்க்சிய இயக்கத்திற்கும் உள்ள வேறுபாடுகளை இங்கு கவனிப்பது பொருந்தும். தமிழ் இலக்கியத்தின் மேன்மை, தமிழ் நாகரிகத்தின் மேன்மை என்றெல்லாம் திராவிட இயக்கம் பேசியதை மார்க்சியர் ஒப்புக்கொள்ளவில்லை. இவர்கள் பார்வையில் சங்ககாலம்

பொற்காலம் அன்று. மன்னராட்சியின்கீழ், மக்கள் போர்களினாலும் வறுமையினாலும் வாடினார்கள். திராவிட இயக்கத்தவரும், தமிழ் அறிஞர்களும் கொண்டாடிய சங்ககாலம் அவ்வளவு தொன்மையுடையது அன்று. சங்க காலத்திலும் அடுத்துவந்த காலத்திலும் மன்னர்களுக்கும் வணிகர்களுக்கும் இடையில் கடுமையான வர்க்கப் போராட்டம் நடைபெற்றது. திருவள்ளுவரும் இளங்கோவும் வணிகச் சார்புடையவர்கள்.

திராவிடர் என்ற கருத்தாக்கம், மேற்குலகில் நீட்சே காலம் முதற்கொண்டு தோன்றி வளர்ந்து, இட்லரின் நாசிசமாக முடிவுபெற்ற, மரபு இனம் (Race) என்பது அன்றி வேறு அன்று. ஆரியர்களிடமிருந்து தமிழர் எவ்வளவோ பெற்றனர். தமிழ் நூல்கள் எல்லாவற்றிலும் ஆரியத்தாக்கம் உண்டு. ஆரியத்தாக்கத்தால் தமிழ் நாகரிகம் செழுமை பெற்றது. தமிழ் இனம் ஒரு தனித்தேசிய இனம் என்ற கருத்துப் பொருந்தாது. திராவிட நாட்டுக் கோரிக்கையோ, தனித்தமிழ் நாட்டுக் கோரிக்கையோ தவறானது. இந்தியா ஒரு தேசமாகி விட்டது.

தமிழ் இலக்கியத்திற்குள் சமதர்மத்தைத் தேட முடியாது. மேற்குலகில் தொழிற்புரட்சியை அடுத்துப் பாட்டாளி வர்க்கம் வளர்ச்சி பெற்ற காலத்தில்தான் மார்க்சியம் தோன்றியது. சமதர்மத்தைச் சாதிப்பதற்கு வழி கூறியது. மார்க்சியம் தோன்றுவதற்கு முன் நிலவியதாகச் சொல்லப்படும் சோசலிசம் என்பது கற்பனா சோசலிசம். தான தர்மங்களை இது முன்வைத்தது. கம்பருக்குள் சோசலிசம் காண்பது பொய்த்தோற்றம். புலவர்கள், அறிஞர்கள் அனைவரும் ஆளும் வர்க்கச் சார்புடையவர்கள். பாட்டாளி வர்க்கம் தோன்றாத அந்தப் பழங்காலச் சூழலில் சோசலிசக் கருத்து இருக்கமுடியாது. பழங்காலம் என்பது இருண்டகாலம் தான். மார்க்ஸ் வந்த பிறகுதான் உலகிற்கே ஒளி பிறந்தது.

– இவ்வாறெல்லாம் மார்க்சிய அறிஞர்கள், மற்றும் கட்சி சார்புடையவர்கள் பேசினார்கள். திராவிட இயக்கத்திற்கும், மார்க்சிய இயக்கத்திற்கும் இடையில் ஏற்பட்ட அரசியல் கெடுபிடியைப் பின்னணியாக வைத்துப் பார்த்தால்தான், தமிழ் மரபு பற்றி மார்க்சியரின் பார்வை நமக்குத் தெளிவாகும். பெரியாரோடு 1933, 34 வாக்கில் மார்க்சியர் முரண்பட்டனர். திராவிட முன்னேற்றக் கழகம் அரசியல் இயக்கமாக வளர்ச்சி பெற்றபொழுது, மக்கள் மத்தியில் அவர்களுக்கு ஏற்பட்டு வந்த செல்வாக்கைத் தடுத்தாக வேண்டும். தமிழ் தமிழினம் என்று பேசுவது குறுகிய பார்வை, இந்தியத் தேசியம் என்பதை மறுக்கும் பார்வை சோசலிசம் என்பது உலகமனிதனை முன்வைக்கிறது.

வர்க்கப் போராட்டம் என்ற பார்வைதான் வரலாற்றிற்கு வெளிச்சம் தருகிறது. இனப்பார்வை மனிதனைக் குறுக்கிவிடும். மனிதசமூகத்தின் பெருமையை இறந்தகாலத்தில் தேட முடியாது. பொற்காலம் என்பது வர்க்கமற்ற எதிர்காலத்தில்தான் தோன்றமுடியும். பழமைப்பற்று என்பது ஓர் ஆற்றலாக முடியாது.

இவ்வாறெல்லாம் மார்க்சியர் திராவிட இயக்கத்தோடு முரண்பட்டனர். இராஜாஜியின் குலக்கல்வித் திட்டத்தை இவர்கள் வெளிப்படையாக எதிர்க்காமல் பின்வாங்கினர். நேருவை அளவு கடந்து ஆதரித்தனர். சுயநிர்ணய உரிமை என்ற கொள்கையைக் கைவிட்டனர். எதற்கெடுத்தாலும் ரஷ்யாவை மேற்கோள் காட்டினர். தம் கட்சிக்குள்ளும் இருந்த தமிழ் உணர்வாளர்களை ஒடுக்கினர். இவ்வாறாகத் திராவிட இயக்கத்திற்கும் மார்க்சிய இயக்கத்திற்கும் இடையில் ஏற்பட்ட வேறுபாடு இன்றுவரை தீர்க்க இயலாத முரண்பாடாக இறுகி இருக்கிறது. சாதிப்பார்வையா, வர்க்கப் பார்வையா என்ற விவாதம் இவர்களைத் தொடர்ந்து பிளவுபடுத்துகிறது

சங்க இலக்கியம் முதலிய தமிழ் இலக்கியங்கள் பற்றி மார்க்சியர் தந்த வெளிச்சங்களைத் திராவிட இயக்கத்தினர் ஏற்கவில்லை. இலக்கிய ஆய்வில் மார்க்சியர் பெற்ற வளர்ச்சியைத் திராவிட இயக்கத்தினர் பெறவில்லை. தமிழ் மறுமலர்ச்சி என்ற பெயரில் திராவிட இயக்கத்தினரின் செயல்பாடுகள் ஒருகட்டத்தில் நின்றுவிட்டன. மார்க்சியர் தமிழ் இலக்கிய ஆய்வில் தொடர்ந்து முன்னேற்றம் கண்டனர். தொடக்கத்தில் திராவிட இயக்கத்தினர் தமிழ்தான் பயிற்சிமொழி என்பதை ஏற்கவில்லை. மார்க்சியர், தொடக்கம் முதலே பயிற்சிமொழி தமிழாகத்தான் இருக்கவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர். மைய அரசின் மொழியாக இந்தியை மார்க்சியர் வரவேற்றனர். திராவிட இயக்கத்தினர் ஆங்கிலத்தை ஆதரித்தனர். இப்படியும் சிலவேறுபாடுகள் இன்றளவும் தொடர்கின்றன.

பெரியாரையோ, அண்ணாவையோ சமதர்மத்திற்கு எதிரானவர் என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை. பெரியாரைப் பொறுத்தவரை முதலாளியத்தை முற்றாக மறுத்தார் என்ற போதிலும் இடைக்கால நிலவரமாக ஏற்றுக்கொண்டார். அரசியல் கட்சியாகத் திராவிட முன்னேற்றக் கழகத்தை உருவாக்கிய அண்ணாவைப் பொறுத்தவரை முதலாளியத்தை மறுக்கமுடியாது. அதைச் சீர்திருத்த வேண்டும் என்பதுதான் அவர் கொள்கை. வர்க்கங்களுக்கிடையில் சமரசம் செய்வதுதான் அரசின் கொள்கையாக இருக்கமுடியும். வர்க்கச் சமரசம் என்ற பார்வை, பெரியாரின் பார்வையாக இருக்கமுடியாது.

அரசு என்பது ஒரு சமுதாய ஒப்பந்தம் என்பதுதான் அண்ணாவின் கொள்கை. அரசு என்பது சுரண்டப்படும் மக்களை ஒடுக்குவதாகிய வன்முறைக் கருவி என்பது மார்க்சியரின் கொள்கை. ஆகவே, வர்க்கப் போராட்டத்தைத் தூண்டு வேண்டும், புரட்சியைக் கொண்டு வர வேண்டும் என்பது மார்க்சியரின் கொள்கை. அநேகமாக காந்தியின் அகிம்சை அண்ணாவுக்கு உடன்பாடு. புரட்சியை நோக்கி முன்னேறாததன் காரணமாக மார்க்சியரும் முதலாளியத்திற்கு வசப்பட்டனர் என்பது வரலாறு. திராவிட முன்னேற்றக் கழகத்தைப் போலவே அரசு அதிகாரத்தில் இடம் பெறுவதை மார்க்சியரும் ஏற்றுக் கொண்ட நிலையில், பெயரளவுக்கு வர்க்கப் போராட்டம் என்று பேசினாலும் செயல்முறையில் வர்க்கச் சமரசத்திற்காகத்தான் மார்க்சியர் நிற்கின்றனர். புரட்சி இயக்கங்கள் குறித்து இப்படி இங்கு நாம் சொல்ல முடியாது.

பெரியாரின் திராவிட இயக்கம் பார்ப்பனியத்தைக் கடுமையாகத் திறனாய்வுக்கு உட்படுத்தியது. மார்க்சியருக்கு இதில் முற்றிலும் உடன்பாடில்லை. ஆரிய மாயை என்று திராவிட இயக்கம் பேசிய பொழுது, இவர்கள் திராவிட மாயை என்றனர். மார்க்சியக் கட்சியைப் பார்ப்பனர்களின் தலைமையிலுள்ள கட்சி என்று திராவிட இயக்கத்தினர் கூறினர். இந்த விவாதத்திற்கும் இன்றுவரை ஓய்வில்லை.

## 5. சிற்றிதழ்களும் தமிழ் மரபும்

இப்பொழுது சிற்றிதழ் வட்டாரம், தமிழ் மரபை எவ்வாறு அணுகியது என்பதையும் பார்த்துக் கொள்ளலாம்.

மணிக்கொடியைப் பொறுத்தவரை தமிழ் மறுமலர்ச்சிக்குப் பாடுபட்டது என்பதில் ஐயமில்லை. மணிக்கொடியின் முதல் ஆசிரியர் "வ.ரா" பாரதியின் சீடர். பாரதியின் தமிழ்ப்பற்று, சாதி எதிர்ப்பு ஆகிய உணர்வுகளை முழு அளவில் உள்வாங்கிகொண்டவர் "வ.ரா". "வ.ரா" வைப் போலவே சீனிவாசனும் தமிழ் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டவர். இவர் பாரதிதாசனை மணிக்கொடி வட்டத்திற்குள் கொண்டுவந்ததில் வியப்பில்லை. தமிழுக்கு அமுதென்று பேர் முதலிய தமிழ் உணர்வு செறிந்த பல கவிதைகளைப் பாரதிதாசன் மணிக்கொடியில் எழுதினார். கருத்தடை பற்றிய பெரியாரின் கருத்தைக்கொண்ட பாரதிதாசனின் பாடல் மணிக்கொடியில் வெளியாயிற்று. பாரதியாரை மகாகவி என மெய்ப்பிப்பதற்காகப் பாரதிதாசன் எழுதிய அற்புதமான கவிதை பாரதிதாசனின் கவிதா மண்டலத்தில் வெளியாயிற்று. பாரதிக்குப்பிறகு பாரதிதாசன்

பெருங்கவிஞராக வளர்ந்து கொண்டிருக்கிறார் என்று கு.பா.ரா. ஒருசமயம் எழுதினார். ஆனால் தான் எதிர்பார்த்தபடி பாரதிதாசன் பிறகு வளரவில்லை என்று கு.பா.ரா வருத்தப்பட்டார். பாரதிதாசனின் முதல் கவிதைத் தொகுப்பு வெளிவந்த பொழுது, புதுமைப்பித்தனைப் போலவே க.நா.சு பாராட்டி எழுதினார்.

மணிக்கொடி இயக்கத்தினர் என்று அறியப்பட்ட குப ரா-வும் க.நா.சு-வும் புதுக்கவிதை முறையைக் கடைப்பிடித்தபொழுது, பாரதிதாசனைப் பொறுத்தவரை மரபுமுறைக் கவிதையே போதுமானதாக இருந்தது. அன்றியும் மரபுக் கவிதைமுறையில் எத்தனையோ சாதனைகளைத் தொடர்ந்து அவர் நிகழ்த்திக் கொண்டிருந்தார். மரபுக்கவிதை தோற்றுவிட்டது என்று பாரதிதாசனை முன்வைத்துச் சொல்வது கடினம். நாளடைவில் மணிக்கொடிக்கும் பாரதிதாசனுக்கும் உறவு இல்லை. பெரியாரை மணிக்கொடி எதிர்க்கவில்லை என்பதையும் இங்கு நாம் கவனிக்க வேண்டும்.

விடுதலைக்கான காங்கிரஸ் இயக்கம் பின்னடைவுக்கு உள்ளான காலச் சூழலில்தான் மணிக்கொடி தோன்றியது. மக்களை அணுகுவதற்கு ஓர் இலக்கிய வட்டத்தைத் தோற்றுவிக்கும் எண்ணம் மணிக்கொடிக்காரர்களுக்குள்ளும் செயல்பட்டது என்று சொல்ல முடியும். பாரதிக்கு அவர்கள் வாரிசுகளாய் அமைந்தனர். பாரதியைத் தமிழ் இலக்கிய மரபினுள் நிலை நிறுத்துவது அவர்கள் நோக்கம். ஆகவே "வ.ரா"-வைப் போலவே பாரதிதாசனும் இந்த இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டதில் வியப்பில்லை. தமிழ் உணர்வைத் தட்டி எழுப்புவதன் மூலம் மக்களை நெருங்கமுடியும் கிளர்ச்சிகொள்ளச் செய்யமுடியும்.

பாரதிதாசனை மையப்படுத்திப் பார்த்தால், "எழுத்து" "கசடதபற" முதலிய இதழ்களின் அணுகுமுறையைப் புரிந்து கொள்ளமுடியும். பாரதியைப் பெருங்கவிஞர் எனக்கொண்டாடிய இவ்விதழ்கள் பாரதிதாசனை ஏற்கவில்லை. திராவிட இயக்கச் சார்பு பாரதிதாசனுக்குள் கவிதையைக் கொன்றுவிட்டது என்பது அவர்களின் கணிப்பு. காலச்சுவடு ஆண்டுமலரில் ஹெப்சிபா ஜேசுதாசன் எழுதிய கட்டுரை ஒன்று நினைவுக்கு வருகிறது. பாரதிதாசன் எழுதியவற்றில் மூன்றுதான் கவிதைகளாக இருக்கின்றன என்பது அவர் மதிப்பீடு. யாத்ராவில் இரவீந்திரன் எழுதிய கட்டுரையும், பாரதிதாசனுக்குள் ஏன் கவிதை செழிக்கவில்லை என்பதுபற்றி விரிவாகப் பேசுகிறது. கவிதை என்பதை முற்றிலும் அரசியல் முதலிய கருத்தியல்களிலிருந்து அவர்கள் பிரித்துப் பார்க்கின்றனர். இவர்களின்

பார்வை நவீனத்துவம் என்பதில் ஐயமில்லை. ஒரு செடியில் பூத்த மலர்தான் இவர்களைப் பொறுத்தவரை கவிதை. மலரைத்தவிர கிளைகளோ, இலைகளோ, வேர்களோ, மண்ணோ எப்படி அழகாக இருக்கமுடியும் என்பது இவர்கள் கேள்வி. ஒரு மலர் மலர்வதற்கு இத்தனை இலைகள்தான்வேண்டும் என்பதுபோல், ஒருகவிதை மலர்வதற்கு இவ்வளவு குறைந்த சொற்கள்தான் தேவை என்றெல்லாம் கூட ஆராய்வது இவர்கள் நோக்கு.

கட்சி மார்க்சியர் பாரதியாரைக் கவிஞராக ஏற்றுக் கொண்டாடுகின்றனர். ஆனால் பாரதிதாசனைக் கவிஞராக நெடுங்காலம் இவர்கள் ஏற்கவில்லை. அரசியல் சூழல் இப்பொழுது இவர்களுக்குள் கருத்தியல் மாற்றத்தை ஏற்படுத்தி இருக்கிறது என்பது வியப்புத்தான். பாரதிதாசனுக்குள் பொதுவுடைமை உணர்வு கொழுந்துவிட்டு எரிந்ததை இவர்கள்முன்பு பார்க்காமல் கண்களை மூடிக்கொண்டனர். இவர்களின் கட்சியில் பாரதிதாசன் இல்லை என்பதால், அவரது பொதுவுடைமை உணர்வை இவர்கள் குறைத்துச் சொல்வதை ஒருவகை ஆணவம் என்பதைத்தவிர வேறு எப்படிச் சொல்ல முடியும்? பொதுவுடைமைக்குத் தாங்கள்தான் சொந்தக்காரர்கள் என்று இவர்கள் முற்றுரிமை கோருவதை வேறு எப்படிச் சொல்ல முடியும்?

மணிக்கொடியைப் பொறுத்தவரை புதுக்கவிதை முறையை ஊக்குவித்த பொழுதிலும், மரபுக்கவிதையை மறுக்கவில்லை. ஆனால் க.நா.சு., செல்லப்பா முதலியவர்கள் மரபுக் கவிதையை மறுத்தனர்; புதுக்கவிதையைப் போற்றினர். கவித்துவ வெளிப்பாட்டிற்கு, ஓசை ஒழுங்கோ, எதுகை மோனையோ, சீர்தளைகளோ தேவையில்லை. உவமை உருவகம் என்று அலங்கரிப்பதில் கவிதை இல்லை. கவிதை என்பது மனத்தின் மொழி. உள்ளத்தின் ஆழத்தில் தோன்றி வெளிப்படும் கவிதை, இயல்பாகவே படிமங்களில் வெளிப்படும். குறைந்த சொற்கள் கவிதை வெளிப்பாட்டிற்குப் போதும், தேவையில்லாத ஒருசொல்கூட இருக்கக்கூடாது. கவிதை என்பது தத்துவம் சொல்லவேண்டியதில்லை. அரசியல் பிரச்சாரத்தின் கருவி அல்ல கவிதை. கவிதை ஓர் அழகுப்பொருள், மனத்தின் கண்டுபிடிப்பு. கவிதைக்குப் பொருள் சொல்லக் கூடாது. ஒற்றைப் பொருளில் கவிதையை முடக்கக் கூடாது. கவிதைக்குப் பன்முகப் பொருள் உண்டு. வாசகனிடத்தில்தான் கவிதை நிறைவுகொள்கிறது.

இவ்வாறெல்லாம் கவிதைக்கு அவர்கள் விளக்கம் கூறினர். இலக்கணத்தில் கவிதையைஅடைக்க முடியாது என்பதும் அவர்கள்

கொள்கை. பழந்தமிழ்க் கவிதைகளில் கொஞ்சம்தான் கவிதையாய்த் தேறும் என்றனர். கவிதைக்கு அவர்கள் கண்ட பொருள் என்பது பல்வகைக் கலைகளினுள்ளும் காணக் கூடியது. கலைகளும் ஒருவகையில் கவிதைதான். இவ்வாறுதான் புதுக்கவிதையை அவர்கள் கண்டனர், படைத்தனர். புதுக்கவிதைமுறை இன்று தமிழில் தங்கிவிட்டது. இப்பொழுது மரபுக் கவிதையா? புதுக்கவிதையா? என்று கேள்வி எழுவதில்லை. அதற்கு மாறாக இது கவிதைதானா? என்ற கேள்விதான் கேட்கப்படுகிறது. அதே சமயம் கவிதை அல்லாத எத்தனையோ, கவிதை என வேடமிட்டுக் கொள்வதும் இன்று அதிகமாக நேர்ந்திருக்கிறது.

எழுத்து, கசடதபற முதலிய சிற்றிதழ்களைப் பொறுத்தவரை, தமிழ்மரபு என்பதைக் கவிதையில்தான் கண்டனர். அதுவும்கூடக் கவிதைக்கு யாப்புத் தேவையில்லை என்ற அடிப்படையில் யாப்பு இறுக்கமற்ற சங்கக் கவிதையை ஓரளவு எடுத்துக் கொண்டனர். தமிழ்ச் செய்யுளில் செந்தொடை என்பதும், இணைக்குறள்ஆசிரியப்பா என்பதும் யாப்பு இறுக்கம் அற்றவை. இத்தகைய பாக்களைச் செல்லப்பா எடுத்துக்காட்டிப் புதுக்கவிதை முறை, தமிழ்க்கவிதை மரபுக்கு முற்றாக அந்நியமானது அல்ல என்று விவாதித்தார். படிமங்கள் குறியீடுகள் ஆகியவற்றால் சிறப்புறும் புதுக்கவிதை முறைக்குச் சங்க இலக்கியத்தில் காணப்படும் உள்ளுறை, இறைச்சி ஆகியவை நிகராகும் என்று விளக்கினார். காரைக்காலம்மையார் பாடல்கள் நவீனக் கவிதையைப்போல அமைந்திருப்பதைக் க.நா.சு எடுத்துரைத்தார். கவிதையில் சொற்கள் குறைவாக இருக்கவேண்டும் என்ற முறையில் குறள் வெண்பாக்களைச் சிலர் சுட்டிக் காட்டினர். நீதி சொல்வதாகிய திருக்குறள் இலக்கியம் அல்ல என்று க.நா.சு. விவாதித்தார்.

தமிழ்மரபு என்பதை ஒரு பேராறு என்று நம்மால் கூறமுடியுமானால், செல்லப்பா முதலியவர்கள் தமிழ்மரபு எனக்கண்டது ஒரு கையளவு நீரைத்தான் என்று கூறிவிடலாம். மரபுக்கவிதை என்று இவர்கள் தொடர்ந்து குறிப்பிட்டது, யாப்போடு கூடிய செய்யுளை மட்டும்தான். செய்யுள் என்பது செய்யப்படுவது. ஆகவே அது கவிதை ஆகாது என்றும் ஞானக்கூத்தன் கூறினார். சங்க இலக்கியத்தில் இயற்கையும் மனித வாழ்க்கையும் கலந்து கிடப்பதை இரண்டொருவர்தான் இரசித்தனர். முதல், கரு, உரி என்னும் அடிப்படையில் எல்லாக் காலத்திற்குமான இலக்கிய ஆக்கத்திற்குத் தொல்காப்பியர் பொதுவிதி வகுத்திருப்பதை இவர்கள் காணவில்லை. அகமும் புறமும், ஒன்று மற்றதனுள் ஊடுருவியிருக்கும் அற்புதத்தைச்

சங்கக் கவிதை வெளிப்படுத்தியது. திணைக் கோட்பாடு உலக அளவில் தனித்துச் சொல்லக்கூடிய அருமையான கோட்பாடு.

கவிதை என்பதனுள் ஆழ்ந்து செல்லும்பொழுது வரலாற்றோடும் மெய்யியலோடும் உறவுடையதாகக் கவிதை திகழ்வதைக் காண முடியும். கவிதை அல்லது இலக்கியத்திற்கு எத்தனையோ வடிவங்கள் இருக்கின்றன. சிறியதும் பெரியதுமாய்க் கவிதை இயங்கும். செய்தி சொல்லுவதாயும் கவிதை இயங்கும். செய்தி சொல்லுவதிலிருந்து ஒரு பாய்ச்சலாய், வாழ்வியல் தரிசனங்களைக் கவிதை சொல்லும். கவிதைக்குள் கதை சொல்லப்படும். கவிதைக்குள் நாடகம் இயங்கும், வாழ்வின் இயல்பைச் சொல்லும், இலட்சியங்களைச் சுட்டிக்காட்டும், சொற்களைக் கடந்து இயங்கும். உவமை உருவகங்களைக் கூட உதறிக்கொள்ளும். சிலசமயம் காவியமாய்ப் பெருகும். வாழ்வுக்குள்ளும் புராணிகம் இயங்குவதைச் சுட்டிக்காட்டும். கனவில் உறங்கும். தனக்குள் பரவசப்படும். தன்னை மறைத்துக் கொண்டு நம்மைத் திகைக்க வைக்கும். ஒன்றைச் சொல்லி இன்னொன்றை உணர்த்தும். பல்வேறு விவரங்களை ஒருங்கிணைத்து ஒன்றாய்க் காட்சி தரும். பேசாதன பேசும் இவ்வாறெல்லாம் கவிதை/இலக்கிய மரபு நெடுங்காலத் தமிழ் வரலாற்றில் காணக்கிடைக்கின்றன. இத்தகைய விரிந்த தமிழ் மரபை "எழுத்து" முதலிய இலக்கியவாதிகள் செரித்துக் கொள்ளவில்லை.

தமிழ்மரபு என்பதை, கவிதைக்குள் வைத்து – அதுவும் குறைந்த அளவுக்கே இவர்கள் கண்டனர்.கவிதையை உள்ளடக்கியதாகிய தமிழ் இலக்கிய மரபுக்குள் இவர்கள் ஆழ்ந்து செல்லவில்லை. கவிதை அல்லது இலக்கியத்திற்குள்ளிருந்து மெய்யியல் பார்வையைப் பிரித்துப் பேச முடியாது அதைப்போல எந்த மொழியின் இலக்கியத்திலிருந்தும் அறம் பற்றிய பார்வையை விலக்கிவிட இயலாது. தமிழ் இலக்கியத்தில் இவற்றின் ஆற்றல் மிக்க கூறுகள், தமிழ் மரபின் ஆக்கக் கூறுகள். பழந்தமிழ் இலக்கியத்திற்குள் ஆழ்ந்து செல்லும்பொழுது திருக்குறளின் ஒப்புரவின் வழியே சென்றால், ஆதிப் பொதுமைச் சமூகத்தின் ஆற்றல் மிக்க தடங்களை, புறநானூற்றில் பாரி முதலிய வள்ளல்களினுள்ளும், கணியன் பூங்குன்றன் முதலியவர்களின் கவிதைகளினுள்ளும் காண முடியும். தமிழ்மரபின் ஒரு முக்கியக் கூறு சமதர்ம நோக்கு என்று காணமுடியும்.

சமுதாயத்தில் நீதியை நிலைநாட்டும் முறையில் கண்ணகி செய்த புரட்சியையும், மனிதர் நலத்திற்கு ஒத்துத் தெய்வங்கள் செயல்படும் திறத்தையும் சிலம்பின் வழியே தமிழ் மரபு என நாம் செரித்துக் கொள்ளமுடியும். வறுமைக்கெதிராக மணிமேகலை இடையறாத குரல் எழுப்புகிறது. அன்றியும் சமூக நலத்திற்கு ஒத்த

தவம்பற்றியும் அது பேசுகிறது. ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகியவர்களின் சமயச்சார்பினுள் மனித நலத்திற்கு அழுத்தம் இருப்பதை நாம் காணமுடியும். கம்பரின் சமதர்ம நோக்கு, ஆதிச் சமூகத்தின் பொதுமைப்பண்பு என்ற நீரோட்டத்தின் ஒரு கூறு எனக் காணமுடியும். புறநானூறு, திருக்குறள் ஆகியவற்றின் வழியே அரசியலில் மக்கட் சார்புக்கு நாம் அழுத்தம் தந்து பார்க்க முடியும். இவ்வாறெல்லாம் மெய்யியல், சமயம், அறம், அரசியல் முதலியவற்றினுள் தமிழ் மரபை நாம் பிரித்துப் பொருள்படுத்த இயலும். எழுத்து, கசடதபற முதலிய சிற்றிதழ்களோடு தொடர்புடையவர்கள், திராவிட இயக்கத்திற்கும், மார்க்சிய இயக்கத்திற்கும் எதிர்நிலை எடுத்த காரணத்தால் தமிழ் மரபு என்ற ஆழ்ந்த நீரோட்டம் இவர்களுக்கு அகப்படவில்லை.

திராவிட இயக்கத்தவரின் தமிழ்ப்பெருமிதத்தை ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில், தமிழ் மரபுக்குள் தாங்களும் இருந்து செயல்படுவதை இவர்கள் காணவில்லை. தமிழ் மரபை நவீனகால நோக்கில் பொருள்படுத்த இவர்கள் தவறினர். நீண்டகாலத் தமிழ் மரபை ஆராய்ந்து வெங்கட்சாமிநாதன் பாலை என்றார். கம்பர் முதலியவர்களை அதிசயங்கள்/உன்னதங்கள் என்றார். திருவள்ளுவரை ஆசாரக் கோவையோடு இணைத்துப் பேசினார். இவர்கள் அனைவரும் தமிழ்க் கவிதைக்குள் / இலக்கியத்திற்குள் மதம் என்ற கூறு செயல்படுவதைப் பார்க்கவில்லை. நுணுகிப் பார்த்தால் 20ஆம் நூற்றாண்டுச் சூழலில் இந்து மதத்தை வெளிப்படையாக நியாயப்படுத்த இவர்களுக்கு இயலவில்லை. எனினும் வேத மதத்தின் செறிவான இழைகள் இவர்களுக்குள் இருப்பதைக் காணமுடியும். க.நா.சு-வை ஒரு விதிவிலக்கு என்று இங்கு குறிப்பிடலாம். மதத்தை இவர்கள் நியாயப்படுத்த இயலாமைக்குக் காரணம் பெரியாரின் தாக்கம் என்று கூடச் சொல்லமுடியும். இவர்களில் சிலர் இருத்தலியலுக்கு நெருக்கமாக இருந்தனர். வாழ்க்கையை அபத்தம் என்றனர். வாழ்வினுள் இருப்பது இருண்மைதான் என்றனர். யதார்த்த உலகம் தாறுமாறாகச் சிதைந்திருப்பதை இவர்களின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன. சிலர் பிராய்டின் காமத்தை வாழ்வினுள் கண்டனர். இவர்களை நகரவாசிகள் என்றும், அரசுப்பணியில் இருந்தவர் என்றும், பிராமணர்கள் என்றும் குறிப்பிடுவது பொருந்தும்.

20ஆம் நூற்றாண்டுச் சூழலில் இவர்கள் இப்படி இயங்கியதை நாம் புரிந்து கொள்ள முடியும். கிராமத்தோடு, பெருவாரியான மக்களோடு, உடல் உழைப்போடு, இயற்கையோடு நெருக்கமான உறவு அற்ற நிலையில் இவர்கள் தம் மூளைக்குள் அன்றி வேறு எங்கு வாழ்வியக்கத்தைத் தேட முடியும்? அதே சமயம் முதலாளியம்

இத்தகைய ஒரு சமூகப் பிரிவைத் தொடர்ந்து உற்பத்தி செய்வதையும் நாம் காணவேண்டும். குடும்பச் சூழலில் மதச் சடங்குகள் முதலியவற்றை இவர்கள் தவறாது கடைப்பிடிக்கத்தான் செய்தனர். இவர்களுக்கு அரசு அமைப்புப் பற்றித் திறனாய்வு இல்லை. அரசின் சில நடவடிக்கைகள் இவர்களுக்கு உவப்பாக இல்லை. உலக அளவில் மனித நாகரிகம் நெருக்கடிக்கு உள்ளாகிவருவது இவர்களுக்குத் தெரியும். இதைத் தவிர்க்க இயலாது என்பது இவர்கள் நம்பிக்கை, மார்க்சியத்தோடு இவர்களுக்கு உறவு இல்லை. இவர்கள் பார்வையில், திராவிட இயக்கம் என்பது, கல்வியறிவு, நாகரிகம் ஆகியவற்றில் குறைந்தவர்களின் இயக்கம். அவர்கள், இவர்களின் பார்வையில் மரியாதைக்கு உரியவர்கள் அல்லர். நவீன கால நாகரிகம் இவர்களுக்குத் தந்திருக்கிற இடத்தை இவர்கள் விடாது பற்றிக் கொண்டிருக்கின்றனர். இவர்களுக்கு இலக்கியம் போதும், நவீன சில கலைகள் போதும். இந்தப் பொதுப்படையான வர்ணனைகளுக்குள் எல்லோரையும் அடைத்து விட இயலாது. சிலர் அங்கங்கே விலகி நிற்பர். எனினும், பொதுவரையறையின் சில முக்கியக் கூறுகளோடு தான் இவர்களின் இயக்கம் அமைந்தது.

தமிழ் மரபு என்பதோடு திராவிட இயக்கத்தினரும் மார்க்சியரும் கொண்டிருந்த உறவை முன்பே எடுத்துரைத்தோம். இவர்களின் சமூகச் சார்பையும் குறிப்பிட்டோம். மார்க்சியர் நாட்டார் கலைகள் பற்றிக் கூடுதலான அக்கறை கொண்டிருந்தனர் என்பது ஒரு முக்கியமான கூறு. தமிழ் இலக்கியங்கள் என்று போற்றப்படும் எல்லா இலக்கியங்களினுள்ளும் நாட்டார் கதைகளும் கலைகளும் உள்வாங்கப்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். செவ்வியல் இலக்கியங்கள் என்பவை நாட்டார் கலைகளின் மீதுதான் எழுந்திருக்கின்றன. செவ்வியல் இலக்கியங்களில் நாம் காணும் வாழ்வியல், சிந்தனை முறைகள், உணர்வுகள், கலைக்கூறுகள் ஆகிய அனைத்துமே மக்களோடும், மண்ணின் மரபுகளோடும் செறிவான உறவுடையவை. இந்த உண்மையானது, இலக்கியம் முதலிய களங்களில் அறிஞர் என்று சொல்லப்படுகிற பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இதிலிருந்து நாம் என்ன தெரிந்துகொள்கிறோம்? தத்துவங்கள் இலக்கியங்கள் முதலியனவெல்லாம் மக்கள் வாழ்விலிருந்துதான் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இவற்றிற்கு உருவத்திரட்சி தருவது அறிஞர்களின் செயல்பாடு. சிலப்பதிகாரக் கதையோ, இராமன் கதையோ மக்களின் சமூகவாழ்வில் நடைபெறும் நிகழ்ச்சிகள்தான். மக்கள் மத்தியில் இருந்துதான் வீரர்கள், தலைவர்கள் உருவாகின்றனர். வரலாற்றுச் சூழல்தான் இவர்களைப் படைக்கிறது. மக்கள் வாழ்விலிருந்து ஆற்றல்பெற்ற தலைவர்கள், பிறகு மக்களிடமிருந்து

விலகிச் சென்று, மக்களையே பாரமாய் அழுத்தும்பொழுது, இவர்கள் ஆற்றல் அழிந்து நொறுங்கிப் போகிறார்கள். வீரர்களும், தலைவர்களும் தமக்குத் தேவையான புதிய குருதியை மக்களிடமிருந்துதான் பெறுகிறார்கள். மண்ணின் மரபுகள் என்றைக்கும் ஆற்றல் மிகுந்தவை. தமிழ் மரபு என்பதும் தமிழ் மக்களின், தமிழ் மண்ணின் மரபுதான்.

இந்தியமரபு என்று சொல்லப்படுவதை, திராவிட மரபு என்று நாம் பொருள்படுத்தினோம். திராவிட மரபு என்பது மண்ணின் மரபு/ மக்களின் மரபு. தமிழ் இலக்கியத்தில் ஆற்றல் மிக்க மரபுகளில் ஒன்று சித்தர் மரபு என்று கூறினோம். இந்தச் சித்தர் மரபை மையப்படுத்தித் தமிழ்வாழ்வை நம்மால் புரிந்துகொள்ள முடியும். சாதாரண மக்கள் என்று அறியப்படுகிற உழவர்கள், கைவினைஞர்கள் ஆகியவர்களின் பார்வையிலிருந்தே சித்தர்மரபையும்நாம்காணமுடியும்.பெண்களுக்கும், தலித் மக்களுக்கும் கூட இந்தப் பார்வைதான் நெருக்கமானது. ஆதிக்கங்கள் வேண்டாம், அரசுகள் வேண்டாம், உடைமை வேண்டாம், எல்லோரும் கூடி உழைக்கலாம், பகிர்ந்து கொள்ளலாம். வளமான இயற்கை நமக்கு வாழ்வைத் தருகிறது. மழையும், ஆறுகளும், கடல்களும் நமக்கு வாழ்வைத் தருகின்றன. நமக்குள் ஆற்றலை வளர்க்கின்றன. சமத்துவம்தான் நம் உயிரை வளர்க்கும். உயிர்களோடு உறவு கொள்வதில்தான் நமக்கு ஆளுமை சிறக்கும். தெய்வங்கள் என அறியப்படுபவை நமக்குள் இருந்துதான் எழுந்தன. நம்மை அழிக்கும் சக்திகளுக்குப் பிசாசு எனப் பெயர் கொடுத்துள்ளோம். ஆதிக்கங்கள் நம்மை அலைக்கழித்தன. அவற்றிற்குச் சேவை செய்து நம்மை அழித்துக் கொண்டோம், வளர்த்துக் கொண்டோம், ஆதிக்கச் சக்திகளுக்காக நம்மை நாமே இழந்தபொழுது தவித்தோம், தடுமாறினோம். பிறகு நம்மை நாமே திரட்டிக் கொண்டோம். புதிய பார்வைகளைப் பெற்றோம், ஆற்றல் பெற்றோம். ஞானிகளும், மகான்களும், நமக்குள்ளிருந்துதான் வெளிப்பட்டு, நம்மைப்பற்றிய உண்மைகளைக் கூறினார்கள். வானம் நமக்கு இனியது. காற்றும் மண்ணும் இனியவை.

தமிழ் மரபு என்பதும், திராவிட மரபு என்பதும் இதைத்தவிர வேறு இல்லை. திராவிட முன்னேற்றக் கழகம் நாம் முன்பே கூறியபடி தமிழ் மரபில் இருந்த ஆதிக்கப் போக்கை உள்வாங்கிக் கொண்டது. பெரியாரைப்பொறுத்தவரை, தமிழின் சித்தர் மரபிலிருந்து தோன்றியவர். ஆழ்ந்து பார்த்தால் பெரியாரிடம் சித்தர்களின் ஆன்மீகம் என்று அடையாளம் காணத்தக்க ஆற்றல்மிக்க கூறுகள் செயல்படுவதைப் புரிந்து கொள்ள முடியும். எனக்குத் தேசமில்லை, மொழி இல்லை, இனம் இல்லை என்ற பெரியாரின் கூற்று நமக்கு எதைச் சுட்டிக்

காட்டுகிறது? வேதாந்தம் எல்லா உயிர்களையும் இறைவன் என்று கூறுகிறது. ஆகவே உயிர்களுக்கிடையில் ஏற்றத் தாழ்வுகள் எப்படி இருக்கமுடியும்? ஆகவே வேதாந்தம் என்பதும் கம்யூனிசம்தான் என்று கண்டவர் பெரியார். வேதாந்தத்தைச் சமூகவியல் நோக்கில் பொருள்படுத்தியவர் பெரியார். தம்சாதி உயர்ந்தது என்ற ஆணவத்தோடு இருந்த பிராமணர்களுக்குப்பெரியாரைப் புரிந்துகொள்ள இயலாததில் வியப்பில்லை. உண்மையில் அசலான பிராமணியத்தைச் செயல்படுத்த முனைந்தவர் பெரியார்தான் என்பதை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை.

மார்க்சியரைப் பொறுத்தவரை மக்கள் என்றும் உழைப்பாளிகள் என்றும் பேசினாலும், அரசு அதிகாரத்தை, முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்டவர்கள் என்ற முறையில்தான் மார்க்சியரை மதிப்பிட வேண்டியிருக்கிறது. மக்களின் விடுதலைதான் தமக்கு ஒரே நோக்கம் என்று அவர்கள் செயல்பட்டிருந்தால் திராவிட இயக்கத்தோடு பகை முரண்பாட்டை வளர்ந்திருக்க மாட்டார்கள். திராவிட இயக்கத்தின் இனம் என்ற கருத்தியலைத் தமிழ்த்தேசிய இனம் என்று பார்த்திருப்பார்கள். ஆதிப்பொதுமைச் சமூகம், எல்லாக் காலத்தினுள்ளும், மக்களுக்குள் பேரளவில் இயங்குவதை அவர்கள் புரிந்து கொண்டிருந்தால் திருவள்ளுவரையும், இளங்கோவையும், சாத்தனாரையும், கம்பரையும் கூட மக்கள் சார்பில் வைத்து மதிப்பிட்டிருப்பார்கள். சித்தர்மரபினுள் பொதுமைக் கூறுகளைக் கண்டிருப்பார்கள் பொதுவுடைமை மக்களுக்கு நெருக்கமானது என்று பார்த்திருப்பார்கள். மக்களுக்குள் தங்களைக் கரைத்துக்கொண்டு, அதிகாரப்பற்றை இழந்து, உண்மையான மக்கள் எழுச்சிக்கு, அவர்களோடு இணைந்திருப்பார்கள். தமிழ் மரபு என்பதை, மண்ணின் மரபு, மக்களின் மரபு, மனித மரபு என்று புரிந்து கொண்டிருப்பார்கள்.

## 6. தமிழ் மரபும் நவீனத்துவமும்

தமிழ் ஆய்வு அல்லது தமிழ் மரபைக் கண்டறிதல் மற்றும் தமிழ் வளர்ச்சி என்பனவற்றை முதன்மைப்படுத்திப் பார்க்கும்பொழுது, திராவிட இயக்கம் தமிழ் வளர்ச்சிக்கு உழைத்தது ஒரு கட்டத்தில் நின்றுவிட்டது. திராவிட இயக்கத்தைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு மார்க்சியரின் தமிழ் ஆய்வுகள் தொடர்ந்தன. இன்றுவரை மார்க்சிய நோக்கிலான ஆய்வுகள் தொடர்கின்றன. மணிக்கொடிக்குள் ஓரளவுக்கும், எழுத்து, கசடதபற போன்ற இதழ்களில் இன்னும் கூடுதலான அளவுக்கும் செயல்பட்ட நவீனத்துவம், "படிகள்" முதற் கொண்டு "நிறப்பிரிகை" வரையில் பெரும் வளர்ச்சி கண்டிருக்கிறது. தமிழ் ஆய்வு பல பரிமாணங்களில் வளர்ந்திருக்கிறது.

திராவிட இயக்கம் மார்க்சிய இயக்கம் ஆகியவை செய்த ஆய்வுகள் முதலியவை தமிழை நவீனப்படுத்தின என்பதில் ஐயமில்லை. தமிழுக்கு இத்தகைய போக்கு இன்றியமையாததாக இருந்தது. இந்தப் போக்கை நவீனம் என்று குறிப்பிடுவது பொருந்தும். இதற்கு அடுத்துவந்த போக்கை நவீனத்துவம் என்று குறிப்பிடலாம். இதன் தொடர்ச்சிதான் பின்-நவீனத்துவம். நவீனத்துவத்தோடு திராவிட இயக்கத்திற்கு இன்று அறவே தொடர்பில்லை. கட்சி சார்ந்த மார்க்சியரும் நவீனத்துவம், பின் நவீனத்துவம் ஆகியவற்றைக் கடுமையாக மறுக்கின்றனர்.

சிற்றிதழ் மரபு என்பதை நவீனம்-நவீனத்துவம் என்பதோடு சார்ந்து மதிப்பிடுவது பொருந்தும் எனத் தெரிகிறது. தொடக்கத்தில் இலக்கியம் என்பதில் மட்டும் தன்னை மையப்படுத்தியிருந்த இந்த இயக்கம், "கசடதபற", "யாத்ரா" ஆகியவற்றில் இலக்கியத்தோடு, சினிமா, நவீன ஓவியம் ஆகியவற்றை உள்வாங்கிக் கொண்டு வளர்ச்சி பெற்றது. "யாத்ரா"வில் நாடகம்-நவீன நாடகம் குறித்த கவனத்தோடு கலாச்சாரம் பற்றிய ஆய்வும் சேர்ந்து கொண்டது. படிகளில் முதன்முறையாக நவீனத்துவம் என்று பின்னர் அறியப்பட்ட பார்வை அழுத்தம் பெற்றது. திராவிட இயக்கம் பற்றிய கலாச்சார ஆய்வுகள் தொடர்ந்தன. தலித்தியம் முதன்முறையாக ஓர் ஆய்வியல் நோக்காக வெளிப்பட்டது. "மேலும்" இதழில் சங்க இலக்கியம் முதலிய ஆய்வுகளில் அமைப்பியல் பின் அமைப்பியல் ஆகிய நோக்குகள் புதிய வெளிச்சங்களைப் புலப்படுத்த முடியும் என்ற உண்மை தெரிந்தது.

நிறப்பிரிகைக்கு வந்து சேருகிறோம். இப்பொழுது சிந்தனையின் எல்லாத் துறைகளும் நவீனத்துவ முறையிலான ஆய்வுக்கு உள்ளாயின. பெண்ணியமும் தலித்தியமும் அழுத்தம் பெற்றன. இலக்கியத்தின் அரசியல்,• கலாச்சாரத்தின் அரசியல், வாசிப்பின் அரசியல் என்று அனைத்துவகை ஆய்வுகளும் அரசியலாகப் பார்க்கப்பட்டன. திராவிட இயக்கமும், கட்சி சார்ந்த மார்க்சியத்தின் அரசியலும் அதிகாரத்தை மையப்படுத்திய அரசியல். இதேபோலத்தான், இலக்கியத்தினுள்ளும், கலாச்சாரத்தினுள்ளும், மெய்யியலினுள்ளும் மையத்தில் அமைந்திருக்கும் அதிகாரத்தைக் களைவது என்ற நோக்கில் இலக்கியம் முதலியவை புதிய வாசிப்புக்கு உள்ளாயின.

கட்சி சார்ந்த மார்க்சியரின் பார்வையைப் புதியதலைமுறைக் காலம் முதலே நாங்கள் மறுத்தோம். மார்க்சியத்தினுள்ளும் புதிய வளர்ச்சிகளை வெளிப்படுத்தும் முறையில் பரிமாணம் இதழ்களில் கட்டுரைகள் வெளியாயின. இறுகிய மார்க்சியப் பார்வையைத்

தன்னிடமிருந்து உதறிக்கொண்ட தமிழவன், அமைப்பியலுக்குள் விரிவாகப் பயணம் செய்தார். தமிழவனோடு பலர் சேர்ந்து கொண்டனர். தமிழவன், அ. மார்க்ஸ் முதலியவர்கள் தங்களுக்குள் கடுமையாக முரண்பட்டு எழுதினர் என்றாலும் இறுகிக்கிடந்த தமிழ்ச் சிந்தனையைத் தகர்ப்பதில் வெற்றி கண்டுள்ளனர். சிலசமயம் மார்க்சியத்தை இவர்கள் காயப்படுத்துவது போலத் தோன்றினாலும் இவர்களின் ஆய்வுகள் மார்க்சியத்தினால் உள்வாங்கிக்கொள்ளப்படக் கூடியவை என்பதும் உறுதிப்படுகிறது. நவீனத்துவத்தை முழு அளவில் மார்க்சியம் உள்வாங்கிக் கொள்ள இயலும் பின் - நவீனத்துவத்தோடு மார்க்சியத்தின் உறவு என்பது, பின்-நவீனத்தினுள்ளும் இயங்கும் இடதுசாரிப் போக்குகளைக் கண்டறிந்து அதை மார்க்சியம் தன்வயப்படுத்திக் கொள்ள முடியும். வரலாறு, மெய்யியல், பண்பாடு, கலை இலக்கியம், அறிவியல், நாட்டார் கலைகள், திரைப்படம், தொலைக்காட்சி, அரசியல் முதலிய சிந்தனையின் எல்லாத் துறைகளைப் பற்றிய ஆய்வுக்கு இப்பொழுது தமிழ்மொழி தயாராகி வருகிறது என்று உறுதியாகச் சொல்ல முடியும்.

இலக்கியத்திலிருந்து அதிகாரத்தை வெளியேற்றியவுடன் இலக்கியம் என்பது புலவர்களுக்குத்தான் சொந்தம் என்ற போக்கு உடனடியாக அடிபடுகிறது. இலக்கியத்தை எல்லா மக்களும் படைக்கின்றனர். கதைகள் இல்லாமல் வாழ்வியக்கம் இல்லை. நான்கு மூலைகளையும் இழுத்துக் கட்டுவதாகிய கதை அமைப்பு அதிகாரத்தை உற்பத்தி செய்யும் அமைப்பு முறை. அதிகாரம் எப்பொழுதுமே சுரண்டலையும், ஒடுக்குமுறையையும் செய்யும். பிறரிடமிருந்து உழைப்பையும், அழகையும், அறிவையும் கவர்ந்து கொண்டு, தானே எல்லாவற்றிற்கும் ஆதிமூலம் என்று கதை சொல்லும். அறிவும், அழகும் தனக்கே சொந்தம் என்று உரிமை பாராட்டும். வரலாற்றில் மன்னர்களும், படைத் தலைவர்களும், பின்னர் முதலாளிகளும், பிறகு கட்சி அதிகாரிகளும் செய்தது இதைத்தான். இவர்களை அதிகார பீடங்களிலிருந்து இப்பொழுது நாம் அகற்றிப் பார்க்கிறோம்.

எல்லோரும் இப்பொழுது சமதளத்திற்கு வந்து சேருகிறோம். ஆணும் பெண்ணும் சமம். சாதியில் ஏற்றத்தாழ்வு என்பது இப்பொழுது இல்லை. எல்லோரும் மனிதர்கள். உண்மை, பொய், நன்மை, தீமை, மேன்மை இழிவு என்றெல்லாம் முன்னர் எதிர்நிலைப்படுத்தியவர்கள் அதிகாரிகள். இவற்றிலிருந்து அதிகாரத்தை வெளியேற்றிய நிலையில் இன்று சிந்தனையில் வாழ்வில் நமக்கு விடுதலை கிடைத்துள்ளது. காற்று நமக்குள் தாராளமாக வீசுகிறது. திசைகள் நமக்குள் வந்து போகின்றன. வானம் நம்மோடு உறவாடுகிறது. நமக்குள் பறவைகள் பாடுகின்றன. நமக்குள் அடைத்திருந்த கதவுகள் திறந்து கொள்கின்றன.

வெட்ட வெளியில் நாம் நிற்கிறோம். இறைவனோடு நமக்கு முரண் இல்லை. பிசாசுகளோடு பகை இல்லை. இப்பொழுது நாம் அதிர்ந்து பேசவேண்டியதில்லை. தற்பெருமை சொல்லி நம்மை அடுத்தவர் தோள்களில் ஏற்றிக்கொள்வதற்கு அவசியமில்லை. நமக்குள் அச்சமில்லை, பகைமை இல்லை. அதிகாரிகளை இப்பொழுது நாம் இயல்பாகக் கேலி பேசுகிறோம். நாம் பேசும் கேலியில் வன்மம் இல்லை. அதிகாரம் என்பது அருவருக்கத்தக்க ஒரு சுமை. அதற்கு உன்னை ஏன் பலிகொடுத்து அழிகிறாய், மனிதனாக மாறு, உன் சுதந்திரம் அதிகரிக்கும் என்ற முறையில்தான் நாம் கேலி பேசுகிறோம்.

வரலாற்றில்தான் எத்தனை மேடுபள்ளங்கள்? எத்தனை இராணுவங்கள்? எத்தனை போர்கள்? எத்தனை அழிவுகள்? இயற்கை எவ்வளவு நாசம்? இவை இல்லாமல் வரலாற்றில் வளர்ச்சி ஏற்பட்டிராதா? இப்பொழுது நாம் எந்தக் கட்டத்தில் இருக்கிறோம்? போர்கள் இனி வேண்டாம். இராணுவம் தேவையில்லை. அரசு அதிகாரம் தேவையில்லை. இவற்றின் கெடுபிடிகளில் நம் வாழ்க்கை அழிகிறது. இவை நமக்கு வேண்டாம், மனிதர்களைப் பிளவுபடுத்தும் எந்த அமைப்புக்கும் நாம் மரியாதைதரத் தேவையில்லை. வரலாற்றில் நிறைய அனுபவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. வரலாற்றிலிருந்து நாம் நிறைய வெளிச்சங்களைச் சேகரித்துள்ளோம். இவற்றோடு வாழ்வதற்கு நமக்கு உலகம் வேண்டும், உறவுகள் வேண்டும்.

நவீனத்துவம், பின் நவீனத்துவம் எனப் பலவற்றைப் பார்த்த நிலையில், சங்ககால மனிதர்கள் நமக்குள் வந்திருக்கிறார்கள். சிலம்பும், மணிமேகலையும் நமக்கு நெருக்கமானவை. நாயன்மார்களோடும், ஆழ்வார்களோடும் நாம் வாழ்கிறோம். இழப்புக்களிலிருந்து கற்றுக் கொள்கிறோம். பயணங்கள் சுகமானவை. சித்தர்களோடு நாம் உலவுகிறோம், இலக்கியத்திற்குள்ளிருந்து இவர்களெல்லாம் வெளியேறி நம்மோடு சமதளத்திற்கு வந்துவிட்டார்கள். இவர்களை இலக்கியங்களில் இருந்து நாம் விடுவித்திருக்கிறோம். காலங்கள் ஒரு புள்ளியில் இணைந்து விடுகின்றன. வரலாற்றுக் கட்டங்கள் தம் கட்டுக்களை இழந்து கரைந்துவிட்டன. மேடையில் இப்பொழுது யாரையும் நாம் ஏற்றுவதில்லை. உரத்துப்பேசி, யாரையும் திரட்ட வேண்டியதில்லை. அழகுபடுத்தினால்தான் தமிழ் என்பது இனி இல்லை. எளிமையாகப் பேசு, இனிமையாகப் பேசு, என்பதுதான் இனித் தமிழ்! தமிழுக்குள் இனி, மறைக்கிற கதவுகள் இல்லை, எல்லாமே இப்பொழுது திறந்து கொள்கின்றன. பெண்களுக்கு நாம் எவ்வளவோ இழிவு செய்து விட்டோம். அடிமைகள் எனச் சிலரை ஒதுக்கிவைத்தோம். இப்படிச் சமூகத்தில் ஒரு பெரும்பகுதியை ஒதுக்கியதால் - அடிமைப்படுத்தியதால் நாம் அசிங்கப்பட்டோம். சுதந்தரம் இழந்தோம். அழகை இழந்தோம்.

இதற்கு எந்தத் தண்டனையையும் நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

திராவிட இயக்கத்தின் ஆக்கக் கூறுகளை இனிநாம் சேகரிக்க வேண்டும். அவர்கள் இல்லாமல் நமக்கு மறுமலர்ச்சி வந்துவிடவில்லை. பெரியார் இன்றும் நமக்கு நெருக்கமாக இருக்கிறார். அவரிடமுள்ள எதிர்க்கலாச்சாரக் கூறுகள் இன்று நம்மை வளப்படுத்தக் கூடியவை. பெரியாரிடமிருந்த சமதர்மக் கருத்தியல் இன்று நமக்குப் பெரிதும் தேவை. பெரியாருக்கும் மார்க்சியத்திற்கும் இடையில் இப்பொழுது முரணுக்கு அவசியம் இல்லை. பெரியாரை மார்க்சியராய், மார்க்சியத்தைப் பெரியாரியமாய் வளர்த்தெடுப்பது நம் கடமை. முதலாளியத்திற்குத் திராவிட இயக்கத்தவர் மட்டுமா வசப்பட்டார்கள், மார்க்சியரும் தான் வசப்பட்டனர். இன்று உலகளவில் பெரும் படையெடுப்பாய் வந்துள்ள முதலாளியத்திற்கு என்ன பதில் சொல்லப் போகிறோம்? தமிழ் மரபு என எதை மீட்டெடுத்து நம்மைக் காத்துக் கொள்ளப் போகிறோம்? மார்க்சியம் தன்னை விரித்துக் கொண்டால் ஒழிய இன்றைய உலகச்சூழலில் தான் வாழ்வதற்குத் தகுதி அற்றதாகி விடும்.

நவீனத்துவம் முதலிய போக்குகள் தமிழை, தமிழ் இலக்கியத்தை, தமிழ் மரபை மீண்டும் ஒரு கண்டறிதலாய்ப் புத்துயிர்ப்பாய் நமக்கு முன்வைத்துள்ளது. தமிழுக்குள் வெளிப்பட்டுள்ள இந்தப் புதிய ஒளி நம் வாழ்வுக்குச் சுடர் ஏற்றும். ஆதிப் பொதுமைச் சமூகம் இப்பொழுதும் நமக்கு நெருக்கமாகத்தான் இருக்கிறது. அந்த ஆதிமனிதன் பொருள் அற்றவன், அதிகாரம் அற்றவன், தன்னை எல்லோரோடும் பகிர்ந்து கொள்பவன், தனக்கென எதுவும் வைத்துக் கொள்ளாதவன். இந்த மனிதனை நமக்குள் பின்நவீனத்துவம் கண்டுணர்த்துகின்றது. அறிவில் மட்டும் மனிதன் வாழ்வதில்லை, உறவிலும் உணர்விலும் வாழ்கிறான். வாழ்க்கையில் மையங்கள் அவ்வப்பொழுது சேகரமாகத்தான் செய்யும். அவற்றில் இறுக வேண்டியதில்லை. மையத்திலிருந்து சேகரிக்கும் ஆற்றல்களைப் பிறகு பரவலாக்கி விடுகிறோம். எல்லோரும் பகிர்ந்து கொள்கிறோம்.

பாரதிதாசனைப் பொறுத்தவரை அவருக்கு எல்லாமே தமிழாக இருந்தது. தமிழ் என்பதற்கு அவர் நூறு வகைகளில் பொருள் கண்டார். அன்பு தமிழ், அறிவு தமிழ், இன்பம் தமிழ் என்று தொடங்கி, இயற்கை, அழகு, வானம், காற்று முதலிய அனைத்தும் அவருக்குத் தமிழ். காதல், வீரம், தவம், கலை ஆகியவையும் அவருக்குத் தமிழ். பிறந்தது முதல் எல்லாமே நமக்குள் மொழியாய், தமிழாய்த்தான் செல்கின்றன. நாம் பார்க்கும் வானம் தமிழ் வானம். கடல் தமிழ்க்

கடல், ஆறுகள் தமிழ் ஆறுகள். வள்ளுவரின் தமிழும், இளங்கோவின் தமிழும் நமக்குள் பதிந்திருக்கின்றன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் தமிழாய் நமக்குள் தடம்பதித்திருக்கின்றனர். வரலாறு நமக்குள் பதிந்திருக்கின்றன. வரலாறு நமக்குள் தமிழாய்ப் பதிந்திருக்கிறது. வண்டிக்காரன், மீன்பிடிப்பவன், மூட்டை சுமப்பவன், கூடை முடைபவன் எல்லார் வாயினுள்ளும் வெளிப்படும் தமிழ் நமக்கு இனியது. யாருக்குள் தான் தமிழ் பதியவில்லை! இப்படிச் செல்கிறது பாரதிதாசனின் பார்வை. இன்று பின் நவீனத்துவவாதிகள் மொழி நம்மைக் கட்டமைக்கிறது என்று பேசுவதை வைத்துப் பாரதிதாசனின் தமிழை நம்மால் புரிந்துகொள்ள முடியும்.

பாரதிதாசனின் கருத்துப்படி தமிழ்நிலம் நமக்கு வேண்டும். தமிழ் இயற்கை நமக்கு வேண்டும். தமிழன் அன்பில், அறிவில் செழித்தவனாக இருக்கவேண்டும். தமிழன் தன்னுரிமையோடு, விடுதலையோடு வாழவேண்டும். தமிழன் யாருக்கும் அடிமை இல்லை. தமிழர் மத்தியில் ஏற்றத்தாழ்வுகள் இல்லை. தமிழனுக்கு நாடுவேண்டும், நாட்டைப் பெற அவனுக்கு வீரம் வேண்டும். வீரத்தில், விடுதலையில்தான் தமிழன் தன்னை உயிர்ப்பித்துக் கொள்ள முடியும்.

பாரதிதாசன் தமிழோடு, தமிழாய் வாழ்ந்தார். தமிழ் வரலாறு அவருக்குள் பொங்கியது. தமிழ் இலக்கியம் அவருக்குள் ஆறாய்ப் பெருகுகிறது. இப்படித் தமிழை, தமிழ் இலக்கியத்தை, தமிழ்நாட்டின் மண்ணின் வளத்தை, தமிழ் மக்களின் வாழ்வை, தனக்குள் ஆற்றலாய், அறிவாய், கலையாய், இலக்கியமாய், இசையாய், ஒளியாய்ச் சேகரித்துக் கொண்டவர் பாரதிதாசன். தமிழில் நவீனம் என்ற பார்வையைக் கொண்டு வந்தவர்கள், பாரதிதாசனின் உயிர் இயக்கத்தைக் காணத் தவறினார்கள். இலக்கியத்தில், கவிதையில் மட்டும் தங்களை முடக்கிக் கொண்டவர்கள், பாரதிதாசனுக்குள் செயல்பட்ட முழுவீச்சைக் காணத் தவறியதில் வியப்பில்லை. தமிழோடு, தமிழ்நாட்டோடு, தமிழ் மக்களின் வாழ்வோடு முழுஅளவில் பாரதிதாசன் ஒன்றி இருந்ததனால்தான் பொதுவுடைமைப் பற்று அவருக்குள் ஆறாய்ப் பெருக்கெடுத்தது. திராவிட இயக்க எதிர்ப்பையும், முதலாளிய உள்வாங்கலையும் கொண்ட மார்க்சியருக்குப் பாரதிதாசன் புலப்படவில்லை.

தமிழில் நவீனத்துவம் என்று தொடங்கியவர்கள், திராவிட அரசியலை ஏற்கவில்லை. மார்க்சியத்தையும் ஏற்கவில்லை. ஆகவே, இலக்கியம் என்ற அளவில் தம்மைக் குறுக்கி கொண்டார்கள். நவீனத்துவம் என்ற பார்வையைத் திராவிட இயக்கமோ, மார்க்சிய

இயக்கமோ உள்வாங்கிக் கொள்வதற்கு எந்தத் தடையும் இல்லை. இவ்வாறு உள்வாங்கிக் கொண்டிருந்தால் மேலும் மக்கள் சார்புடையதாய் விரிந்திருக்கும், தமிழின் ஆழத்தைக் கண்டிருக்கும்.

நவீனத்துவம் என்று பேசியவர்கள் பார்ப்பனர் என்று காண்பது பார்வைக் குறைபாடு என்றுதான் சொல்லமுடியும். உலகளாவிய பார்வை நவீனத்துவம், அதைத் தமிழுக்குள் கொண்டு வந்தவர்கள் அறிவுத் திறன் உடையவர்கள். இவர்களைப் பார்ப்பனர் என்று பார்ப்பது தமிழுக்குப் புதியவளம் சேரக்கூடாது என்ற பர்வையாகிவிடும். அறிவுக்கூர்மை மிக்கவர் பார்ப்பனர். ஆகவே இவர்கள் நவீனத்துவத்தைத் தழுவிக்கொண்டார்கள். இவர்கள் நகரவாசிகள். அரசுப்பணியாளர்கள். இவர்கள் மூலம் முதலாளியம் செயல்பட்டது என்று முன்பே பார்த்தோம். முதலாளியத்தை வெறுத்துப் பயனில்லை. வரலாற்றில் முக்கியக் கூறு முதலாளியம். இதற்குள் இன்னும் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். தவிர அறிவுக் கூர்மை உடையவர் என்பதனால் தமிழுக்குள் நவீனத்துவத்தைப் பார்ப்பனர் கொண்டு வந்தனர் என்பதற்காக நாம் அவர்களை இகழ முடியாது. திராவிட அரசியல் அல்லது மார்க்சிய அரசியல் நமக்கு உடன்பாடு உடையது என்பதால் நம்மிலிருந்து மாறுபட்டவர்களை ஒதுக்கமுடியாது. வரலாறு அவர்களுக்குள்ளும் இயங்குகிறது. தமிழ் இலக்கியம் பற்றி அவர்களுக்குப் புரிதல் குறைவு என்ற போதிலும், அவர்கள் வழியே வெளிப்பட்ட பார்வையை நாம் தழுவிக்கொண்டதால் தமிழின் ஒளி நமக்கு வசமாகி உள்ளது. முரண்பட்ட கூறுகள் இல்லாமல் வரலாற்றில் இயக்கம் இல்லை என்பது பொது விதி. ஒவ்வொரு சமூகப்பிரிவும் சில வரையறைகளில் முடக்கம் கொண்டுள்ளது என்பது ஒரு பொது உண்மை. முடக்கங்களைத் தகர்ப்பதற்கு நாம் முயற்சி செய்வது அறிவுடைமை.

## 7. மேலும் சில குறிப்புகள்

**1.** திராவிட இயக்கம் குறித்து மதுரையில் நடைபெற்ற கருத்தரங்கில் முன் வைக்கப்பட்ட சில கட்டுரைகள் மிக முக்கியமானவை. 1825-முதற்கொண்டு தமிழகத்தில் செயல்பட்ட சுமார் 30-க்கு மேற்பட்ட திராவிட அமைப்புகள் பற்றி பொ.பரமசிவம் அவர்கள் முன்வைத்த கட்டுரை வியப்புக்குரிய தகவல்கள் நிறையக் கொண்டதாக இருந்தது. பெரியாரின் திராவிட இயக்கம் இத்தகைய இயக்கங்களின் ஒரு தொடர்ச்சி என்பதை இக்கட்டுரையிலிருந்து தெளிவுபடுத்திக் கொள்கிறோம். இதே போல இன்னொன்று வெங்கடாசலபதி முன் வைத்த கட்டுரை. அ.மார்க்ஸ், ஆனந்தி

ஆகியவர்களின் கட்டுரைகளும் வேறு பல விவரங்களுக்காக குறிப்பிடத்தக்கவை. இந்தியாவின் நெடுங்கால வரலாற்றில் வேத மதத்திற்கு எதிர் நிலையில் செயல்பட்ட வேதமறுப்புத் தத்துவங்களின் நீண்ட தொடர்ச்சியில் பெரியாரை நிறுத்திய பொ. வேலுச்சாமி அவர்களின் கட்டுரை குறிப்பிடத்தகுந்தது. பேராசிரியர் சிவத்தம்பி குறிப்பிட்டபடி பெரியாரை ஒரு மீள் கண்டுபிடிப்பாக இக்கருத்தரங்கு முன் நிறுத்தியது. இந்தியாவின் வேத மறுப்பு மரபோடும், தமிழகத்தில் சித்தர் மரபோடும் பெரியாரை இணைத்துக் கருத்தரங்கில் பேசப்பட்டதைச் சிவத்தம்பி அவர்கள் பாராட்டினார். திராவிட இயக்கங்களின் கலை இலக்கியகங்கள் குறித்தும் அரசியல் மெய்யியல் குறித்தும் விரிவான ஆய்வுகள் தேவை. இக்கருத்தரங்கில் திராவிட இயக்கம் சார்ந்த ஆய்வாளர், சிந்தனையாளர் எவரும் கலந்து கொள்ளவில்லை. இக்கருத்தரங்கில் புலப்படுத்திய ஒரு முக்கியமான உண்மை திராவிட இயக்கம் குறித்து மேலும் பல ஆய்வுகள், கருத்தரங்குகள் நடத்துவது மூலம் தான் திராவிட இயக்க வரலாற்றை செழுமைபடுத்த இயலும். இவ்வாறு செய்வதன் மூலம் தான் திராவிட இயக்கத்தை அடுத்த நூற்றாண்டிலும் தக்க வைக்க இயலும்.

**2.** இந்தியாவில் திராவிட நாகரிகம் பெற்றிருக்கும் அழுத்தம் குறித்துப் பேசும்பொழுது மேலும் ஒரு சில உண்மைகளை நாம் சுட்டிக் காட்ட வேண்டும். 20-ஆம் நூற்றாண்டில் நாம் இனம்கண்ட திராவிட இயக்கம் என்பதை இந்தியாவின் தொன்மையான வரலாற்றின் தொடர்ச்சியாக நாம் காண வேண்டும். வேதத்தினுள்ளும் திராவிடக் கூறுகளை நாம் காணமுடியும். ஆரியர் மரபு திராவிடர் மரபு என்று நாம் வேறுபடுத்திச் சொல்வதில் மரபினம் என்ற கருத்தைக் கடந்து செல்லவேண்டும். ஆரியமரபு என்பதை ஆதிக்க மரபு என நாம் பொருள்படுத்தினாலும் அதனுள்ளும் ஆதிக்கத்திற்கு எதிர் மரபைக் காணமுடியும். திராவிட மரபு என்பதை ஆதிக்கத்திற்கு எதிரான மரபு என நாம் பொருள்படுத்தினாலும், ஆதிக்கத்திற்கு இசைவான மரபும் இதனுள் இருக்கிறது. ஆதிக்க மரபை நாம் இன்று மறுக்கிறோம். எதிர்மரபை இனம் காண, தொகுத்துக் கொள்ள முனைந்திருக்கிறோம். இன்றைய சமூக, பொருளியல், அரசியல் அடிப்படையில் இவ்வாறு செயல்படுகிறோம். இந்த அடிப்படையில் முற்றான ஆரிய எதிர்ப்பு நமக்கு இன்று பயன்படாது. ஆரிய மரபினுள் எதிர்மரபின் கூறு வலுவாக இல்லை என்பது உண்மைதான். திராவிட மரபினுள் ஆதிக்கத்திற்கு எதிர்மரபு வலுவாக இருக்கிறது என்பதும் உண்மைதான். திராவிட மரபின் ஆதிக்கப்போக்கை நாம் இன்று ஏற்கமுடியாது.

**3.** பெரியாரின் திராவிட இயக்கம் சாதி, மதம், பார்ப்பனியம்

ஆகியவற்றிற்கு முற்றான எதிர் நிலை மேற்கொள்கிறது. இம்முறையில் நெடுங்கால இந்திய மரபின் உலகாயத மரபில் இதை இணைத்துக் காண முடியும். பவுத்தம் முதலியவற்றோடு சில கூறுகளில் இணைத்துக் காணமுடியும். வேதத்தினுள்ளும் எல்லாவற்றிற்கும் மூலம் இறைவன்/ பிரம்மம் என்ற கருத்திற்கு எதிர்க்கருத்து இருப்பதை அம்பேத்கர் சுட்டிக் காட்டுகிறார். தமிழகச் சூழலினுள்ளும் சங்க இலக்கியம் திருக்குறள் முதலியவற்றின் வழியே இறைவனுக்கு அழுத்தம் தராத மரபோடு திராவிட இயக்கத்தை இணைத்துக் காணமுடியும். 20-ஆம் நூற்றாண்டுச் சூழலில் உருவான திராவிட இயக்கம் என்பதை நெடுங்காலத் திராவிட மரபின் ஒரு கிளை எனக்கொண்டால், இதிலிருந்து வேறுபட்ட சில கிளைகளையும் நாம் காணமுடியும். இவ்வகையில் சைவமும், வைணவமும் திராவிட மரபின் சில அழுத்தமான கூறுகளைக் கொண்டவை. சைவம் தன்னைத் தென்னாட்டு மரபு தான் என்று சாதிப்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். வைணவத்தின் தென்கலை மரபைத் திராவிட மரபுடன் இணைத்துக் காணமுடியும். இங்கெல்லாம் கடவுள்/சமயம் என்பதை உலகியல்/மனிதனுக்கு அழுத்தம் தருவதை நாம் கவனிக்கமுடியும். ஆகவே முற்றான கடவுள்/மத மறுப்பில் திராவிட மரபைச் சிறைப்படுத்த இயலாது. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அண்ணாவின் கருத்துக்குத் திராவிடமரபில் இடம் உண்டு என்று நாம் கூறமுடியும்.

**4.** கடவுள், மதம், முதலியவை வரலாற்றுச் சூழலில் மனிதர்களால் கட்டமைக்கப்பட்ட கருத்தாக்கங்கள். சடங்குகள் இல்லாமல் சமூக இயக்கம் இல்லை. நிறுவன மயப்படுத்தும்பொழுது மதத்திற்கு மட்டுமல்லாமல் அரசியல் முதலிய நிறுவனங்களினுள்ளும் புரோகிதர்கள் தோன்றி விடுகிறார்கள். விதிமுறைகள், ஒழுங்குகள், சட்டங்கள் என்பனவற்றுக்கு முற்றான அழுத்தம் தரும் இவர்களைப் பார்ப்பனர்கள் என்று சொல்வது தகும். ஆதிக்கத்தை நிலைநிறுத்த விரும்புபவர் எவராயினும் அவர் பார்ப்பனர். இந்துத்துவம் என இன்று கட்டமைக்கப்பட்டுள்ள மதவாத அரசியலை எதிர்ப்பதற்கு முற்றான கடவுள் மறுப்பு முதலியவை போதாது. கடவுள் என்ற கருத்தாக்கத்தின் உட்கூறுகளைப் பகுத்து ஆய்வதன் மூலம்தான் கடவுளை நாம் கடந்து செல்லமுடியும். இந்து மதம் என்பதை பார்ப்பனிய மதம் என்று சாடுவது இன்று பயன்படாது.

**5.** திராவிட முன்னேற்றக் கழகத்தினுள் தமிழ் மரபின் ஆதிக்கக் கூறு வலுப்பெற்றதை நாம் முன்பே பார்த்தோம். பெரியார் அரசு அதிகாரத்தில் இடம் பெறுவதை விரும்பவில்லை. ஆனால் அரசைப் பயன்படுத்திக் கொண்டார். விமர்சனமும் செய்தார். இன்றைய

வரலாற்றுக் கட்டத்தில் அரசை ஒழிக்க முடியாது அரசு அதிகாரத்தைக் கடந்து செல்வதும் இப்பொழுது சாத்தியமில்லை அரசு அதிகாரத்தினுள் அகப்பட்டுக் கொள்வதில் சிக்கல்கள் உண்டு. சோவியத் யூனியனில் ஏற்பட்டவை இந்தவகைச் சிக்கல்கள். வரலாற்றின் முரண் இயக்கத்தில் தான் நாம் இருக்கிறோம். ஆகவே அரசு அதிகாரத்தில் இடம் பெற்றதற்காகத் திராவிட முன்னேற்றக் கழகத்தைக் நாம் குறைசொல்ல முடியாது. அரசு அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் செய்ய வேண்டியதைச் செய்யவில்லை என்ற முறையில்தான் நாம் குறை சொல்ல முடியும். இம்முறையில் நிறையச் சொல்லலாம்.

திராவிட இயக்கத்தின் ஒரு கிளை என்ற முறையில் அனைத்து மக்களுக்கும் கல்வி என்பதை இவர்கள் நிறைவேற்றி இருக்கவேண்டும். இட ஒதுக்கீட்டில் முன் செல்வதற்கு முழுமுயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். விதி நம்பிக்கை அதிர்ஷ்டம் ஆகிய உணர்வுகளை மக்களுக்குள் தூண்டுவதாகிய பரிசுச் சீட்டு முறையை அறவே ஒழிக்க வேண்டும். மதுபானத்தின் மூலம் அரசு வருமானத்தை அதிகரிப்பதை ஒரு கேவலமாக உணர்ந்து நீக்க வேண்டும். தமிழைப் பயிற்சி மொழி, ஆட்சி மொழி ஆக்குவதில் இவர்கள் பிற மாநிலங்களுக்கு முன் மாதிரியாய்ச் செயல்பட்டிருக்கவேண்டும். ஆயிரக்கணக்கில் பிறமொழி இலக்கியங்கள், அறிவுநூல்கள் ஆகியவற்றைத் தமிழில் கொண்டு வந்திருக்க வேண்டும். அனைத்து ஊர்களிலும், பள்ளிகளிலும் நூலக இயக்கத்தை முனைப்புடன் செயல்படுத்தவேண்டும். தமிழ் நிலத்தை முதலாளிகள் நாசப்படுத்துவதைத் தடுத்திருக்க வேண்டும். தமிழ் மக்களைச் சுரண்டுவதன் மூலம், தமிழ் மக்களைக் கொள்ளையடிப்பதன் மூலம் இவர்கள் தமக்குச் செல்வம் குவித்துக் கொண்டதன் விளைவாகத் தமிழ் மக்களை வறியவர்கள் ஆக்கித் தமிழ் வரலாற்றுக்குத் துரோகம் இழைத்திருப்பதை என்னவென்று சொல்வது? இந்து போன்ற இதழுக்கு நிகராகத் தமிழில்/ஆங்கிலத்தில் ஓர் இதழை இவர்கள் நடத்தியிருக்கமுடியாதா? ஊழலைத் தமிழ் மக்களின் வாழ்க்கை முறையாக மாற்றியதன் மூலம், தமிழ் மக்களின் அற உணர்வை இவர்கள் நாசப்படுத்தினார்கள். வறிய நம் மக்கள் இந்த நிலையில் தமிழை, தமிழ் இலக்கியத்தை எப்படி நேசிப்பார்கள்? தேர்தல் முறை என்ற அரசியலைக் கடைப்பிடிப்பதற்காகத் தமிழ் மக்களின் வரலாற்றை அழிக்கும் முறையில் திராவிட இயக்கம் செயல்படலாமா? இப்படி எல்லாம் நூறு கேள்விகள் கேட்பதற்கு இடம் வைத்து விட்டார்கள்.

**6.** தமிழில் சிற்றிதழ் இயக்கம் என்பது, தமிழகச் சூழலில் ஆதிக்கத்திற்கு எதிரான இலக்கியம்/பண்பாட்டு இயக்கம்/அறிவியக்கம் காலந்தோறும் ஆதிக்கத்திற்கு எதிரான விடுதலைமரபின் ஒரு

கூறாகச் சிற்றிதழ் இயக்கத்தை நாம் காண முடியும். இம்முறையில் இந்தியாவின் நெடுங்கால ஆதிக்க மரபுக்கு எதிரான திராவிட மரபின் தற்கால வெளிப்பாடாகச் சிற்றிதழ் இயக்கத்தை நாம் காணலாம். இது அறிவியக்கம் என்ற முறையில் அனைத்துப் பார்வைகளையும் தன்னுள் வளர்க்கக்கூடியதாய் அமைகிறது. திராவிட இயக்கத்தினுள்ளும் இந்தப் பார்வைகள் படர வேண்டும். பெரியாரின் எதிர்க்கலாச்சாரக் கூறுகளோடு பெண்ணியமும், தலித்தியமும் இணைய முடியும். பெரியாரின் சமதர்மப் பார்வையை நெடுங்காலத் திராவிட மரபிலிருந்து வளர்த்தெடுக்க முடியும். மனித விடுதலை என்பது திராவிட மரபின் மையம் என்று காணமுடியும். இவ்வகையில் திராவிட மரபுடன் மார்க்சியம் இணைந்து கொள்ளமுடியும். திராவிட மரபை இவ்வாறு பொருள்படுத்துவது, இன்றைய வரலாற்றுச் சூழலுக்குப் பெரிதும் பொருந்தும். இன்றைய/எதிர்காலத் தேவைகளை முன்நிறுத்தித்தான் வரலாற்றை நாம் கற்கிறோம்/பொருள்படுத்துகிறோம். 21-ஆம் நூற்றாண்டுக்குள் திராவிட மரபென்பதை இப்படித்தான் நாம் கொண்டு செல்லமுடியும்.

# IV. மார்க்சியம் - ஒரு மறுபார்வை

1. மார்க்சியம் தோற்றதா என்ற கேள்விக்கு, முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியம் தான் தோற்றது என்று பதில் கூறலாம். உலகளவில் முதலாளியம் இன்று மாபெரும் வெற்றி பெற்றதான தோற்றம் நிலவுகிறது இந்த முதலாளியம் உயிரித் தொழில் நுட்பம், கணிணி உற்பத்தியில் வேதியியல் வினை முதலியவற்றைப் பயன்படுத்தியதோடு இராணுவத் திட்டங்களையும், பொருளியல் முதலான போர்த்திட்டங்களையும் தொடர்ந்து வகுத்து நிறைவேற்றி யதன் மூலம் தன் வெற்றியை நிரந்தரப்படுத்திக் கொள்வதாகச் சொல்கிறது. மூன்றாம் உலக நாடுகளின் பொருளாதாரத்தையும் அரசியலையும் தன்வசப்படுத்திக் கொண்டதன் மூலமும் முதலாளியத்தின் வெற்றி உறுதிப்பட்டிருக்கிறது. உலகின் பலநாடுகளில் உள்ள பிற்போக்கு சக்திகள் அனைத்தையும் தனக்கு ஆதரவாக இது திரட்டிக் கொண்டிருக்கிறது. நுகர்வியம் என்ற வெறியை அனைத்து மக்களுக்குள்ளும் இதுவெற்றிகரமாகப் பரப்பியிருக்கிறது. உலகத்தை நவீனப்படுத்தியிருப்பதோடு தொடர்புச் சாதனங்களின் மூலம் சுருக்கி வருகிறது. படிப்பாளிகள் அனைவருக்குள்ளும் தன் பாதிப்பைப் பதிய வைக்கிறது அவர்களின் அறிவையும் வாழ்வையும் தன்வசப்படுத்தியிருக்கிறது.

முதலாளிய வெறித்தனத்தோடு ஒத்துச் செல்லாதவர்கள் வரலாற்றில் வறியவர்கள் எனவும், மூடர்கள் எனவும், பிற்போக்கானவர்கள் எனவும் ஒதுக்கப்படுகின்றனர். மக்களுக்கான ஜனநாயகத்தை, தன்னால் தான் வழங்கமுடியும் என்று முதலாளியம் படிப்பாளிகளை நம்ப வைத்திருக்கிறது. பொருளையும் அதிகாரத்தையும் மையப்படுத்துகிற நாகரிகம்தான் உலக மக்கள் அனைவருக்குமான மேம்பட்ட நாகரிகம் என்று முதலாளியம் சொல்லுகிறது. இந்த முதலாளியத்திற்கு ஏகாதிபத்தியம் என்றோ, புதிய காலனியம் என்றோ, பிற்பட்ட முதலாளியம் என்றோ எந்தப் பெயரில் இதனை அழைத்தாலும், நிலப்பிரபுத்துவம் முதற்கொண்டு பிற்பட்ட சமுதாய, பொருளியல் போக்குகள் அனைத்தையும் தனக்குள் இது உள்வாங்கிக் கொண்டதாகத்தான் இருக்கிறது. உலகநாகரிகத்தை வசப்படுத்துகின்ற முதலாளியத்தின் போர்த் திட்டங்களை முறியடிக்கக் கூடியதாக மார்க்சியம் தன்னை வளர்த்துக்கொள்ளவில்லை என்பதைத்தான் மார்க்சியம் இதுவரை வெற்றி பெறாததற்கான காரணம் என்று சொல்ல முடியும்.

வரலாற்றில் மார்க்சியத்திற்குப் பின்னடைவு நேர்ந்துள்ளது என்பது உண்மைதான். இந்தப் பின்னடைவைத் தோல்வி என்று

சிலர் கூறி மகிழ்ச்சியடையலாம். இவர்களை வரலாற்றின் இயக்கம் தெரியாதவர்கள் என்றுதான் சொல்ல முடியும். இந்தப் பின்னடைவுக்கு மார்க்சிய மூலவர்களை முதற்காரணமாகச் சொல்லமுடியாது. வரலாற்றில் பன்முகப் போக்குகளைத் தொடர்ந்து ஆய்வுக்குட்படுத்தி மார்க்சியத்தை வளர்த்தெடுக்காதவர்களைத்தான் நாம் குற்றம் சொல்ல முடியும். இன்றைய உலகச் சூழல், மார்க்சியம் பற்றிய ஒரு மறு ஆய்வை நமக்குள் தூண்டுகிறது. மார்க்சியம் தன்னைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுமானால் தன் உள்ளுறை ஆற்றல்களைக் கண்டறிந்து வளர்த்துக் கொள்வதோடு உலகச் சூழலில் ஏற்பட்டுள்ள புதிய போக்குகளில் தேவையானவற்றைத் தன் அடிப்படைகளுக்கு ஒத்தமுறையில் உள்வாங்கிக் கொள்வதன் மூலம்தான் மார்க்சியம் தன்னை நிலை நிறுத்திக்கொள்ள முடியும்.

இன்றைய நிலையில் உலகத்தை, மனித வரலாற்றை அழித்தொழிக்கும் அளவுக்கு முதலாளியம் ஆணவத்தோடு சென்று கொண்டிருக்கிறது. உலக அழிவை, வரலாற்றின் அழிவைத்தடுத்து உலகத்தை மீண்டும் போர்அற்றதாக, ஏற்றத்தாழ்வுகளுக்கு இடமில்லாததாக, பசுமையானதாக, அமைதியுடையதாக மாற்றுவதற்கு மார்க்சியத்தால் முடியும். ஆகவே மார்க்சியம் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டிய இன்றியமையாத பொறுப்புக்கு ஆளாகியுள்ளது. மார்க்சிய இயக்கங்கள் தமது பழங்காலத்திலிருந்து, இருண்டகாலத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளத்தான் வேண்டும். இவ்வாறெல்லாம் செய்வதன் மூலம் மார்க்சியம் தன் இலக்கையும் அடிப்படைகளையும் இழந்துவிடும் அல்லது இழக்கத்தான் வேண்டும் என்றுநாம் அஞ்சவேண்டியதில்லை. மார்க்சியம் நிலைபெறும். கூடவே மாவோவின் ஒரு கூற்றை இங்கு நினைவு கொள்ளலாம் "மனிதன் இல்லாத காலமும் வரும். மார்க்சியமும் பிற்போக்கான தத்துவம் என்ற நிலை வரும்". வரலாற்றின் தொடர்ந்த வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டவர் என்ற முறையில் மாவோவின் இந்தக் கூற்றை நாம் புரிந்து கொள்ள முடியும். மனித விடுதலைதான் நமக்கு முக்கியம். மனித விடுதலைக்கு மார்க்சியம் திறவுகோல் என்ற முறையில்தான் மார்க்சியத்தை நாம் நேசிக்கிறோம். மார்க்சியத்தைத் தாங்கிக் கொண்டிருப்பது நமக்கு நோக்கமல்ல. மார்க்சியத்தை வளர்த்தெடுப்பதற்கு அது அடிப்படைகள் அனைத்தையும் இழந்துவிடும் என்ற நிலை வருமானால், மனித விடுதலை கருதி அதனையும் நாம் ஏற்றுக்கொள்ளவே விரும்புகிறோம். மற்றபடி மார்க்சியத்தின் வளத்தையும் உள்ஆற்றல்களையும் புரிந்து கொள்ளாமல் மார்க்சியத்தைக் குறைத்து, ஒதுக்கிவிடும் எத்தகைய முயற்சியும் நமக்கு உடன்பாடில்லை. புதிய கோட்பாடுகள் உலகத்திற்கு அறிமுகமாகி வருகின்றன. இவற்றை எதிர்கொள்ளும் முறையில் மார்க்சியம் தன்னை வளர்த்துக்கொள்ள முடியும் என்று தான் நாம் நம்புகிறோம். இந்தியச் சூழல் அல்லது

தமிழகச் சூழல் மார்க்சியத்தை ஒதுக்கிவிட முடியாது என்பது மட்டுமல்ல மார்க்சியத்தை ஒதுக்கி விடுமானால் இந்தியச் சூழல் அல்லது தமிழகச் சூழல் மேலும் பின்னடைவுக்குள்ளாகி உலக முதலாளியத்தின் ஊடுருவலின் விளைவாகத் தன்னை அழித்துக் கொள்ளும் என்றும் நம்புகிறேன். இத்தகைய கவனத்தோடு தான் மார்க்சியம் ஒருமறுபார்வைக்குள் நாம் செல்லுகிறோம்.

2. மார்க்சியத்தைச் செயல்படுத்துவதிலும் புரிந்து கொள்வதிலும் ஏற்பட்ட சில தொடர்ச்சியான வரலாற்று அனுபவங்கள் பற்றி இப்பொழுது தொகுத்துப் பார்க்கலாம். மாவோவின் வெளிச்சத்தில் வரலாற்று அனுபவங்கள் பற்றிக் கூடுதலான புரிதலை நாம் பெற்றுள்ளோம். இதன் காரணமாக இடைக்காலத்தில் மார்க்சியத்தில் ஏற்பட்ட பல பிரிவுகள் நமக்குத் தெளிவாகியுள்ளன. அன்றியும் மார்க்சியத்தில் தேவையான சில திருத்தங்கள் செய்து கொள்வதற்கான வாய்ப்புக்கள் நமக்கு ஏற்பட்டன. மாவோவின் வெளிச்சத்தில் மார்க்சியம் பற்றி முன்னும் பின்னுமாக நாம் பார்ப்பதும் சாத்தியப் - பட்டிருக்கிறது. இந்திய வரலாறு பற்றிய புரிதலும் நமக்கு மேலும் சில வெளிச்சங்களைத் தருவதும் சாத்தியம்.

சோவியத் யூனியன் அனுபவங்களிலிருந்து தொடங்கலாம். முதலாளியத்தின் வளர்ச்சி முற்றுப்பெறாமல், முதலாளியத்தைக் கடந்து சோசலிசத்திற்குள் செல்லமுடியாது என்று லெனினுக்குத் தெரிந்துதான் இருந்தது. பிளக்கனோவ் முதலியோர்களின் விமர்சனங்களை ஒதுக்கிவிட்டு லெனின் அக்டோபர் புரட்சியைச் செய்தார். முதலாளியம் செய்து முடிக்க வேண்டிய மாற்றங்களை, பாட்டாளி வர்க்கத்தின் தலைமையில் செய்து முடிப்போம் என்றார். மாஸ்கோவைக் கைப்பற்றியவுடன் அதுவரை உலக வரலாறு கண்டறியாத புதிய பிரகடனங்களை லெனின் வெளியிட்டார். தொழிற்சாலைகள் முதலியவற்றை நாட்டுடைமையாக்கினார். நிலப்பிரபுத்துவ சக்திகளிடமிருந்து உற்பத்திச் சக்திகளை விடுவிக்கும் முறையில் லெனின் பல திட்டங்களை மேற்கொண்டார். உடனடியாக சோசலிசத்தைச் செயல்படுத்த முடியாது என்பதனால் புதிய பொருளாதாரத் திட்டம் என்பதைக் கொண்டுவந்தார். 1917 அக்டோபரில் தொடங்கிய புரட்சி உடனடியாக முற்றுப்பெறவில்லை. எதிரிகளைத் தேடிச்சென்று ஒடுக்கச் சில ஆண்டுகள் ஆயின. எதிரிகள் முற்றாக ஒழிந்தார்களா என்ற கேள்விக்கும் இடமிருக்கிறது.

உற்பத்திச் சக்திகளைப் பெருக்க வேண்டும். ஐரோப்பிய நாடுகளில் லெனின் எதிர்பார்த்த புரட்சி நடைபெறவில்லை. ஐரோப்பிய

நாடுகளில் லெனின் விரும்பிய புரட்சி நடைபெற்றிருக்குமானால், அந்த நாடுகளிலிருந்து சோவியத் யூனியனின் பிற்பட்ட பொருளியல் நிலவரங்களிலிருந்து விடுவிப்பதற்கு தேவையான அறிவியல் தொழில் நுட்பங்கள் உட்பட பல்வேறு உதவிகள் கிடைத்திருக்கும். இத்தகைய சூழல் அன்று வாய்க்கவில்லை. வாய்க்காத நிலையின் காரணமாகவும் புதிய பொருளாதாரத் திட்டத்தை லெனின் அறிவித்தார். தொழில் நிர்வாகம் முதலியவற்றை முதலாளிய மேலாளர்கள் மற்றும் நிபுணர்களிடமிருந்துதான் பாட்டாளிவர்க்கம் கற்றுக்கொள்ள வேண்டி இருந்தது.

உற்பத்திச் சக்திகளை விடுவித்துப் பொருள் உற்பத்தியில் மிக வேகமாக முன்னேறினால் மட்டுமே, ஐரோப்பா கடந்தமூன்று நூற்றாண்டுகளில் பெற்ற வளர்ச்சியை சோவியத் யூனியன் அடைய முடியும் என்ற முறையில் லெனின் முதலியவர்கள் கடுமையாகச் செயல்பட்டார்கள். ஐரோப்பாவின் உற்பத்தி, மற்றும் நுகர்வு விகிதத்தை லெனினுக்குப் பின்வந்தவர்கள் அடிக்கடி மேற்கோள் காட்டினார்கள். விரைவான தொழில் பெருக்கத்திற்காக அமெரிக்காவின் டெய்லரிசம் என்ற தொழில் நுட்பவியலை லெனின் ஆதரித்தார். தொழிலாளர்கள் மத்தியில் கடுமையான எதிர்ப்பு சில ஆண்டுகளுக்குத் தொடர்ந்தது. எதிர்ப்புக்களைக் கடுமையாக ஒடுக்க வேண்டியுமிருந்தது. சோவியத்துகள் அக்டோபர்ப் புரட்சியை அடுத்த உடனடிக் காலத்திலேயே கலைக்கப்பட்டதும் இங்கு நினைவுக்குவரலாம். மெல்ல மெல்லச் சிறிய அளவில் உழைப்பு முகாம்கள் ஏற்பட்டன. பாட்டாளி வர்க்கத்தின் மீது கட்சி மற்றும் அரசின் அதிகாரம் அதிகரித்தது. மின் உற்பத்தியைப் பெருக்குவதன் மூலம் சோசலிசத்தை விரைவில் அடையலாம் என்று லெனின் நம்பினார். கட்சிக்குள்ளும் வெளியிலும் கடுமையான கருத்து வேறுபாடுகள் நிலவியபோதிலும் லெனின் மக்கள் சார்பில் செயல்பட்டதன்மூலம் லெனின் மக்கள் மத்தியில் பெருமளவு நம்பிக்கையை ஏற்படுத்தினார். தொலை தூரப்பிரதேசங்கள் இன்னும் தொழில் புரட்சி என்ற எல்லைக்குள் வரவுமில்லை. ஐரோப்பாவிலிருந்து மாறுபட்ட, ஆசிய நிலவரங்கள் என்ற போக்கு அங்கெல்லாம் தொடர்ந்து நிலவியது.

லெனின் தன் இறுதிக்காலத்தில் சில உண்மைகளைத் தெரிந்து கொண்டார். கட்சிக்குள் சர்வாதிகாரம் நுழைவதைக் கண்டு, அவ்வகைப் போக்கைக் கட்சிக்குள்ளிருந்து களைய விரும்பினார். கூட்டுறவுப்பண்ணைகள் என்பதைவிடக்கூட்டுறவுகளை ஏற்படுத்துவதையே லெனின் விரும்பினார். பிரெஞ்சு நாட்டிலிருந்து இயந்திரவியல் பொருள்முதல்வாதிகள் பலரது விரிவான நூல்களை விரைவில் மொழி பெயர்த்து வெளியிடவேண்டியதன் தேவையை வற்புறுத்தினார்.

கூடவே ஹெகலின் நூல்களை ஆழமாகப் படித்து இயங்கியலை மேலும் வளர்த்தெடுக்க வேண்டும் என்றும் கூறினார். மெய்யியலைப் பொறுத்தவரை விரிவான ஆழ்ந்த அறிவு கொண்டவர் லெனின். மேற்கத்திய அறிவியல் வளர்ச்சிக்கு ஒத்த முறையில் பொருள் முதல்வாதத்தை வளர்க்க முயன்றவர் லெனின். பொருளியல் ஆய்விலும் லெனினைக் குறைசொல்லமுடியாது. சோவியத் யூனியனின் ஆசியப் பகுதிகளில் கிராமசமூகங்களில் பொதுவுடைமை நிலவுவதைத் தன் இறுதிக்காலத்தில் மார்க்ஸ் கண்டறிந்து இங்கெல்லாம் முதலாளியத்திற்குச் செல்லாமலேயே சோசலிசத்திற்குள் செல்ல முடியும் என்று எண்ணினார் மார்க்ஸ். லெனின் தொடக்க காலத்திலேயே மார்க்சின் இந்தப் புரிதலை மறுத்தார். பொதுவுடைமை நிலவியதாக மார்க்ஸ் குறிப்பிட்ட பிரதேசங்களில் முதலாளியம் ஊடுருவி வளர்ந்து வருவதையும், அந்தப் போக்கை இனிப் பின்னுக்குத் தள்ள முடியாது என்றும் லெனின் கண்டு எழுதினார். முதலாளியத்தின் இறுதிக்கட்டம் என ஏகாதிபத்தியத்தைக் கண்டார்.

சோவியத் யூனியனில் மாற்றுக் கருத்துள்ளவர்கள் லெனின் காலத்திலேயே ஒடுக்குமுறைக்குள்ளாயினர். இத்தகைய ஒடுக்கு முறையில் லெனின் தீவிரமாக இருந்தார் என்று சொல்லவும் முடியாது. கம்யூனிசம் என்ற கருத்தியலைக் கடுமையாக எதிர்த்தவர் பாவ்லோவ் என்ற போதிலும் அவரது ஆய்வுகளின் பொருள்முதல்வாதக் கூறுகளைப் புரிந்துகொண்டு பாவ்லோவின் ஆய்வுகளுக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் லெனின் வழங்கச் செய்தார். சமூகவியல் ஆய்வு அறிஞரான கிரோபோர்க்குடன் நல்லுறவு கொண்டிருந்தார். டால்ஸ்டாயின் படைப்புக்கள் இன்றளவும் மரியாதையோடு படிக்கப்படுவதற்கு லெனினைத்தான் காரணமாகச் சொல்ல முடியும். கலாச்சாரம் முதலிய களங்களில் தீவிரவாதம் மேலோங்கி வரும் சூழலில் ஆற்றல் மிகுந்த தொன்மையான மரபுக் கூறுகளிலிருந்து மார்க்சியத்தை வளர்த்தெடுக்க வேண்டியதன் தேவையை லெனின் வற்புறுத்தினார். மரபின் முனையைத் தொடர்ச்சிகளிலிருந்து முற்றாகத் துண்டித்துக் கொண்டு பாட்டாளி வர்க்கக் கலாச்சாரத்தை உண்டாக்கமுடியாது என்று லெனின் கருத்துரைத்தார். பாட்டாளி வர்க்க விஞ்ஞானம் என்ற பாக்னோவ் கருத்தை லெனின் மறுத்துரைத்தார். தேசிய இனங்களின் வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டுமென்று லெனின் விரும்பினார். இதற்கெதிரான கூறுகள் கட்சிக்குள் இருப்பதை லெனின் ஒப்புக் கொள்ளவில்லை. லெனின் காலம் முடிவுக்கு வந்தது. ஸ்டாலின் சகாப்தம் தொடங்கியது.

3. ஸ்டாலின் சகாப்தம் பற்றி இங்கு சுருக்கமாகவே தொகுத்துக்

கொள்ளலாம். லெனினியத்தை வளர்த்தெடுக்கும் முறையில்தான் ஸ்டாலின் தொடங்கினார். லெனின் சாதிக்கமுடியாததைத்தான் சாதிக்கவேண்டுமெனச் செயல்பட்டார். கனரகத் தொழில்களைப் பெருமளவில் ஏற்படுத்த முனைந்தார். ஏகாதிபத்தியத்தின் தாக்குதலை எதிர்பார்த்து ராணுவத்தைப் பெருக்கினார். கூட்டுப் பண்ணைகளைப் பேரளவில் ஏற்படுத்தும் நோக்குடன் கடுமையாகச் செயல்பட்டார். குலாக்குகளாகிய நிலப்பிரபுக்களை ஒழித்துக் கட்டி அவர்களிடமிருந்து நிலங்களைப் பறித்து, கூட்டுப்பண்ணைகள் ஏற்படுத்தினார். குலாக்குகள் என்று தவறாகக் கணித்துப் பணக்கார விவசாயிகளைக் கொன்றொழித்தார். போல்ஷ்விக் கட்சிக்குள்ளும், நாட்டில் பரவலாகவும் ஏகாதிபத்திய ஊடுருவல் நடைபெற்றிருப்பதாக முடிவுசெய்து மாஸ்கோ விசாரணைகளைத் தொடங்கினார். உளவுத் துறை நாளுக்கு நாள் விரிவடைந்ததோடு, வலுப்பெற்றது.

இராணுவப் பெருக்கம், கனரகத் தொழில்வளர்ச்சி முதலியவற்றின் தேவைக்காகப் பெருமளவில் மூலதனத் திரட்டலைச் செய்தாக வேண்டும். இதற்காக உழைப்பாளர் முகாம்கள் நாடு முழுவதும் ஏற்படுத்தப்பட்டன. பாட்டாளி வர்க்கத்தின் மீது சுரண்டலும் ஒடுக்குமுறையும் தொடர்ந்து அதிகரித்தன. கட்சிக்குள்ளிருந்த அக்டோபர் புரட்சியில் பங்கு பெற்றவர் உள்பட பெரும்பாலானவர்கள் களையெடுக்கப்பட்டனர் அல்லது கொல்லப்பட்டனர். ஹங்கேரியில் நடைபெற்ற புரட்சி ஒடுக்கப்பட்டது. தம் உரிமைக்காகவும், விடுதலைக்காகவும் புரட்சியில் ஈடுபட்ட தேசிய இனங்கள் ஒடுக்கப்பட்டன; சிதறடிக்கப்பட்டன. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் என்ற பெயரில், பாட்டாளி வர்க்கத்துக்குப் பதிலாகக் கட்சியின் சர்வாதிகாரம் செயல்பட்டது.

இரண்டாவது உலகப் போரின்போது தேசப்பற்று என்ற உணர்வு மீண்டும் எழுப்பப்பட்டது. சோசலிச உணர்வுக்கு எதிரான தேசப்பற்று என்ற உணர்வு ஊட்டப்பட்ட நிலையில் செஞ்சேனையோடு மக்களும் உயர் அளவில் ஒத்துழைத்துப் போராடினர். பழைய இராணுவத் தலைவர்கள் திரும்ப அழைக்கப்பட்டனர். நாஜிப் படைகளுக்கெதிரான போர்த்திட்டத்தை ஸ்டாலின் தானே வகுத்தலில் முனைந்து கொண்டிருந்தார். தொடக்க காலத் தோல்விகளை ஸ்டாலின் புரிந்து கொண்டார். 20ஆவது கட்சி காங்கிரசில் ஸ்டாலின் மீது குருச்சேவ் முன்வைத்த கடுமையான விமர்சனங்கள் நீண்டகாலம் மறுக்கப்பட்ட போதிலும் பிறகு அந்த விமர்சனங்கள் உண்மைதான் எனப் பலரால் ஒப்புக்கொள்ளப்பட்டன. ஸ்டாலினைப் போலவே சோவியத் யூனியன் செய்த தியாகங்கள் மகத்தானவை. ஸ்டாலின் செய்த தவறுகளும் மகத்தானவை என்றுதான் சொல்ல

முடியும். ஸ்டாலின்தன் இறுதிக்காலத்தில் இன்னொரு புரட்சிக்குத் தன்னைத் தயாரித்துக்கொண்டிருந்தார். சோவியத் யூனியனில் இன்னும் பலவகையான உடைமைகள் நிலவியதைக் கண்டு அவர்களை அடியோடு ஒழிக்க விரும்பினார்.

"சோவியத் யூனியன் பொருளாதாரச் சிக்கல்கள்" என்ற அவரது நூல் ஸ்டாலின் கருத்தைத் தெளிவுபடுத்தியது. அரசுப் பண்ணைகளில் நிலவுவது ஒருவகை உடைமை முறை. கூட்டுப் பண்ணைகளில் இன்னொருவகை உடைமைமுறை. இவைதவிரப் பண்ணையில் வேலை செய்பவர்களுக்குத் தனி நிலங்களும் இருந்தன. தொழிலாளர்களுக்கும் உழவர்களுக்கும் வாழ்க்கைத் தரத்தில் வேறுபாடு நகரத்திற்கும் கிராமத்திற்கும் இடையிலும் வேறுபாடு. இவற்றையெல்லாம் முற்றாக அழித்து ஒழித்தாலொழிய கம்யூனிசம் சாத்தியமில்லை. இவற்றையெல்லாம் செய்து முடிக்கப் பல - லட்சம் பேரைக் களையெடுத்தாக வேண்டும். இத்தகைய ஒரு கட்டத்தில்தான் ஸ்டாலினுக்கு மரணம் நேர்ந்தது.

இதன்பிறகு குருசேவ் முதற்கொண்டு பிரஸ்னேவ் வழியாகக் கோர்பசேவுக்கு வந்து சேருகிறோம். சோவியத் யூனியனில் சோசலிச மாற்றம் நடைபெற்று முடிந்தது என்று குருசேவ் காலத்தில் பிரகடனங்கள். அணு ஆயுதங்கள் வந்துவிட்டதால் போர்க்களத்தில் ஏகாதிபத்தியத்தை வீழ்த்தமுடியாது. சோவியத் யூனியனின் அரசு அனைத்து மக்களின் அரசு, சோவியத் யூனியனில் வர்க்கங்கள் இல்லை. வர்த்தகம் பொருளாதார உதவி மூலமே மூன்றும் உலக நாடுகளை சோசலிசத்திற்குள் கொண்டு செல்லமுடியும். இதற்குப் பெயர் முதலாளியம் அற்ற பாதை. புரட்சிக்கு இனித் தேவையில்லை. இவ்வாறெல்லாம் குருசேவ் புதிய பிரகடனங்களை வெளியிட்டார். முதலாளியம் வெளிப்படையாகத் தன் தோற்றத்தைக் குருசேவ் மூலம் வெளிப்படுத்தியது. பிரஸ்னேவ் ஸ்டாலினியத்தை மீண்டும் உயிர்ப்பிக்க முயன்று தோல்வியடைந்தார்.

கோர்பசேவ் கம்யூனிஸ்டு கட்சியிலிருந்தும் சோசலிசத்திற்கான நடைமுறைகளிலிருந்தும் சோவியத் யூனியனை விடுவித்தார். கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் தங்கவைக்கப்பட்டுள்ள சோவியத் யூனியனின் இராணுவம், அந்தந்த நாடுகளில் மக்களின் எழுச்சிகளுக்கெதிராக அரசுகளுக்கு ஆதரவாக இனிசெயல்படாது என்று அறிவித்தார். அங்குள்ள அரசுகள் சடசட என வீழ்ந்தன. சோவியத் யூனியனுக்குள் மறுசீரமைப்பு, மனம் திறந்த தொழில்வளர்ச்சி பூஜ்யம் சதம். பண்ணைகளில் எந்த வேலையும் நடைபெறவில்லை காரணம் உழவுக் கருவிகளுக்கு அரசு தந்த கடன்களும் உதவிகளும் காணாமல்

போயின. தொழில் நிர்வாகிகளும் அரசு அதிகாரிகளும் கட்சித் தலைவர்களும் எல்லாவற்றையும் சுருட்டிக் கொண்டனர். மேலும் மேலும் இனி இராணுவத்தைப் பெருக்கமுடியாது. தொழில் வளர்ச்சி அறவே சாத்தியமில்லை. வெளிநாட்டு உதவிகள் மறுக்கப்பட்டன. வீழ்வதைத்தவிர இனிவேறு வழியில்லை.

எல்சின் எழுச்சி தொடங்கியபொழுது நாட்டில் அவனுக்கு எதிர்ப்பு இல்லை. இரண்டு கோடி உறுப்பினர்கள் கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்தார்கள். ஒருவர்கூட தெருவுக்கு வந்து போராடவில்லை. ஒரு சொட்டு இரத்தம் கூட அவர்கள் சிந்தவில்லை. கட்சியில் இருந்தவர்கள் வாழ்ந்த வாழ்க்கை பற்றி அனைத்து மக்களும் அறிந்திருந்தனர். அவர்களின் வீழ்ச்சியை அவர்கள் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டனர். இவ்வாறாக சோவியத் யூனியனில் சோசலிசம் என்று சொல்லப்பட்டு வந்த சகாப்தம் முடிவுக்கு வந்தது. இதன்பிறகு எவ்வளவோ நடைபெற்றன. மார்க்ஸ், லெனின் முதலியவர்களின் சிலைகள் களங்கப்படுத்தப்பட்டன. சார் காலம் இன்று போற்றப்படுகிறது நாடுகள் பிரிந்தன. விலைவாசி 20.25 மடங்கு உயர்ந்தது. கட்சி அதிகாரிகளும், அரசு அதிகாரிகளும் வரிசையில் நின்று பொருட்களை வாங்கிக் குவித்தனர். இவர்கள் சேர்த்து வைத்துள்ள செல்வங்களை யெல்லாம் பறிமுதல் செய்ய இயலுமானால் வளர்ந்த நாடுகளிடம் உதவிகேட்டு கோர்ப்பசேவ் மண்டியிட்டு இருக்கவேண்டாம். ஆனால் இவர்களின் செல்வத்தைக் கோர்ப்பசேவ் பறிக்க முயன்றார் என்றால் அன்றே அவர் காணாமல போயிருப்பார்.

4. சோவியத் யூனியனில் நடைபெற்ற நிகழ்வுகள் குறித்து நாம் இங்கு கூடுதலாகப் பார்த்ததன் காரணம், நமக்குவந்து சேர்ந்த மார்க்சியம் பெரும்பாலும் சோவியத் யூனியனின், அதிலும் குறிப்பாக இரஷ்ய அனுபவத்திலிருந்து நமக்கு வந்து சேர்ந்தது என்பதனால் தான். இந்தியச் சூழலில், இந்த அனுபவப் பாதிப்போடு என்ன செய்தோம் என்று பிறகு பார்க்கலாம். சோவியத் யூனியனில் நடைமுறைப்படுத்தப்பட்ட சோசலிசத்திற்கான செயல்பாடுகள் பற்றி இன்று நமக்கேற்பட்டுள்ள புரிதலில் பெரும்பகுதி மாவோவின் வழியில் நமக்கு ஏற்பட்டது தான். இதன்வழியேதான் மார்க்சியம் பற்றியும் தெரிந்து கொண்டுள்ளோம். மாவோவின் நெறிப்படுத்துதலோடு கூடிய சீன அனுபவங்களும் நமக்குப் புரிதலைத் தந்திருக்கின்றன.

உற்பத்திச் சக்திகளுக்கு முதன்மை தருவது என்பது இறுதியில் முதலாளியத்திற்கே கொண்டு சேர்க்கும் என்பது மாவோவின் நெறி. உற்பத்திப் பெருக்கம் - அதாவது பொருள் உற்பத்தியின் பெருக்கத்தைக் கொண்டு சோசலிசம் வந்துவிடும் என்பது உண்மையாகாது. சோவியத்

யூனியனில் புரிதல் இவ்வாறாகத்தான் இருந்தது. மனிதர்கள் நுகரும் பொருளை அதிகரிப்பதென்பது மேற்கத்தியரின் வாழ்க்கை முறை மற்றும் தொழில்முறை கனரகத் தொழில் பெருக்கம் என்பது அதன் சாரத்தில் முதலாளியப் பெருக்கத்திற்குக் கொண்டு சேர்க்கும். கனரகத் தொழில் பெருக்கத்திற்கேற்ப அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சி முதலியவற்றைச் செய்தாக வேண்டும். இதற்காக அறிவு ஆய்வு நிறுவனங்கள் ஏற்படுத்தவேண்டும். இவற்றுக்காகப் பெரிய நகரங்கள் போக்குவரத்துச் சாதனங்கள் வேண்டும். பொருள் உற்பத்திக்குத் தேவையான எல்லாவற்றையும் மின்மயப்படுத்த வேண்டும். இயந்திரங்கள் பெருகியாக வேண்டும். இவற்றிற்கான மூலதனப் பெருக்கத்திற்காகத் தொழிலாளர்களை, உழவர்களைச் சுரண்டவேண்டும், ஒடுக்குமுறைக்கு அவர்களை உள்ளாக்கவேண்டும்.

மையங்களில் அதிகாரம் குவியும், நிபுணர்களும் அதிகாரிகளும் அதிகரிப்பார்கள், மக்களின் தேவைகள் புறக்கணிக்கப்படும், மனித உறவுகள் நாசமாகும், அவலங்கள் அதிகரிக்கும். எல்லாவற்றையும் கட்சியும் அதிகாரமும் மூடி மறைக்க வேண்டும். தத்துவங்களில் குளறுபடிகள் செய்தாக வேண்டும். அந்நியமாதலுக்கு இடமில்லை யென்று சொல்லவேண்டும். பெண்ணுக்குத் தனி வாழ்க்கை இல்லையென்றும் சொல்லவேண்டும். பாலியலை முன்னுக்குக் கொண்டு வர வேண்டியதில்லை என்றும் சொல்லவேண்டும். உற்பத்திக் கருவிகள் வளர்ச்சி பெற்றால் மனித உறவுகள் தானே மேம்படும் என்று திரும்பத்திரும்பச் சொல்லவேண்டும் உற்பத்தி முறைதான் ஆதாரம். மேல் கட்டுமானம் தானே மாறும் என்று தத்துவம் செய்ய வேண்டும். பாட்டாளி வர்க்கத்திற்கான அரசியலைக் கலை இலக்கியங்கள் உள்ளடக்கமாகக் கொள்ளத்தான் வேண்டும். இலக்கியத்திற்குத் தனித்தன்மை தேவையில்லை. கலைஞர்கள், அறிவாளிகள் முதலானோர் ஊசலாடும் மத்திய தரவர்க்கத்தினர். இவர்கள் முதலாளிய வர்க்கத்தோடு தான் சேர்ந்திருக்கமுடியும். இவர்கள் கம்யூனிஸ்டுத் தலைமையை ஏற்றுக்கொண்டு தங்களைத் திருத்தி கொள்ள வேண்டும். பாட்டாளி வர்க்கத்திற்குத் தனிக் கலாச்சாரம் உண்டு. தனி விஞ்ஞானம் உண்டு. பிராய்டு, ஐன்ஸ்டீன் முதலியவர்கள் நமக்குத் தேவையில்லை. இயற்கையை நம் விருப்பங்களுக்கு மாற்றியமைக்க முடியும். அதிகாரமின்றி எதையும் சாதிக்க இயலாது. கட்சியை எதிர்ப்போர், மாற்றுக் கருத்துடையவர் ஏகாதிபத்தியத்தின் கைக்கூலிகள். இவர்களைக் களைவதில் தவறில்லை.

இந்த அடிப்படைகளில் சோசலிசம் என்ற பெயரால் முதலாளிய சர்வாதிகாரம் சோவியத் யூனியனில் கட்டப்பட்டது. மேற்குலகின் உற்பத்திப் பெருக்கத்தை நாமும் அடைந்தாக வேண்டும். மேற்குலகம்

நம்மை எந்த நேரமும் தாக்கியழிக்கும். அதற்கெதிராக நம்மைத் தயார் செய்து கொள்ளவேண்டும். அதிகாரத்திற்கு, கட்சிக்கு கட்டுப்படுவதன் மூலமே சோசலிசத்தைக் காப்பாற்ற முடியும்.

இவ்வாறுதான் சோவியத் யூனியனில் மேற்குலகிலிருந்து சற்று வேறுபட்டதான முதலாளியம் சோசலிசம் என்ற பெயரால் கட்டப்பட்டது இத்தகைய முதலாளியத்தைக் கட்டுவதற்குச் சோசலிசக் கனவுகள் ஊக்கியாகப் பயன்படுத்தப்பட்டன. குழந்தைகளுக்குக் கூடுதலான வசதி, அனைத்து மக்களுக்கும் கல்வி வாய்ப்புக்கள். அறிவியல் கல்விக்குக் கூடுதலான வாய்ப்பு முதலிய போக்குகள் வழியே சோசலிசம் பெருமை பெற்றது. எல்லோருக்குமான வாழ்க்கை என்ற கனவு எதிர்காலம் நோக்கிய நம்பிக்கையை விதைத்தது. துயரங்களை மக்கள் சகித்துக் கொண்டனர், பொறுத்துக் கொண்டனர். உளவுத் துறையின் ஆதிக்கம் பெருத்தபோது மக்கள் மௌனமாயினர். ஒருவரை மற்றவர் சந்தேகித்தனர். மனைவியோடு கணவன் தன் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளமுடியாது. எதிரிகளை இனம் கண்டு காட்டித் தருவது சோசலிசத்திற்கான கடமை. இவ்வாறெல்லாம் மனித உறவுகள் நாசமாக்கப்பட்டன.

மார்க்ஸ், ஏங்கல்ஸ் ஆகிய மார்க்சிய மூலவருக்குள் சோவியத் யூனியனில் திரிபுகளுக்கு ஆதாரங்கள் ஏதேனும் உண்டா என்று இங்கு காண்பது பொருந்தும்.

5. உற்பத்திச் சக்திகளின் ஆதாரம் கனரகத் தொழில்களுக்கு முதன்மை என்பனவெல்லாம் முதலாளியப் போக்குத்தான் என்று ஏற்கனவே மாவோ கண்டறிந்தார். அடித்தளம் மேற்கட்டுமானத்தைத் தீர்மானிக்கும் என்று மார்க்ஸ் கூறியதிலிருந்து சிறிதளவே ஏங்கல்ஸ் திருத்தம் செய்தார். இறுதியில் எல்லாவற்றையும் பொருளாதாரமே தீர்மானிக்கும் என்றார். இது மார்க்சியத்தின் அடிப்படைகளில் மிக முக்கியமான கருத்தாகக் கொள்ளப்பட்டது. இதன்பெரும் வீச்சைத்தான் சோவியத் யூனியனின் நடவடிக்கைகளில் நாம் பார்க்கிறோம். அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் மார்க்ஸ் பெருமளவு ஏற்றுக் கொண்டார். மேற்கத்திய நாகரிகம்தான் உலகிற்கே முன்மாதிரியான நாகரிகம் என்று மார்க்ஸ் நம்பினார். மனிதர்களின் தேவைகள் என்ன அளவில் இருக்க வேண்டுமென்று மார்க்ஸ் கணிக்கவில்லை. நுட்பமும் ஆற்றலும் கொண்ட இயந்திரங்களின் பெருக்கத்தின் விளைவாக மனிதகுலம் முழுவதும் உழைப்பின் சிரமங்களிலிருந்து விடுபடும் என்று மார்க்ஸ் கருதினார். "காலையில் தோட்டவேலை, பிற்பகலில் மீன்பிடித்தல், மாலையில் இசையும் நடனமும்" என்ற வகையில் கம்யூனிய சமூகத்தில் மனிதவாழ்க்கை அமையும் என்று

எழுதினார். பயன்மதிப்பு என்று வரையறை செய்தபொழுது வாழ்வுக்குப் பொருட்கள் எல்லாவகையிலும் பயன்படுகின்றன. எவ்வகைப் பொருள்கள்? பயனை யார் தீர்மானிப்பது? என்றெல்லாம் மார்க்ஸ் சிந்திக்கவில்லை. மேற்குலகில் சில நூற்றாண்டுகளாக வளர்ந்துவந்த அறிவின் ஆதிக்கம் மார்க்சுக்குள் செறிவு பெற்றிருந்தது. மேற்குலகில் முதலாளிய ஆதிக்கத்திலிருந்து உலகம் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும் என்று மார்க்ஸ் பேரார்வம் கொண்டிருந்தார். முதலாளியத்தின் உள்முரண்கள் பற்றி ஆழமாகவும் விரிவாகவும் கண்டறிந்தார். புதிய மெய்யியலை அவர் வகுத்தார். இந்த மெய்யியலின் உள்ளும் முதலாளிய ஆதிக்கம் மறைந்திருக்கத்தான் செய்தது. தன்கால வரலாற்றுக் கட்டத்தை எந்த மனிதனும் தாண்டிக் குதிக்க முடியாது என்பதற்கு மார்க்சே சான்றாகத் திகழ்கிறார்.

இயந்திரங்களின் அடிப்படையில் பெருவாரியான தொழில் பெருக்கம் முதல் தலைமுறையில் இயற்கைக்கெதிரான வெற்றி போன்று தோன்றினாலும், அதன் இரண்டாவது தலை முறையில் மனிதனை அது திருப்பித்தாக்குமென ஏங்கல்ஸ் தீர்க்க தரிசனம் போலக் கண்டுரைத்தார். பெருந்தொழிலும் சோசலிசமும் ஒத்துப் போகாதென்றும் கூறினார். பெருந்தொழில் என்பதனோடு இராணுவப் பெருக்கம் கனரகத் தொழில் அரசு அதிகாரப் பெருக்கம், நகரப் பெருக்கம், நுகர்வுப் பெருக்கம் முதலியவற்றையும் நாம் சேர்த்து இங்கு காணமுடியும். இவையும் சோசலிசமும் ஒத்துப்போக முடியாதென்றும் வரையறை செய்யமுடியும். இந்த அடிப்படையில் சோவியத் யூனியனில் கட்டப்பட்டது சோசலிசமே அல்ல என்று உறுதியாகச் சொல்லமுடியும். ஆனால் அன்றைய நிலையில் ஏங்கல்சின் இந்தக் கருத்துரை புறக்கணிக்கப்பட்டது என்று திரும்பவும் இங்கு சொல்லலாம். வரலாற்றுக் கட்டத்தைத் தாண்டிக் குதிக்கமுடியாது. அப்படியானால் முதலாளியத்திலிருந்து விடுபடவே முடியாதா? சோசலிசம் அறவே சாத்தியமில்லையா? என்ற கேள்விக்கு நாம் என்ன பதில் சொல்லமுடியும்? முதலாளியத்திலிருந்து சோசலிசம் தன்னைத் துண்டித்துக் கொள்ள வேண்டுமானால் முதலாளிய நெறியிலிருந்து முற்றாக மாறுபட்ட நெறியைக் கண்டு கொள்ள வேண்டும். இதற்கான கூறுகள் மார்க்சியத்தில் உண்டா என்று நாம் தேடவேண்டும். முதலாளியத்தின் தொழில்முறை, இராணுவம், நிர்வாகம், கல்வி, மருத்துவம், நகரியம், வேளாண்மை, போக்குவரத்து, பொழுதுபோக்கு, இறுதியாக வாழ்க்கை என்று அனைத்து முதலாளிய நெறிகளிலிருந்தும் வெட்டிக் கொண்டால் ஒழிய சோசலிசம் சாத்தியமில்லை. மாவோவின் நெறி இதைத்தான் நமக்கு உணர்த்துகிறது

6. மாவோ கனரகத் தொழில்களை ஆதரிக்கவில்லை. சிறுதொழில்

களைத் தான் வளர்க்கவேண்டுமென்று மாவோ விரும்பினார். நடுத்தரத் தொழில் மற்றும் சிறுதொழில் வளர்ச்சியின் மூலமே மூலதனத் திரட்டல் சாத்தியம். அதன் பிறகே கனரகத் தொழிலுக்குச் செல்லமுடியுமென்று கருதினார். மக்கள் படையென்பது மக்களுக்குச் சுமையாக அமையக்கூடாது என்றார். எல்லைப் பகுதிகளில் உள்ள இராணுவம் தனக்குத் தேவையான தானியங்களைப் பயிரிட்டுக் கொள்ள வேண்டுமென்றார். உள்நாட்டில் தொழிற்சாலைகளிலும், கல்வி நிலையங்களிலும் மக்கள் படையினர் ஊழியம் செய்யவேண்டு மென்றார். ஏனான் பகுதியில் ஒரு மக்கள்அரசை அவர் முன்பே நிறுவியிருந்தார். இராணுவம் மக்களிடமிருந்து ஒருசிறு துரும்பைக் கூட எடுக்கக் கூடாது என்றார்.

அணு ஆயுதத்தைக் காகிதப் புலி என்றார். தோட்டாக்களையும் தானியங்களையும் வைத்தே எவ்வளவு பெரிய எதிரிகளையும் வீழ்த்த முடியுமென்றார். மக்கட்போர் என்ற கொள்கையை வகுத்தார். மக்கள் மத்தியிலுள்ள முரண்பாட்டை விரிவாக ஆராய்ந்தார். முரண்பாடுகள் மூன்றல்ல ஒன்றெனக் கண்டார். எதிர்நிலைகளுக்கி டையிலான முரண்பாடுதான் ஆதார முரண்பாடு. முரண்பாடுகளின் இயக்கத்தின் போது பண்பு மாற்றத்தைக் காணமுடியும். முரண்பாட்டில் அடிப்படை முரண்பாடு, பிரதான முரண்பாடு என்றெல்லாம் வகுத்தார். பகை முரண்பாடு, நட்பு முரண்பாடு என முரண்பாட்டை வரையறை செய்தார். எதிரியோடு மக்கள் கொள்வது பகை முரண்பாடு, இதை ஆயுதத்தால் மட்டுமே தீர்க்கமுடியும். மக்கள் மத்தியில் உள்ள முரண்பாடு நட்பு முரண்பாடு. இங்கு ஆயுதம் அறவே பயன்படாது. ஆயுதத்தைப் பயன்படுத்தவே கூடாது. எதிரிகள் என்றும் மக்கள் என்றும் மாவோ வரையறை செய்யும் பொழுது மக்களென்பது அரசியல் சொல். மக்கள் என்ற தொகுப்பினுள் தொழிலாளிகள், உழவர்கள், சிறுபான்மையினர் முதலிய அனைவரும் அடங்குவர். மக்கள் மற்றும் எதிரிகள் என்ற சொல் வரலாற்றுக் கட்டங்களுக்கு ஏற்றவாறு தன் உள்ளடக்கத்தில் மாறுதலைப் பெறும். மக்களுக்கும் எதிரிகளுக்கும் இடையிலானது வர்க்கப் போராட்டம். தொழிலாளிகள் தான் அல்லது உழவர்கள்தான் இங்கு வர்க்கம் என்ற பொருள் சுருக்கம் இல்லையென்பதைக் கவனிக்க வேண்டும்.

கட்சிக்குள்ளும் இருவழிப்பாதை என்றார். 1. முதலாளியப்பாதை 2. சோசலிசப்பாதை இராணுவத்தில் அதிகாரப் பிரிவினைகள் இருந்தால் ஒழிய இராணுவம் செயல்படாது என்பது முதலாளியப் பாதை. தொழில்துறையில் நிர்வாகியின் அதிகாரம் இருந்தால் ஒழிய தொழில் நடைபெறாதென்பது முதலாளியப் பாதை. மூளை உடலை ஆதிக்கம் செய்யவேண்டும் என்பது அதிகார வர்க்கப் பாதை

மேதைகள் தான் வரலாற்றை வழிநடத்துகின்றனர் என்பது முதலாளியப் பாதை. மக்கள்தான் வரலாற்றைச் செயல்படுத்துகின்றனர் என்பது பொதுமக்களின் பாதை.

கலாச்சாரப் புரட்சி ஒருமுறை நடைபெற்றால் போதாது. ஆயிரம் முறை நடைபெற வேண்டும். நூறு பூக்கள் மலரவேண்டும். முதலாளியியமா? சோசலிசமா? எது வரலாற்றில் நிலைபெறுமென்பது இன்னும் தீர்மானமாகவில்லை. கம்யூனிஸ்ட்கள் தான் சோசலிசத்திற்கான நடைமுறை. மூளை உழைப்பாளிகள் உடல் உழைப்பிலும் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். மக்களுக்கும் ஆயுதம் தாங்க உரிமை உண்டு. தலைமைப் பீடத்தில் அதிகாரம் குவிந்தால் தலைமைப் பீடத்தை மக்கள் தகர்ப்பது கடமை. இயங்கியலை ஒவ்வொருவரும் கற்றுப் பயன்படுத்தமுடியும். மரபின் ஆக்கக் கூறுகளை நாம் செரித்துக் கொள்ளவேண்டும் சீனாவின் பல்லாயிரமாண்டு மரபிலிருந்து நம்மை வெட்டிக் கொள்ளமுடியாது. கலகம் செய்வது நியாயம். இவ்வாறெல்லாம் மாவோ மார்க்சியத்திற்குப் புதிய தெளிவுரைகளை வகுத்தார்.

மாவோவை மார்க்சியரென்று சோவியத் கம்யூனிஸ்டு கட்சி ஒப்புக் கொள்ளவில்லை. இவருக்கு இயங்கியல் தெரியாதென்று கூறினார்கள். இவர் கூறுவது வர்க்கப் போராட்டமல்ல என்றார்கள். இவர் கட்ட விரும்புவது முதலாளியியம் என்றார்கள். ஏகாதிபத்தியம் பற்றி மாவோவுக்குத் தெரியாது என்றார்கள். ஸ்டாலின் காலத்தில் அவருடைய அறிவுரைகளை மறுத்துப் பேசாமலேயே தன் வழியில் சென்று சீனப்புரட்சியைச் சாதித்தார். பின்னர் ஸ்டாலினும் மகிழ்ச்சி தெரிவித்தார். குருசேவின் பாதை முதலாளியப் பாதை என்று தெளிவாக எடுத்துரைத்தார். மாவோவுக்கு மையக்குழுவிலேயே எப்போதும் பெரும்பான்மையிருந்ததில்லை. அவரை ஒப்புக்கொள்வதைப் போல நடித்தவர்கள் தான் அதிகம். லியோசோசி பற்றி அவர் முன்வைத்த விமர்சனங்கள் குருசேவையும் இலக்காகக் கொண்டிருந்தன. கலை இலக்கியங்களின் மீது மாவோ பேரார்வம் கொண்டிருந்தார். அவரே ஒரு கவிஞராக இருந்தார். சீனாவின் தொன்மையான இலக்கியங்களை அவர் ஆழமாகக் கற்றிருந்தார். அவரது மொழி நடை மிகமிக எளிமையானது. அவர் மக்கள் மீது கொண்டிருந்த நேசம் அளவற்றது. மக்கள் என்னும் ஆற்றில் அவர் நீந்தினார் என்றுதான் சொல்லவேண்டும். இத்தகைய மாவோவிடமிருந்துதான் மார்க்சியம் பற்றிய புதிய வெளிச்சங்களை நாம் பெறுகிறோம்.

இயற்கையிலிருந்தும் சமூகத்திலிருந்தும் இறுதியாகத் தன்னிடமிருந்தும் அந்நியப்படும் மனிதன் பற்றி மார்க்ஸ் தன்

இளமைக்காலம் முதல் இறுதிவரை அக்கறை கொண்டிருந்தார். இந்த அந்நியமாதலிருந்து மனிதன் விடுதலை பெற்று இயற்கையோடும் சமுதாயத்தோடும் இறுதியில் தன்னோடும் முழுநிறைவில் வாழ்வதை மார்க்ஸ் கனவு கண்டார். கம்யூனிச சமுதாயத்தில்தான் அந்நியமாத லிலிருந்து மனிதன் முழு விடுதலை பெற்ற சுதந்திர மனிதனாக இருப்பான். இதுதான் மார்க்சிய மெய்யியலின் அடிப்படையென்று நாம் கருதமுடியும். முதலாளியச் சமூகம் எவ்வாறு தொழிலாளியைச் சுரண்டுவதன் மூலம் உபரிமதிப்பை உற்பத்தி செய்து அதன் ஆதிக்கத்தில் மனிதனைக் கூலிக்காரனாக, தனக்குள்ளே அந்நியப் பட்டவனாக, வறியவனாக, அழகற்றவனாக மாற்றியது பற்றி மார்க்ஸ் விரிவாக எழுதினார். மனித வாழ்வின் அர்த்தங்களை முதலாளியச் சமூகம் அழிப்பது பற்றி எழுதினார். வாழ்வின் அர்த்தங்களை மனிதன் மீட்டுக் கொள்ளவேண்டும் என்றார். வாழ்வின் அர்த்தம் பற்றிப் பேசுவதாகிய இருத்தலியல் என்ற கோட்பாடு மார்க்சியத்தின் மெய்யியல் என நாம் மதிப்பிட முடியும். "சார்த்தர்" இருத்தலியலை மார்க்சியருக்கு மீட்டுக் கொடுத்தலில் வியப்பதற்கு ஏதுமில்லை. மார்க்சின் அந்நியமாதலை "லூகாக்ஸ்" முதன்முறையாக வெளிப்படுத்தினார். முழு மனிதன் பற்றி அவர் பேசினார். அரசிருக்கும் வரை அந்நியமாதல் நிலவும் என்றார் மார்க்ஸ். சுரண்டலும், ஒடுக்குமுறையும், அதிகாரமும் எந்தப் பெயரில் செயல்பட்டாலும் அந்நியமாதலிலிருந்து, சுய அந்நியமாதலிலிருந்து மனிதன் தப்ப முடியாது என்பது மார்க்சின் கருத்து.

பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம் என்பது ஒருவகை அரசு. இத்தகைய அரசுமுறை சோவியத் யூனியனில் உருவாகவில்லை. பாட்டாளி வர்க்கம் அரசில் இருக்கவேண்டும். பாட்டாளி வர்க்கத்துக்குப் பதிலாக, அதன் பெயரில் நிறுவப்படும் அரசு பாட்டாளி வர்க்க அரசு என்றும் சொல்வதற்கில்லை. சோவியத் யூனியனில் சோசலிசம் நடைமுறையில் இருக்கிறது என்று ஸ்டாலினும் குருசேவும் பிரகடனம் செய்தனர். சோசலிசத்தில் அரசும் வர்க்கங்களும் இருக்கத்தான் செய்யும். அரசும் வர்க்கங்களும் இருக்கும் வரை அன்னியமாதல் ஒழியாது. ஆனால் அவர்கள் பிரகடனம் செய்த சோசலிச சமுதாயத்திலேயே அந்நியமாதலுக்கு இடமில்லை என்றார்கள். அந்நியமாதல் முதலாளியக் கோட்பாடு என்றும் பலர் எழுதினார்கள். உண்மையில் சோவியத் யூனியனில் சோசலிசம் இல்லையென்பதை அவர்கள் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை என்பதைத் தான் இந்தப் போக்கு மெய்ப்பிக்கிறது.

வாழ்வின் அர்த்தம் என்று பேசுவது மதத்தின் மரபு என்பது இன்னொரு வகையான புரிதல். மதத்திற்கெதிரானது மார்க்சியம்.

மதம் மக்களுக்கு அபின். இப்படி சில வரையறைகளை முன்வைக்கும் மார்க்சியம் எவ்வாறு மதத்தை உள்வாங்கிக் கொள்ளமுடியும் "பயர்பாக்" அன்பைப் பற்றிப் பேசினார். மனித உறவுகளுக்கு இடையில் அன்பிற்கு அழுத்தம் தருவது கிறித்துவ மரபு என்ற முறையில் பயர்பாக்-கை மார்க்ஸ் திறனாய்வு செய்தார். அவரைக் கிராமத்து மனிதன் என்றார். அறம் பற்றி மார்க்ஸ் வெளிப்படையாகப் பேசவில்லை. முதலாளியம், தொடர்ந்து நெருக்கடிகளுக்குள்ளாகி இறுதியில் தனக்கான சவக்குழியைத்தானே தோண்டிக் கொள்ளும் என்று மார்க்ஸ் விளக்கினார். முதலாளியச் சமூகத்தை அழிப்பதற்கான போராட்டத்தில் பாட்டாளி வர்க்கம் முன்நிற்கவேண்டுமென்றார். இழப்பதற்கு எதுவும் இல்லாதது இந்த வர்க்கம். இவர்கள் பெறுவதற்கு ஒருபொன்னுலகம் காத்திருக்கிறது என்றார் மார்க்ஸ். உயிரைக் கொடுத்துப் போராடினால் அல்லாமல் இந்தப் பொன்னுலகத்தைப் பெற முடியாது. மனித உழைப்பிற்கு நெருப்பை அன்பளிப்பாகத் தந்து கடுமையான தண்டனையை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்ட பிராமித்தியஸ், மார்க்சின் இலட்சியம். முதலாளியம் வீழ்ந்துவிடும் என்பதைப் பொருளியல் அடிப்படையில் மார்க்ஸ் விளக்கினார் என்பது உண்மைதான். முதலாளியச் சமூகம் அநீதியான சமூகம். ஆகவே அது அழிவது தான் நீதி என்று குறிப்பிடுவதை மார்க்ஸ் ஒப்புக்கொள்ளவில்லை. அறம் என்ற முறையில் பிரச்சனைகளைப் பார்ப்பது மதம் என்று மார்க்ஸ் புரிந்து கொண்டிருந்தார். ஆனால் அதே சமயம் எல்லா வகையான இழப்புக்களையும் ஏற்றுக் கொண்டவராய்ப் பலனை எதிர்பாராமல் பாட்டாளி வர்க்கத்தின் விடுதலைக்காணக் கடமையில் தன்னை முழுமையாக அவர் ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். இந்நிலையில் அறத்தின் திரு உருவமாக மார்க்ஸ் திகழ்ந்தார். "கான்ட்" கூறிய கேட்டகாரிகல் இம்பரெட்டிவ் என்பதற்குச் சிறந்த சான்றாக மார்க்சின் வாழ்க்கை அமைகிறது. எனினும் "கான்ட்-ஐ மார்க்ஸ் பாராட்டவில்லை. அறம் பற்றிப் பேசுவது மதம் ஆகாது.

மதம் பற்றிய மார்க்சின் புரிதல் சிறப்பானது என்பதில் ஐயமில்லை. ஒடுக்கப்பட்டவர்களின் ஏக்கப்பெருமூச்சு மதம் அத்துடன் ஒடுக்கப்பட்ட "சூழலுக்கு எதிரான கலகம்" மதம் "இதயமற்ற உலகில் இதயம்" மதம் "ஆன்மா அற்ற உலகில் ஆன்மா" மதம். இப்படிச் சொன்னவர் மார்க்ஸ். மதம் என்ற போர்வையில் நடைபெறுவது வர்க்கப் போராட்டம் தான் என்று விளக்கினார் ஏங்கல்ஸ். மதம் என்பது மாயையான ஓர் அலகு. கைகளைப் பிணைத்திருக்கும் சங்கிலிகளை மறைக்கும் மலர்க் கொத்து. மலர்களை நீக்கிப் பார்த்தால் மனிதனின் கைகளைப் பிணைத்திருக்கும் பொருளியல் சங்கிலிகள் தென்படும். மதம் பற்றிய விமர்சனத்தை இப்படித்தான்

செய்யவேண்டும் என்றார் மார்க்ஸ். பொருளியல் தளைகளுக்குள் அகப்பட்டிருக்கும் மனிதனுக்கு மதம், இதயமற்ற உலகின் இதயம். இவ்வாறெல்லாம் மார்க்சியம் மதத்தைக் காண்கிறது.

இயங்கியல்தான் மார்க்சியத்தின் மெய்யியல் என்று குறிப்பிடுவது பொருந்தாது. இயங்கியல் என்பதை மார்க்சியத்தின் ஆய்வு முறையாகக் கொள்வதில் தவறு இல்லை. இயங்கியல் என்பதை அறிவியல் கோட்பாடு என விளக்குவதும் சாத்தியமில்லை. இயங்கியலை ஆய்வு முறையாக எந்த அறிவியல் அறிஞனும் இதுவரை மேற்கொள்ளவும் இல்லை. இயங்கியல் அறிவை மனிதன் தன் சமூக அறிவில் இருந்து தான் பெற்றிருக்கமுடியும். இந்த அறிவை அறிவியலுக்கும் பொருத்திக் காணும் முயற்சிகளில் தவறு இல்லை. இயங்கியலை ஹெகலிடமிருந்து மார்க்ஸ் எடுத்துக் கொண்டார். ஏங்கல்சும், லெனினும் அதை மேலும் வளர்த்தனர். இயங்கியலின் வளர்ச்சியில் மாவோவின் பங்கு குறிப்பிடத்தக்கது. இயங்கியல் பற்றிய புரிதலில் அல்தூசரின் பங்கும் அலாதியானது. மூன்று விதிகளுக்குள் அல்லது சில மெய்யியல் கருத்தினங்களுக்குள் இயங்கியல் முடங்கிவிடமுடியாது. தர்க்கம் தோற்ற இடத்தில் இயங்கியல் செயல்படவல்லது.

இவ்வாறெல்லாம் மார்க்சியத்தின் மெய்யியலை வளர்த்து எடுக்கக்கூடிய சாத்தியங்கள் மார்க்சியத்திற்குள்ளிருந்தே நமக்குக் கிடைக்கின்றன. மெய்யியலை இரண்டு வகைகளாக - நேர்எதிர் வகைகளாகப் பிரித்தார் ஏங்கல்ஸ். 1. பொருள் முதல்வாதம், மற்றது கருத்துமுதல்வாதம். இத்தகைய ஆய்வின்போது "கான்ட்"-இன் மெய்யியலையும் கியூனின் மெய்யியலையும் எங்கே வைப்பது என்ற சிக்கல் ஏங்கல்சுக்கு எழுந்திருக்க வேண்டும். பொருள் முதல்வாதம் மற்றும் கருத்து முதல்வாதம் ஆகிய இரண்டிற்கும் இடையில் வைக்க வேண்டும் என்று ஏங்கல்சு எழுதினார். இதே போல் மொழி பற்றிய, சிக்கல் எழுந்தபொழுது, அடித்தளத்திற்கும் மேல் கட்டுமானத்திற்கும் இடையில் மொழியை வைக்கவேண்டும் என்று எழுதினார் ஸ்டாலின். இவற்றிலிருந்து தெரிவது என்ன? எல்லாவற்றையும் கூறுபோட்டு இரண்டிரண்டாக எதிர் எதிர் நிறுத்த முடியாது. இந்த இடத்தில்நாம் மிகுந்த கவனத்துடன் செயல்படவேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது.

முரண்பாடுகளை இரண்டு இனங்களாக எதிர்நிறுத்துவது கூட வரலாறு முதலியவற்றைப் புரிந்து கொள்வதற்கான ஓர் ஆய்வு முறைதான். இவ்வாறு புரிந்துகொள்ளும் பொழுதுதான் ஒரு கருதுகோளை உருவாக்க முடியும். அதனடிப்படையில் செயல்பட முடியும். கருதுகோள் என்பதுகூட, ஒருவகையான பார்வை,

தற்காலிகமான பார்வை, அல்லது கருவி. வரலாற்றை முன் நகர்த்துவதற்கான பார்வை அல்லது கருவி. வரலாற்றின் எல்லைக்குள் தான் மார்க்சியரும் செயல்படமுடியுமென்பதற்கு இதுமேலும் ஒருசான்று.

மார்க்சியத்தில் அரசியல் பெற்ற அழுத்தம் இதுவரை மார்க்சியத்தின் மெய்யியலுக்குக் கிட்டவில்லை. ஏங்கல்சு ஒருசமயம் எழுதினார். "இயற்கை அறிவியல்கள் முழுவளர்ச்சி பெற்ற நிலையில் மெய்யியல் தன் வாழ்வை இழந்துவிடும்" மார்க்சும் இப்படி எழுதினார் மெய்யியலாளர்கள் உலகத்திற்கு விளக்கம் சொன்னார்கள். இனி செய்யவேண்டியது உலகத்தை மாற்றுவதுதான். இவ்வாறு மெய்யியலை குறுக்கியதன் மூலம் மார்க்சியத்தில் மெய்யியல் அழுத்தம் பெறவில்லை என்று கூறலாம். உலகச் சூழல் மாறும்பொழுதெல்லாம் திரும்பத் திரும்ப உலகிற்கு, மனித வாழ்விற்கு அர்த்தம் சொல்ல வேண்டியிருக்கிறது. அர்த்தம் அழிவதைப் பற்றியும். அதை மீட்டுக் கொள்வது பற்றியும், புதிய அர்த்தங்கள் தேடுவது பற்றியும் மெய்யியல் பேச வேண்டியுள்ளது. வரலாறு முற்றுப்பெறும் என்றால் மெய்யியலுக்கும் முடிவு ஏற்பட்டு விடலாம். அதுவரை மெய்யியலுக்கான தேவை இருப்பதை மார்க்சியம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

அந்நியமாதல் பற்றி மார்க்ஸ் பேசும் பொழுது ஒன்றைக் குறிப்பிட்டார். பாட்டாளிவர்க்கம் தனக்கான விடுதலையைப் பெற வேண்டுமானால் உடைமை வர்க்கத்துக்கும் சேர்த்தே போராட வேண்டும் ஏங்கல்ஸ் இதே கருத்தை வேறு சொற்களில் கூறியிருக்கிறார். முதலாளி தனக்குள் அந்நியப்பட்டிருப்பதை அவன் புரிந்து கொள்ள வில்லை. ஆனால் தொழிலாளிதான் அந்நியப்பட்டிருப்பதைப் புரிந்து கொள்வதோடு மாற்றவும் பாடுபடவேண்டும் முதலாளிக்கும் சேர்த்தே அவன் போராடியாக வேண்டும். இந்தக் கருத்து நுட்பமான கருத்து எனினும் மார்க்சிய நெறியில் விளங்கிக் கொள்ளத்தக்கது தான். சமூகப் பொருளியல் கட்டமைப்பு என்பதனுள் தொழிலாளியைப் போல முதலாளியும் அகப்பட்டிருக்கிறான். சமூகப் பொருளியல் கட்டமைப்பு காரணமாக முதலாளி பெற்றிருக்கிற சிலவசதிகள் அவன் அந்நியப்பட்டிருப்பதை அவனால் புரிந்து கொள்ள இயலாமல் தடுக்கின்றன. ஆகவே அவனையும் விடுவிக்கத் தொழிலாளி போராடவேண்டும்.

சுதந்திரம் பிரிவுபடாதது என்ற மார்க்சின் கூற்றை இம்முறையில் நாம் ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும். தொழிலாளி அடிமைப் பட்டிருக்கும் நிலையில் முதலாளி சுதந்திரவானாக இருக்கமுடியாது. தொழிலாளியை அடிமைத்தனத்தில் ஆழ்த்துகிற பொழுதே முதலாளியும்

அடிமைத்தனத்தில் மாட்டிக்கொள்கிறான். தன்பணத்தையும் அதிகாரத்தையும் தொடர்ந்து தக்கவைத்துக் கொள்வதற்கான சிக்கலில் அவன் மாட்டிக்கொள்கிறான். இம்முறையில் முதலாளியும் தளைப்பட்டவன், சிறைப்பட்டவனாகிறான். ஒட்டுமொத்தமான சமூகபொருளியல் மாற்றத்தின் விளைவாகவே இருவரும் அடிமைத் தளைகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளமுடியும்.

மார்க்சின் அந்நியமாதல் என்ற கோட்பாடு இந்த அளவுக்கு விரிந்து செல்கிறது. மார்க்சியத்தின் மெய்யியல் ஆழமானது தான் என்பதையும் நாம் இதிலிருந்து புரிந்து கொள்கிறோம். எதிரியைக் கொன்று தீர்ப்பது மார்க்சியத்தின் முதன்மை நோக்கமாக இருக்க முடியாது. பகை முரண்களுக்கு இடம் இல்லாததாக உலகச் சூழலை மாற்றவேண்டும். பகை முரண்களுக்கு மட்டுமே அழுத்தம் தந்து மார்க்சியம் என்பதையே பகை முரண்களைத் தீர்ப்பதுதான் என்று புரிந்து கொள்ளும் நிலையில் மார்க்சியம், தன் மெய்யியலை இழக்கிறது. மார்க்சியம் வெறும் அரசியலாகக் குறுகிவிடுகிறது. ஸ்டாலினியம் இவ்வாறு தான் மார்க்சியத்தில் கடுமையான திரிபை ஏற்படுத்தியது. இயங்கியலில் எதிர்மறைகளை மறுத்தல் என்ற அம்சத்திற்கு ஸ்டாலின் தந்த அழுத்தத்தை இப்படித்தான் புரிந்து கொள்ள முடியும் இத்தகைய போக்கை மாவோ ஒப்புக் கொள்ளவில்லை என்பதையும் இங்கு சேர்த்தே பார்க்கவேண்டும். மார்க்சியன் கருணை நிறைந்தவன். மார்க்சியன் ஒரு சித்தன் என்று லெனின் கூறினார். லெனின் தன் வாழ்வில் ஒருசித்தனாக வாழ்ந்தார். மார்க்சியம் முதன்மையாக ஒரு மெய்யியல் விரிந்த அளவிலான மெய்யியல் உலகிலுள்ள அனைத்து மெய்யியல்களையும் அதனதன் கோணத்தில் இருந்து, அதனதன் தளத்திலிருந்து புரிந்து கொள்வதற்கான மெய்யியல் மார்க்சியத்தின் வரலாற்றுப் பொருள்முதல்வாதம், இப்படி அனைத்து மெய்யியல்களையும் புரிந்து கொள்வதற்கான மிகச் சரியான பார்வையை நமக்குத் தந்திருக்கிறது. மாற்று மெய்யியல் என்பது இல்லாமல் இன்னொரு வளமான மெய்யியலுக்கு இடமில்லை, வாழ்வும் வளர்ச்சியும் இல்லை. மார்க்சியமும் இப்படி மாற்று மெய்யியலின் சூழலில் தான் தன் வளத்தைப் பெற்றது.

7. மார்க்சியத்தின் தொடர்பான பொருளியல் பற்றிச் சில விவரங்களை இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்வோம். லெனின் ஏகாதிபத்தியம் பற்றி முன் வைத்த வரையறைகள் இங்கு போதாது எனச் சிலர் கூறுகின்றனர். அமீர் அமீன் முதலாளியம் பற்றியும் மையம் விளிம்புகள் பற்றியும் சில ஆய்வுகள் முன்வைக்கிறார். புதிய காலனியம் என்று மார்க்சியர் பேசுகின்றனர். இவ்வகைக் கருத்தாக்கங்களுக்கிடையில் வேறுபாடுகள் எவ்வளவு இருந்தபோதிலும்

உலக அளவிலான இன்றைய பொருளியல் போக்குகளை இவை விளக்குகின்றன. சந்தைப் பொருளாதாரம், உலகமயமாதல், உலக வர்த்தக நிறுவனம், பன்னாட்டு நிதி நிறுவனங்கள், பன்னாட்டுத் தொழில் மற்றும் வர்த்தக நிறுவனங்கள் என்பவை பற்றியும் இன்று நாம் பரவலாகப் பேசுகிறோம்.

தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகள் இன்று மூன்றாம் உலக நாடுகளின், மக்கள் வளம் உட்பட எல்லாவளங்களையும் அபகரிக்கும் நிலவரங்கள் பெருகிவருகின்றன. தகவல் சாதனங்கள் என்பவை பெருகி விட்டன. பொருளியல் உற்பத்தி என்பது இன்று கணினி முதலியவற்றின் உறவோடு நடைபெறுகின்றன. கூடுதலான தகவல்களைச் சேகரித்து, தன் அரசியல் முதலிய நலன்களுக்கேற்றவாறு அவற்றைப் பரிமாற்றம் செய்வதன் மூலம் இன்று எல்லாக் களங்களிலும் ஆதிக்கம் பெருகும் நிலை உருவாகி வருகின்றது. மக்களின் அறிவு முதலியவைகளைத் தகவல் தொடர்பு மூலம் ஆதிக்கச்சக்திகள் கட்டமைக்க முடியும். தொழிலாளர்களின் உழைப்புத்திறனைச் சுரண்டுவதன் மூலம் முன்பு நடைபெற்ற பண்டக உற்பத்தி முறை இன்று மாறிவருகிறது. தொழிற்சங்கங்களுக்கு இன்று சக்தி இல்லை. மூலதனத்திற்குத் தான் இயற்கை சொந்தம், உலகம் சொந்தம். இப்படியெல்லாம் நிலவரங்கள் நேர்ந்த நிலையில் மார்க்சியத்தின் பொருளியல் வரையறைகள் இந்தச் சூழலை விளக்கத் திறன் இல்லாமல் பயன்அற்றுப் போகின்றன. இப்படி மார்க்சியத்தின் மீது கடுமையான விமர்சனங்கள் இன்று முன்வைக்கப்படுகின்றன. இத்தகைய விமர்சனத்தை நாம் எவ்வாறு சந்திக்கப்போகிறோம்.

உலக முதலாளியம் தன்னை மேலும் வலுப்படுத்திக் கொள்ளும் முறையில் மூன்றாம் உலகநாடுகள் அனைத்தையும் தன் வசப்படுத்தும் நிலைக்குச் சென்று கொண்டிருக்கிறது என்பது உண்மைதான். நவீன அறிவியல் மற்றும் தொழில் நுட்பங்களை மிகப்பிரமாண்டமான முறையில் பெருக்கி வருகிறது என்பதும் உண்மைதான். நாளடைவில் எத்தனையோ விந்தைகளை நவீன அறிவியல் தோற்றுவிக்க முடியும். உடைபடாத கண்ணாடிகளை உருவாக்கியதைப் போல, மனித உடம்பில் பழுதுபட்ட உறுப்புகளுக்கு மாறாகப் புதிய உறுப்புக்களைத் தயாரிப்பதும் சாத்தியப்படலாம். இரசாயனப் பொருட்களைக் கொண்டு செயற்கை முறையில் பெட்ரோலியம் உற்பத்தி செய்யலாம். இன்னும் ஆயிரம் வகைவிந்தைகளைச் செய்யலாம். இவற்றையெல்லாம் செய்வதன் மூலம் சுற்றுச் சூழலை நாசப்படுத்தாமல் இருக்கமுடியுமென்றேகூட வைத்துக் கொள்ளலாம்.

இவ்வாறெல்லாம் மனிதவாழ்வுக்குத் தேவையான அனைத்துப்

பொருட்களையும் உற்பத்தி செய்து அனைத்து மனிதர்களுக்கும் உலக அளவிலான முதலாளிகள் தாராளமாகத் தரப்போகின்றனரா? இலாப நோக்கம் அற்றவராய் மாறப்போகின்றார்களா? இயற்கையே தேவையில்லாத ஓர் உலகத்தை இவர்கள் படைக்கப்போகிறார்களா? உலகத்தை, உலகமக்களை இவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?. மக்கள் தொகைப் பெருக்கம் என்று இவர்கள் பேசாமலா இருக்கப் போகிறார்கள்? இவர்களின் இறுதிநோக்கம்தான் என்னவாக இருக்கமுடியும்? பணம், அதிகாரம், ஆதிக்கம் என்றநோக்கங்களை யெல்லாம் இவர்கள் விட்டுவிடப்போகின்றார்களா?

இவர்கள் வழியே எவ்வளவு தொலை தூரத்திற்கு நம் பார்வையைச் செலுத்தினாலும் இப்படியெல்லாம் இவர்கள் மாறிவிடப் போகின்றார்கள் என்று கருத முடியவில்லை. அத்தனை பொருட் பெருக்கத்தை இவர்கள் ஏன்தான் செய்கிறார்கள். ஆயுத உற்பத்தி என்பதை மக்கள் நலம் என்ற நோக்கத்தோடுதான் இவர்கள் செய்து கொண்டிருக்கிறார்களா? இவர்களை நம்பமுடியவில்லை. நம்ப முடியாது. இவர்களிடம் உலகத்தை விட்டுவைக்க முடியாது.

உலக அளவிலான முதலாளிகளின் ஆதிக்கத்திலிருந்து, உலகத்தை, மக்கள் வாழ்வை, விடுவிக்க வேண்டுமானால், தவிர்க்க இயலாதபடி மீண்டும் மார்க்சியத்திற்குத் தான் வந்து சேர்கிறோம். பணம், அதிகாரம், என்பவை மனிதவாழ்வின் மையமாக இருக்கமுடியாது. பொருள் பெருக்கத்தின் தேவை மனித வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றவேண்டும். இயற்கையோடு நம் உறவுகள் சிறக்க வேண்டும். பொருள் உற்பத்திப் பெருக்கம் மனிதவாழ்வைத் தீர்மானிக்க முடியாது. உற்பத்தியைக் காட்டிலும் பகிர்வுக்கு அழுத்தம் தந்தால் மட்டுமே உலகில் சமத்துவம் நிலைபெறும். இயந்திரங்கள் என்னதான் பெருகினாலும், மனிதனின் தேடல் நாட்டம், புத்தாக்கங்கள், அழகுணர்ச்சி முதலியவை அற்றுப்போகமுடியாது. இயந்திரங்கள் மனித உழைப்புக்கு மாற்றாக முடியாது. கணினிகள் மனிதனின் பல்வகைத் திறன்களை அபகரித்துக் கொள்வது சாத்தியமில்லை. ஆயுதங்களோ கருவிகளோ மனித வாழ்வைத் தீர்மானிக்க முடியாது. அறம், அன்பு, அழகு, வாய்ப்பு முதலிய மனித உணர்வுகளைப் பதிவு செய்யும் முறையில் வேறு உணர்வுகளை நம்முள் திணித்துக் கொள்ள முடியாது. கம்யூனிசம் என்று நாம் கனவு காணும் உலகம் நடைப்பிணங்களின் தொலை தூரத்துக்குச் சென்றாலும் மார்க்ஸ் தந்த தூண்டுதலின் விளைவுதான் இது என்று எண்ணாமல் இருக்க முடியாது.

சந்தைப் பொருளாதாரத்தால் உருமாற்றம் பெறும் குரூரமான

உலகச் சூழலை மார்க்சியர் என்று தம்மைக் கருதிக் கொள்பவர்களில் பலர் நமக்கு வேறு வழியில்லை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்று எவ்வாறு கருதத் தொடங்கினர் என்ற முறையில் நம் சிந்தனையைத் தொடர்வோம். நவீன அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் இவர்கள் ஏற்றுக் கொண்டனர். மார்க்சியம் என்பது அறிவியல் கண்ணோட்டம் என்ற உணர்வில் அழுந்ததன் விளைவு இது என்று நாம் சொல்லலாம். மார்க்சியத்திற்குள்ளிருந்து கருத்தியல் அம்சங்களை முழுவதும் வெளியேற்றி, மார்க்சியத்தை ஓர் அறிவியல் கோட்பாடாக மாற்றிவிட முடியுமென்பது இவர்களின் நம்பிக்கை. அறம் முதலிய உணர்வுகள் மதத்தின் சார்பில் நமக்குள் உருவானவை. இவற்றை நமக்குள்ளிருந்து வெளியேற்றி விடவேண்டும். மனிதநேயம் நமக்குத் தேவையில்லை. குடும்பமோ வேறுவகை அமைப்புக்களோ நமக்கு வேண்டாம். பிற உயிர்களைப் பற்றி மனிதன் கவலைப்பட வேண்டியதில்லை. இயற்கை அழியுமே என்றும் நமக்குக் கவலை வேண்டாம். இவ்வாறெல்லாம் மார்க்சியர் சிந்திப்பதாக நாம் சொல்ல முடியும்.

இது சாத்தியம் என்று நமக்குத் தோன்றவில்லை. கருத்தியல் அம்சம் இல்லாமல் முற்றான அறிவியலை உருவாக்க முடியாது. மனித ஊடுருவலோடுதான் உலகம் மனிதனின் மறுபடைப்பு ஆகியுள்ளது. லூசபர் முதற்கொண்டு சிந்தனை மற்றும் கலை வடிவிலான அனைத்து அருவங்களின் மூலமும் மனிதன் தனக்கான உலகத்தைப் படைத்திருக்கிறான். அகமும் புறமும் ஒன்றினுள் மற்றது ஊடுருவக் கூடியதான உலகத்தில் தான் மனிதன் வாழ்கிறான். இவன் படைக்கிற யதார்த்தம் அனைத்தும் மனித ஊடுருவலோடு படைக்கப்படுகின்ற யதார்த்தம் தான் மனிதன் உறவுகளின் தொகுதி இயந்திரங்களைப் பற்றி மார்க்ஸ் கூறியதை இங்கு நினைவு கொள்ளலாம் இயந்திரம் என்பது சமூக உறவுகளின் ஒருவகைத் தொகுப்பு. எல்லா யதார்த்தங்களும் மனிதனால் புனையப்பட்டவைதான். கட்டமைக்கப் பட்டவைதான். பாலியல் முதலிய உணர்வுகளிலிருந்து மனிதன் வெட்டிக் கொள்ளும் பொழுது படைப்புத்திறன் அற்றவனாகிறான்.

மனிதன் என்பதும் ஒருவகைப் புனைவு கட்டமைப்பு. ஆதிக்கச்சக்திகள் மனிதனைக் கட்டமைக்கின்றன என்பதும் உண்மை தான். ஆதிக்கச்சக்திகளுக்கு எதிராக தனக்கான வரலாற்றை மனிதன் கட்டமைத்துக் கொள்ள முடியும் என்பதும் உண்மை தான். மனிதனை மார்க்சியம் மையப்படுத்துகிறது மனிதனை மையப்படுத்துவதன் விளைவாக இயற்கையை, பிற உயிர்களைத் தமக்கு அடிமைப்படுத்துவது என்பது மார்க்சியத்தின் சமத்துவ நெறிக்கு ஒத்ததாக இருக்கமுடியாது.

மார்க்சியம் கூறும் முரண்பாடு என்ற தொகுப்பினுள் ஒரு தொகுதிக்கு ஏற்றமும் இன்னொரு தொகுதிக்கு இறக்கமும் தருவது கூட இயங்கியலாக இருக்கமுடியாது. ஆதிக்க சக்திகள் இவ்வாறு ஏற்றத்தாழ்வை உருவாக்குவதன் மூலம் தம்மை நிலைநிறுத்திக் கொள்கின்றன. பொருளியலுக்கு அழுத்தம் தருவதன் மூலம் பண்பாட்டிற்கான அழுத்தத்தைக் குறைத்துக் கொள்ளமுடியாது. மனித வாழ்வின் பன்முகப் பரிமாணங்களில் எந்த ஒரு பரிமாணத்தையும் ஒதுக்கிவிடுவதோ, அழித்துவிடுவதோ முடியாது. ஏற்றத்தாழ்வான உலகம் மனிதனுக்குள்ளும் இவ்வகைத் திரிபுகளை ஏற்படுத்தியிருக்கிறது என்பதும் உண்மைதான். இவற்றையெல்லாம் மாற்றுவதற்குத் தான் மார்க்சியம் நமக்குத் தேவைப்படுகிறது.

அதிகாரத்திற்குத் தேவையற்றதான உலகத்தைப் படைக்க அதிகாரம் இல்லாமலும் முடியாது. வாழ்க்கை என்பது இந்த முரண் இயக்கத்தோடு தான் நடைபெறுகிறது. இந்த முரண் இயக்கம் இல்லாமல் வாழ்வும் சாத்தியமில்லை. ஆணும் பெண்ணும் சமத்துவமாக வாழ்வது என்பது கொண்டு ஆண் அல்லது பெண் தன்னை இல்லாமல் செய்து கொள்ளவேண்டுமென்பது உண்மையாகாது. இயக்கம் நடைபெற மிகக் குறைந்த அளவுக்கேனும் ஏற்றத்தாழ்வு இருக்கத்தான் செய்யும். சமத்துவம் என்பது முழுமுற்றான சமத்துவம் இல்லை. சமுதாய வரலாற்றின் மூலம் தான் இந்த அறிவுத்திறன் என்பதைப் புரிந்து கொண்டு அறிவைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளும் நோக்கில்தான் சமத்துவம் பற்றி நாம் பேசுகிறோம். மார்க்சியத்தின் வழியேதான் இத்தகைய புரிதல்களும் நமக்குச் சாத்தியம். மார்க்சியத்திலிருந்து விலகிய நிலையில் மனிதனைப் பற்றியோ வரலாறு பற்றியோ நம்மால் சிந்திக்க முடியாது.

8. மேற்கத்திய சூழலில் மார்க்சியம் பெற்றிருந்த சில பிரிவுகளைக் களைந்து கொள்வதற்கான பார்வை மாவோவின் மூலம் வெளிப்பட்டது என்பதை நாம் பார்த்தோம். மாவோ கிழக்கு உலகத்தைச் சார்ந்தவர். நெடுங்கால கிழக்குலகப் பண்பாட்டில் ஊறியவர். மேற்கத்திய உலகின் வரலாற்றில் நிகழ்ந்த தொழிற்புரட்சி மற்றும் முதலாளியம், கிழக்குலகில் வெளிப்படவில்லை. கிழக்குலகின் விரிந்த நிலப்பரப்பு, வளமான இயற்கை, வேளாண்மை வளர்ச்சி ஆகியவை, மேற்குலகிலிருந்து வேறுபட்டவையாக இருந்தன. இதன் காரணமாக வரலாற்றுப் போக்கிலும் வேறுபாடு நிலவியது. மேற்குலகம் மார்க்சியத்தில் பகை முரண்பாட்டை முன்னிலைப்படுத்தியது. மார்க்சியத்தில் உற்பத்திக் கருவிகளோடு கூடிய அடித்தளத்திற்கு அழுத்தம் தந்து. இதற்கு மாறாக உற்பத்தி உறவுகளுக்கு அழுத்தம் தருவதாகிய கிழக்குலகப் பண்பாடு மாவோவின் மூலம் வெளிப்பட்டது.

நட்பு முரண்பாட்டின் முக்கியத்துவம் குறித்து மாவோ பேசியதையும் இதன்வழியேதான் புரிந்து கொள்ள முடியும்.

ஆதிப் பொதுமைச் சமூகம் தொடங்கிச் சோசலிசம்/கம்யூனிசம் வரையிலான சமூக வளர்ச்சிக் கட்டங்கள் குறித்து மார்க்சியம் விரிவாகப் பேசுகிறது. அடிமைச் சமூகமும், நில உடைமை ஆதிக்கச் சமூகமும் மேற்கத்திய சமூக வளர்ச்சியில் இயல்பாக நேர்ந்தன. கிழக்குலகில் இவை இதே வடிவில் நிகழவில்லை. கிழக்குலகம் பற்றிப் பேசும் பொழுது ஆசிய உற்பத்திமுறை என்று தனியே பிரித்து மார்க்ஸ் பேசினார். ஆசிய உற்பத்தி முறைபற்றிய ஆய்வுகள் மார்க்சுக்குப் பிறகு கைவிடப்பட்டன. மேற்கத்திய அறிவு முறை தான் ஒரே வகை அறிவு முறை என்ற கருத்தின் ஆதிக்கத்தைத்தான் இங்கும் நாம் பார்க்க முடியும். தொழில் புரட்சி முதலாளியம், அறிவியல் தொழில் நுட்பம், கனரகத் தொழில் ஆகியவற்றை உள்ளடக்கிய அடித்தளத்திற்கு அழுத்தம் தருவதாகிய போக்கின் விளைவு இது என்றும் நாம் பார்க்க முடியும்.

கிழக்குலகச் சமுதாயத்தில் பெரும் இயற்கைச் சூழலில் வேளாண்மை சிறப்பிடம் பெற்றது. வேளாண்மையைப் பொறுத்தவரை மனிதர் உழைப்பைக் காட்டிலும் இயற்கையின் பங்குக்குக் கூடுதல் முக்கியத்துவம் உண்டு. மார்க்ஸ் விளக்கியபடி கிழக்குலகில் தனி உடமை ஆதிக்கம் பெறவில்லை. வேளாண்மையும், கைவினைகளும் இணைந்திருந்தன. விரிந்த நீர்ப்பாசனத் திட்டங்களைச் செயல்படுத்தும் முறையில் அரசு செயல்பட்டது. கிராமச் சமூகத்தின் நிர்வாகத்தில் அரசு தலையிடவில்லை. மார்க்ஸ் கூறியபடி அரசு என்பது கருணைமிக்க வல்லாண்மையாகச் செயல்பட்டது. முரண்பாடுகள் இருந்தன என்றாலும், இவை முற்றி வெடிக்கவில்லை. நெடுங்கால வரலாறு சில அழுத்தமான கலாச்சார மரபுகளைக் கொண்டிருந்தது. பகை முரண்பாடுகள் இங்கு வெடிக்கவில்லை. மதங்கள் இங்கு பலவாறு வளர்ந்தன. இந்தச் சூழலை நாம் இலட்சியப்படுத்த வேண்டியதில்லை என்ற போதிலும், இந்தச் சூழலின் முக்கியத்துவத்தை நாம் கவனிக்கத் தவறக்கூடாது. இயங்கியலுக்கு மாவோ தந்த முக்கியத்துவத்தையும் சீனாவின் தொன்மையான பண்பாட்டு மரபுகளையும் வேறுபடுத்தி நாம் பார்க்க இயலாது. வேளாண்மைச் சமூகத்தின் சிறப்பியல்பு இது என்று நாம் காண முடியும். கடுமையான உழைப்பு, எளிமையான வாழ்க்கை, இயற்கையோடு பொருந்திய வாழ்க்கை, பகிர்வுக்கு முதன்மை, உறவுகளுக்கு அழுத்தம், பணத்திற்கும் அதிகாரத்திற்கும் முதன்மை இல்லாத போக்கு, பெண் தெய்வம், சான்றோர்க்கு மரியாதை, அற உணர்வுக்கு முக்கியத்துவம் ஆகிய

போக்குகளை வேறு எப்படி நாம் புரிந்து கொள்ள முடியும்? மார்க்சியத்தில் மாவோவின் மூலம் அழுத்தம் பெற்ற புதிய பார்வையை இந்தப் போக்கிலிருந்து நாம் வேறுபடுத்திக் காண முடியாது.

இப்பொழுது இந்தியச் சூழலுக்குள் மார்க்சியம் பற்றிப் பார்ப்போம். மாவோவின் வழியே மார்க்சியம் பற்றிய புதிய பார்வையை நாம் பெறுகின்றோம் என்பதோடு, இந்தியாவில் நெடுங்காலமாக நிலவுகிற கிழக்குலகின் தனித்தன்மைகள் வழியாகவும் மார்க்சியம் பற்றிய பார்வையை நாம் பெறுகிறோம். இந்தியாவில் அடிமைச் சமூகம் ஏற்படவில்லை. (சாதிச் சமூகம் பற்றிப் பிறகு பார்ப்போம்) மேற்குலகில் ஏற்பட்டது போன்ற நிலமானியச்' சமூகம் இங்கு ஏற்படவில்லை. இந்தியாவுக்கு வந்த முதலாளியம் என்பது பிரிட்டனின் ஆதிக்கத்தோடு இந்தியாவில் நிலைபெற்றது. மேற்கத்திய சமூகத்தின் விடுதலைக்குக் காரணம் என்று அவர்கள் சொல்லிக் கொண்ட முதலாளியம், இந்தியாவிற்குள் பெரும்பகுதி விடுதலைச் சக்தியாகச் செயல்படவில்லை. இந்தியாவில் வெறுக்கத்தக்க ஒருவகை நிலவுடைமை முறையை இது கொண்டுவந்தது. சுதேச மன்னர்களோடு பிரிட்டன் உறவு கொண்டது. சமீன்தார்களைத் தோற்றுவித்தது. இந்தியா முழுவதும் பரவலாக எழுந்த கிளர்ச்சிகளை அங்கங்கே ஒடுக்கும் முறையில் ரயத்வாரி என்ற முறையில் போக்கிரிகளுக்கு நிலங்கள் தரப்பட்டன. இந்தியாவின் தொழில் வளர்ச்சியைப் பிரிட்டன் நாசமாக்கியது, கிராமச் சமூகத்தைத் தகர்த்தது. நாகரிகப் போக்கைப் பெருமளவு மேற்கத்தியச் சார்புடையதாக மாற்றியது. ஆங்கிலக் கல்வியைப் புகுத்தியதன் மூலம் அரசுக்குச் சேவை செய்யும் கூலிகளை உற்பத்தி செய்தது. இந்திய மரபிலிருந்து படிப்பாளிகளைப் பிரித்தது. இந்தியாவின் தொன்மைக்காலம் முழுவதும் இருண்ட காலம் எனக்கற்பித்தது. இந்தியர்கள் இயல்பாகவே அடிமைத் தனத்தில் மூழ்கிக் கிடப்பதைப் போலவும், ஆங்கில அரசு தான் இந்தியர்களை விடுதலைக்குத் தகுதி உடையவர்களாக மாற்றவேண்டும் என்பது போலவும் இந்தியர்களுக்குக் கற்பித்தது. இந்தியாவில் படிப்பாளிகள் என்பவர்கள் பிரிட்டிசு அரசுக்கும் தொழில்முறைக்கும் நாகரிகத்திற்கும் சேவை செய்பவர்களாக மாறினார்கள்.

மேற்கத்திய சூழலைப் பெருமளவில் உள்வாங்கிக் கொண்ட மார்க்சியமும், இந்தியச் சூழலுக்கு உரியதான பார்வையைப் பெறத்தவறியது என்பதை நாம் இப்பொழுது புரிந்து கொள்கிறோம். பிரிட்டனின் ஆதிக்கம் நிலவிய எந்த நாட்டிலும் புரட்சி ஏற்படவில்லை. இந்தியாவிலும் மார்க்சியம் புரட்சிகரமானதாக இந்தியத் தனித்தன்மையை உள்வாங்கிக் கொண்டதாக இல்லை. இந்தியாவுக்கு வந்து சேர்ந்தது

ஏகாதிபத்தியத்தின் ஒரு கூறாகிய தரகு முதலாளியம். இதற்கொத்த அரசு முறை, கல்வி முறை முதலியவை இங்கு வளர்ந்தன. தொழில் வளர்ச்சி என்ற பெயரிலும் இந்திய மக்களைப் பிரிட்டன் அடிமைப் படுத்தியது. இதே போக்கு மருத்துவம் முதலிய எல்லாத் துறைகளிலும் ஏற்பட்டது. பிரிட்டன் கற்றுக் கொடுத்தபடி இந்தியாவின் உற்பத்தி முறை மரபு பற்றி மார்க்சியர் பார்க்கவில்லை. ஆசிய உற்பத்தி முறை என்ற பார்வையில் இந்திய வரலாற்றை அணுகவில்லை. இங்கு ஏன் தொழில் புரட்சி ஏற்படவில்லை என்பது குறித்துச் சுயமாக அவர்கள் சிந்திக்கவில்லை. மேற்கத்திய சமூகத்தில் பாட்டாளி மக்கள் என்ற சமூகப் பிரிவு இந்தியாவில் ஏற்படவில்லை. மேற்குலகில் இருந்த அளவில் இங்கு இல்லை. மேற்குலகில் நிலத்தோடு அவர்களுக்கு உறவு அறவேயில்லை. மக்கள் தொகையிலும் அவர்களின் எண்ணிக்கை பாதிக்கு மேல் இருந்தது. இந்தியாவில் இப்படி இல்லை. இங்கு உழவர்களின் தொகை அதிகம். பணத்திற்கும், அதிகாரத்திற்கும் முதன்மை தராத இந்தியப் பண்பாட்டின் செல்வாக்கை இங்குள்ள உழவர்களிடம் காண முடியும். இவர்களைப் பாட்டாளிகளாக, இயந்திரத்தோடு முழுமையான உறவுடையவர்களாக மாற்றத்தான் வேண்டுமென்பது இங்கு தேவையில்லை. அப்படிச் செய்யவும் முடியாது. கூட்டுப்பண்ணை முறையின் சில அனுபவங்களைப் பார்த்த நிலையிலே ரஷ்யாவுக்குக் கூட்டுறவுகள்தான் தேவை கூட்டுப்பண்ணை வேண்டாம் என்று லெனின் கூறியதை இங்கு நினைவு கொள்ளலாம். இந்தியாவில் மானாவாரி நிலங்கள் அதிகம், சிறுவிவசாயிகளின் தொகையும் அதிகம். சிறு விவசாயிகளையும், குறுவிவசாயிகளையும் இந்தியாவில் என்றைக்கும் ஒழித்துவிட முடியாது. பாட்டாளி வர்க்கத்தை மட்டுமே சார்ந்து இங்கு மார்க்சியத்தை வளர்க்க முடியாது.

இந்தியாவுக்கு வந்து சேர்ந்த மார்க்சியம் மேற்கின் ஆதிக்கத்தோடு தான் வந்தது என்று கூறினோம். சோவியத் யூனியனில் ஸ்டாலினியமாக வடிவம் பெற்ற மார்க்சியம் தான் இந்தியச் சூழலில் ஆதிக்கம் பெற்றது. பிரிட்டிசு கம்யூனிஸ்டு கட்சி வழியாகவும் இங்கு மார்க்சியம் நுழைந்தது. பிரிட்டனில் ஆதிக்கம் பெற்றிருந்த நேர்கட்சி வாதம், அனுபவ வாதம் ஆகிய போக்குகள், மார்க்சியத்திற்குள்ளும் இடம் பெற்றன. மேற்குலகின் தாக்கம் சோவியத் யூனியனில் செயல்பட்ட மார்க்சியத்தினுள்ளும் நுழைந்திருந்தது. இவற்றைத் தொகுத்துப் பார்த்தால் மேற்குலகின் முதலாளியக் கூறுகள் இந்தியாவில் மார்க்சியத்தினுள்ளும் செயல்பட்டதை நாம் புரிந்து கொள்ள முடியும். இந்தியாவில் நிலவுவது தரகு முதலாளியம் என்ற எம்.என்-ராய்-ன் கருத்துக்கு இங்கு செல்வாக்கு ஏற்படவில்லை. காங்கிரஸ் கட்சியோடு

மார்க்சியக் கட்சி இங்கு ஒத்துச் செயல்பட்டது. தவிர வரலாற்றில் எத்தனையோ திரிபுகளும், முரண்களும் நிகழ்ந்தன. இந்தியச் சூழலுக்கு ஒத்த மார்க்சியம் இங்கு வளரவில்லை. இங்கு ஸ்டாலின் தான் போற்றப்பட்டார். அதன் பிறகு குருச்சேவுக்கும் செல்வாக்கு இருந்தது. மாவோ மதிக்கப்படவில்லை. மாவோவும் இங்கு சுயமான முறையில் புரிந்து கொள்ளப்படவில்லை என்பதையும் இங்கு சேர்த்துச் சொல்ல வேண்டும்.

9. வரலாற்றின் பொருளியல் சூழலில் வைத்துத்தான் எதனையும் புரிந்து கொள்ள முடியும் என்ற பார்வையை நமக்குத் தருகிற மார்க்சியத்தின் வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தை இங்கு யாரும் புறக்கணித்து விடவில்லை. மார்க்சியத்தின் தோல்வி குறித்து உரக்கப் பேசுபவர்களும் சிற்சில திருத்தங்கள் பற்றிக் குறிப்பிடலாமே ஒழிய இயங்கியல் வரலாற்றுப் பொருள் முதல்வாதத்தை மறுக்கமுடியாது. இதில் அடித்தளம், மேற்கட்டு ஆகியவற்றிற்கு இடையிலான இயங்கியல் உறவு குறித்து முன்பே குறிப்பிட்டோம். பொருளியலுக்கு மட்டும், முதன்மையும், முற்றான தன்மையும் தரும் போக்கு முதலாளியச் சூழலில்தான் ஏற்பட்டது என்பதைநாம் பார்த்தோம். இந்த முதலாளியச் சூழல் இன்றுவரை முற்றாக மாறிவிடவில்லை. அன்றியும் சில கூறுகளில் இது தன்னைக் குரூரமாக வெளிப்படுத்தியுள்ளது. இதைப் புதிய காலனியச் சூழல் என்று குறிப்பிடுகிறோம். இந்தச் சூழலிலும் உற்பத்திக் கருவிகள் முதலியவற்றிற்கு முழுமுற்றான இடம் தருவதன் மூலம், மார்க்சியம் தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ள இயலாது என்பதையும் பார்க்கிறோம். எதிர்நிலைகளுக்கு இடையில் ஊடாட்டம்/உறவு என்பதற்குச் சரியான அழுத்தம் தருவது மார்க்சியத்தின் இயங்கியலுக்கு ஒத்தமுறை. எதிர்நிலைகள் இரண்டு எனக் கொண்டால் இந்த உறவு நிலையை மூன்றாவது கூறு என வைத்துக் கொள்வதன் மூலம்தான் மார்க்சியத்தின் மெய்யியலை நாம் செழுமைப்படுத்த இயலும்.

இந்திய வரலாற்றில் தனித்தன்மைகள் குறித்து நாம் பேசுகிறோம். வரலாற்றின் பொருளியல் சூழலில் வைத்துத்தான், வரலாற்றின் எந்தப் போக்கையும் கணிக்க முடியும் என்ற பொது விதி இந்தியாவிலும் செயல்படத்தான் செய்கிறது. இந்தியா என்றவுடன் இது இந்துமதக் கருத்தாக்கம் என்று சிலர் சொல்வதன்மூலம் மார்க்சியத்தின் ஆய்வு முறையை மறுத்து விடுகின்றனர். இந்தியாவில் நிலவுவது சாதிச்சமூகம் தான், வர்க்கச் சமூகம் அல்ல என்ற கூறுவதோடு, மார்க்சியத்தின் பார்வை இங்கு பொருந்தாது என்று சிலர் அடித்துப் பேசுகின்றனர். இவ்வகைக் கூற்றுகளுக்குச் சில மார்க்சியரும் இடம் தருகின்றனர். இதுபற்றி இங்கு சுருக்கமாகக் காணலாம்.

இந்தியச் சமூகம் பற்றி விரிவாக ஆராய்ந்தபொழுது டாக்டர் அம்பேத்கர் இந்தியாவின் வரலாற்றுப் போக்கு குறித்துக் கீழ்க்கண்டவாறு தெளிவுபடுத்துகிறார். இந்திய வரலாற்றின் தொன்மைக் காலத்தில், இந்தியச் சமூகத்தின் தலைமையைக் கைப்பற்றும் நோக்கில் பிராமணர்களுக்கும், சத்திரியர்களுக்கும் இடையில் சில நூற்றாண்டுகள் கடுமையான போர்கள்/ போராட்டங்கள் நிகழ்ந்தன. இதன் காரணமாக இந்த இரண்டு சமூகப் பிரிவுகளும் வளம் குன்றின. அதேசமயம் பிற சமூகப் பிரிவுகள் மேலுக்கு வந்தன. தொடர்ந்து தமக்கிடையில் போர்களில் ஈடுபடுவோமானால் தாம் அழிவதோடு பிற சமூகப் பிரிவுகளுக்குத் தாம் அடிமைப்பட நேரிடும் என்று புரிந்து கொண்ட பிராமணரும், சத்திரியரும் தாங்கள் கைகோத்துக் கொண்டனர். இவர்களின் ஆதிக்கத்தில் தான் இனிச் சமூக இயக்கம் சாத்தியம். இந்திய வரலாற்றை ஆய்வு செய்யும் அம்பேத்கர் இப்படி முடிக்கிறார். பிராமணரும் சத்திரியரும் கை கோத்துக் கொண்ட நிலையில் தம் ஆதிக்கத்தைத் தக்க வைத்துக் கொண்டனர். இதன்பிறகு இந்திய வரலாறு இதே கதியில் சென்றது என்கிறார் அம்பேத்கர்.

இங்கு நாம் என்ன பார்க்கிறோம். சத்திரியர் என்பவர் தனி உடைமையும் அரசும் சார்ந்தவர். பிராமணர் கருத்தியல் சார்ந்தவர். தனி உடைமையும் அரசு அதிகாரமும் கருத்தியலோடு இணைந்த நிலையில் சமூகத்தின் ஆதிக்கத்தை முற்றாகக் கைப்பற்றிக் கொள்ள முடியும் அன்றியும் தக்கவைத்துக் கொள்ள முடியும். தனி உடைமையும் அரசு அதிகாரமும் ஒருசமயம், சமூக ஆதிக்கத்தைக் கைப்பற்றிக் கொள்ள இயலுமென்றாலும், கருத்தியலின் துணை இன்றி நெடுங்காலத்திற்கு அதைத் தக்கவைத்துக் கொள்ள இயலாது. கருத்தியல் மட்டுமே தனித்திருந்து தனிஉடைமையையோ, அரசு அதிகாரத்தையோ தோற்றுவிக்கவும் இயலாது. தனித்திருந்து சமூகத் தலைமையைக் கைப்பற்றிக் கொள்ளவும் இயலாது.

டாக்டர் அம்பேத்கர் மார்க்சியர் இல்லையென்றாலும் இவரது ஆய்வு முறை மார்க்சியத்தின் வரலாற்றுப் பொருள்முதல்வாதத்துக்கு ஒத்த ஆய்வு முறை. தனி உடைமையும் அரசு அதிகாரமும் கருத்தியலோடு இணைந்த நிலையில் சமூகத் தலைமையைக் கைப்பற்றி நிலை நிறுத்திக் கொண்டன என்பது இந்திய வரலாற்று ஆய்வுக்கான சரியான திறவுகோல் இதற்கு மாறாக எல்லாவற்றுக்கும் மூலம் பார்ப்பனியம் தான் என்ற ஆய்வு இந்திய வரலாற்றை எந்த வகையிலும் விளக்கமுடியாது.

இந்தியச் சமூகம் சாதியச் சமூகம் தான் என்று சிலர்

சொல்வதை, சாதி என்பது ஒரு கருத்தியல் என்ற வடிவில் நாம் புரிந்து கொள்ளவேண்டியதில்லை. ஆசிய உற்பத்திமுறை என்று மார்க்சு குறிப்பிட்ட இந்தியச் சமூக அமைப்பில் சாதி என்பது பொருளியல் மற்றும் அரசியலின் ஒரு முக்கியக் கூறாக இருந்தது என்பதை நாம் பார்க்கிறோம். இதுபற்றி இங்கு சுருக்கமாகக் காணலாம்.

இந்தியாவில் கிராமச் சமூகத்தில் நிலவுடைமையாளர்கள் என்பவர் ஒரு தொகுதியினர். கைவினைஞர் இன்னொரு தொகுதி, பஞ்சமர் மூன்றாம் தொகுதியினர். நில உடைமை என்பது கிராமச் சமூகத்திற்குத்தான் சொந்தம். ஆற்றுப்பாசனம், ஏரிப்பாசனம், மானாவாரி நிலங்கள் என்ற முறையில் நிலங்கள் வகைப்படுத்தப் பட்டிருந்தன. ஒருவகையில் பாசனம் பெறும் குடும்பம், ஏழு அல்லது பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு வேறுவகைப் பாசன நிலத்துக்கு மாறிக் கொள்ளவேண்டும். நில உடைமையாளரோடு பார்ப்பனர் இணைந்திருந்தனர். கைவினைஞர்களுக்கும், பஞ்சமர்களுக்கும் நில உரிமை இல்லை. ஆண்டுக்கு இவ்வளவு தானியம் என்ற முறையில் சில உரிமைகள் அவர்களுக்கு உண்டு. விவசாயம் முதலிய காரியங்களுக்குத் தேவையான கருவிகள் உழைப்பு முதலியவற்றை அவர்கள் தரக் கடமைப்பட்டவர்கள். இவ்வாறு உற்பத்தியிலும் பகிர்விலும் நிர்வாகத்திலும் நில உடைமையாளர்களுக்கு மட்டுமே உரிமை உண்டு, அதிகாரம் உண்டு. இப்படி ஒருவகைச் சமூக அமைப்பை இந்தியா தனக்கு உரியதாக்கிக் கொண்டது. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இந்தச் சமூக அமைப்பு தான் இந்தியாவில் நிலவியது.

இந்தச் சமூக அமைப்பு ஏற்றத்தாழ்வான அமைப்பு என்பதில் ஐயமில்லை. இந்தச் சமூக அமைப்பினுள்ளும் கலவரங்கள் எழுந்தன. சில சமயம் நில உடைமையாளர் குடும்பப் பெண்ணோ ஆணோ பிற சமூகப்பிரிவின் ஆண் அல்லது பெண்ணோடு உறவு கொள்ளும் பொழுது சிக்கல் எழும். கைவினைஞர் அல்லது பஞ்சமருக்கு நிலவுடைமையில் பங்குதர முடியாது. ஆகவே இவர்களை வெளியில் வைக்க வேண்டும். தொடர்ந்து பெருகிவரும் வேலைப்பிரிவினையில் ஒன்றை இவர்களுக்கு ஒதுக்கித்தரவேண்டும். இதைச் செய்வது நீதி சாஸ்திரம். இவ்வகையில் தான் பிராமணர்களுக்குக் கூடுதல் முக்கியத்துவம் இருந்தது.

ஏற்றத்தாழ்வு இல்லாமல் எந்தச் சமூகமும் இயங்கவில்லை என்பது ஒரு பொதுவிதி. இந்தியச் சமூகத்திலும் ஏற்றத்தாழ்வுகள் மேற்குறிப்பிட்ட வடிவில் செயல்பட்டன. தரம்பால் என்னும்

ஆய்வாளர் 1795-இல் தொகுக்கப்பட்ட செங்கற்பட்டு ஆவணங்களின் அடிப்படையில், இந்தியச் சமூகத்தை விளக்குகிறார். கிராமச் சமூகத்தின் உற்பத்தி இந்தச் சமூகத்தில் இருந்த மூவகைத் தொகுதியினர்களுக்கு இடையில் 8:5:3 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்ளப்பட்டன என்று அவர் கணிக்கிறார். ஏற்றத்தாழ்வுகள் இங்கு நிலவுவதைக் கவனித்துக் கொள்கிறோம். ஆனால் ஆங்கிலேயர் வருகைக்குப் பின்னர் ஏற்றத் தாழ்வுகள் பெரும் அளவில் பெருகின என்கிறார் தரம்பால். நகரங்கள், மேற்கத்திய நகர நாகரிக வசதிகள் முதலியவை பெருகிய நிலையில் மேல் தட்டினர் கிராம உற்பத்தியில், இன்னும் கூடுதலான அளவைக் கைப்பற்றிக் கொண்டனர். கீழ்த்தட்டினருக்குக் குறைவாகத் தான் அனுமதிக்கப்பட்டது. எட்டு என்பது எண்ணூறு/ எண்ணாயிரமாக பெருகும். மூன்று என்பது முந்நூறு/அறுநூறுக்கு மேல் தாண்டாது. ஐந்து என்பது ஐந்நூறு/ஆயிரத்திற்கு மேல் போகாது. இப்பொழுது சமூகத்தில் முரண்கள் வெடிக்கும். சாதிச் சண்டைகள் வடிவில் இவை வெளிப்படும். ஆங்கிலேயர் சென்றபிறகும் இந்தப் போக்கு இங்கு கூடுதலாகக் காண்கிறோம்.

இந்தியச் சமூகம் சாதிய அமைப்பு என்று சொல்வதன் உண்மையை நாம் இப்பொழுது சரியாகப் பார்த்துக் கொள்ளவேண்டும். சமூகத்தின் உற்பத்தி, பகிர்வு, நிர்வாகம் ஆகியவற்றோடு சாதி பொருந்தியிருந்தது. சாதி என்பது பொருளியல் மற்றும் அரசியலின் கூறு. முன்பே பார்த்தபடி தனி உடைமை அரசு அதிகாரம் கருத்தியல் என்பனவற்றின் உட்கூறு, சாதி. உடைமையாளர்களும், அரசு அதிகாரமும் தம்மைத்தக்க வைத்துக் கொள்ள சாதியம் என்ற அமைப்பு பயன்பட்டது. உடைமையிலிருந்தும், அதிகாரத்திலிருந்தும் சாதியைப் பிரித்துப் பார்க்க முடியாது. சாதி ஒழிய வேண்டுமானால் தனி உடைமை முறையையும், அரசு அதிகார அமைப்பையும் முற்றாக ஒழித்தாக வேண்டும். சாதி என்பதைக் கருத்தியல் என்றோ, பார்ப்பனரின் கண்டுபிடிப்பு என்றோ பிரித்துப் பேசுவது வரலாற்றியக்கத்தை மறுப்பதாகிவிடும். சாதி என்பது உடைமையைக் காப்பாற்றும் ஒரு சக்தி. அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொள்வதற்குரிய ஒரு கருவி. கருத்தியலாக மட்டுமே சாதியைக் குறைத்தால் இந்த உண்மை மறைக்கப்பட்டுவிடும். இதன் காரணமாகத்தான் சாதி என்றும், பார்ப்பனியம் என்றும் இன்று உரத்து முழங்குவோர் தனி உடைமை மற்றும் அரசு ஆதிக்கத்தின் காப்பாளர்களாகச் செயல்படுகின்றனர். இதன் காரணமாகவே மார்க்சியத்திற்கு எதிராகப் பேசுகின்றனர். மார்க்சியத்தை இழிவு படுத்தவும் செய்கின்றனர்.

சாதிமுறை இன்று எந்த வடிவிலும் நமக்குத் தேவை இல்லை. முன்னைய இந்தியச் சமூகம் சாதியம் என்ற அமைப்பில் தன்னை

உருவமைத்திருந்தது. இன்று இதைக் கலைத்துப்போட்டு வேறு அடிப்படைகளில் சமூகத்தைக் கட்டமைக்கவேண்டும் என்று கூறுகிறோம். இன்று சமதர்மம் என்ற ஆதாரத்தில் தான் சமூகத்தை மறு உருவாக்கம் செய்யமுடியும். உடைமைமுறை அரசுஅதிகாரம் பற்றிய விமர்சனம் இல்லாமல், சாதிமுறை பற்றிய விமர்சனம் சமதர்மத்திற்கு நம்மை நகர்த்தாது. உடைமை, அரசதிகாரம், கருத்தியல் என்பனவற்றை இணைத்துக் காண்பதுதான் மார்க்சியத்தின் வர்க்கப் பார்வை. சாதியத்தின் தோற்றம், வளர்ச்சி, மற்றும் மறைவு குறித்துச் சரியான பார்வையைத் தருவதுதான் மார்க்சியத்தின் வர்க்கப்பார்வை.

மார்க்ஸ் கூறிய ஆசிய உற்பத்தி முறை என்பதன் மேற்கண்ட வடிவை முன்நிறுத்தி இந்தியச் சமூகம் பற்றிய ஆய்வை மார்க்சியர் செய்யத் தவறினர் என்று இங்கு நாம் அழுத்தமாகக் குறிப்பிடமுடியும். இதைத்தவிர இந்திய வரலாற்றின் வேறு சில/பல தனித்தன்மைகளையும் ஒதுக்கிவிடமுடியாது. இந்தியாவில் மார்க்சியம் வலிமை பெறாததற்கு இப்படி பல காரணங்களை நாம் தொகுக்க முடியும். மார்க்சின் அந்நியமாதலை ஆதாரமாகக் கொண்டு மெய்யியல் ஆய்வை நாம் செய்திருப்போமானால் இந்தியாவின் மதங்கள் மற்றும் கலாச்சாரங்கள் பற்றிக் கூடுதலான உண்மைகளை நாம் கண்டிருக்க முடியும். ஐரோப்பிய சமூக வளர்ச்சியை அதே வடிவில் இந்திய சமூகத்திற்குள் பார்க்க முடியாது, மற்றும் கொண்டு வர முடியாது. கலை பற்றி விரிவாக இங்கு பேசுவதற்கு இடமில்லை. உலகச் சூழலில் மார்க்சியத்தை ஒருமறு பார்வைக்கு உள்ளாக்கும் சூழல் நேர்ந்துள்ள இன்றைய நிலையில் இந்தியச் சூழலிலும் மார்க்சியத்தை ஒரு மறுபார்வைக்கு உள்ளாக்குவது இன்றியமையாதது என்பதைத்தான் இங்கு நாம் கவனிக்க வேண்டும்.

இந்தியாவிற்கு நெடுங்கால வரலாற்றுப் பாரம்பரியம் உண்டு. எத்தனையோ இன மக்கள் இங்கு வந்து கலந்தனர். நூற்றுக் கணக்கில் இனக்குழு மக்கள் இங்கு வாழ்ந்தனர். வேளாண்மை முதலிய துறைகளில் இந்தியாவின் சாதனைகள் அற்புதமானவை. கலைகள், இலக்கியங்கள், தத்துவங்கள், மதங்கள் என்ற முறையில் இந்தியாவின் சாதனைகள் எண்ணற்றவை. தேக்கமுடையதெனத் தோன்றியபோதிலும் இந்தியா இயங்கிக் கொண்டு தான் இருந்தது. ஐரோப்பிய சமூகத்தின் இயக்க முறையும், இந்திய கீழ்த்திசை இயக்க முறைகளும் வேறானவை. இங்கு இயற்கையின் வளம் அதிகம். வேளாண்மை விரிவாக நடைபெற்றது. ஆள்பவர்கள் அடிக்கடி மாறியபொழுதிலும், இந்தியச் சமூகம் அதிகம் மாறவில்லை.

இந்தியச் சமூகத்தில் தனி உடைமை ஆதிக்கம் பெறவில்லை.

கைத் தொழிலும் வேளாண்மையும் கூடிய வரை இணைந்திருந்தன. ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிரான ஒரு வகைச் சிந்தனை முறை/அற உணர்வு எல்லாக் காலங்களிலும் உழைக்கும் மக்கள் மத்தியில் நிலவியது. பொருளும் அதிகாரமும் பெருமைக்குரியவையாக இங்கு பேசப்படவில்லை. கடவுள், அறம் பற்றிய தேட்டங்கள் இங்கு கூடுதலாக இருந்தன. இந்தியச் சமூகத்தில் எப்பொழுதும் இருண்ட காலமே நிலவியது என்பதும் உண்மை இல்லை. இந்தியச் சமூகத்தை இந்துச் சமூகம் என்றோ, பார்ப்பனியச் சமூகம் என்றோ சுருக்கிச் சொல்வதில் பொருளில்லை. இவ்வாறெல்லாம் இந்தியச் சமூகம் பற்றிய ஆய்வில் மார்க்சியம் புது நெறிகள் காணவேண்டும்.

இந்தியாவில் வறுமை கொடியது. கோடிக்கணக்கான மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்கிறார்கள். இந்திய முதலாளிகள் பெரும்பாலும் தரகு முதலாளிகள் அல்லது லும்பன் முதலாளிகள் என்று வருணிக்கத்தக்கவர்கள். இவர்களோடு ஆட்சிஅதிகாரம், அரசுஅதிகாரம் முழுமையாக ஒத்துழைக்கிறது. அந்நியச் சக்திகளுக்கு இவர்கள் முழு அளவில் இடம் தருகிறார்கள். அரசியல் சட்டத்திலுள்ள குறைந்த அளவுக்கான மக்களாட்சி முறையைக் கூட இவர்கள் அழிக்கிறார்கள். கட்சித் தலைவர்களும் கைகோத்துக் கொள்கிறார்கள். அரசு பீடங்கள் மேலும் மேலும் கனத்து வருகின்றன. கூட்டாட்சி முறைக்கு இடம் இல்லை. வாய் அளவில் கூட சோசலிசம் பேசப்படுவதில்லை. பொதுத்துறை நிறுவனங்கள் தனியார் மயப்படுத்தப் படுகின்றன. முதலாளிகள் தொடர்ந்து ஊக்குவிக்கப்படுகின்றனர். வேளாண்மைத் துறைவளர்ச்சிக்கு வாய்ப்பில்லை. உழவர்களிடமிருந்து நிலங்கள் பறிக்கப்படுகின்றன. நிலம், நீர், காற்று, முதலியவை தொடர்ந்து அழிகின்றன. ஊழலுக்கு அதிக அளவில் மக்கள் உட்படுகின்றனர். பெண்கள், தலித் மக்கள், மற்றும் உழவர்கள் மீது கூடுதலான சுரண்டலும் ஒடுக்குமுறையும் அதிகரிக்கின்றன. இந்தியத் தேசியம் என்ற பெயரில் தேசிய இனங்கள் ஒடுக்கப்படுகின்றன. மக்கள் பெருமளவில் அகதிகளாகி வருகின்றனர். இந்திக்கும், ஆங்கிலத்திற்கும் இடம் தந்து தேசிய இனத்தின் மொழிகள் அழிகின்றன. மக்கள் மீது அடிமைத்தனம் அதிக அளவில் திணிக்கப்படுகிறது. இனி மக்கள் தம் தேசத்தை, தமக்கான பொருளியலை, தமக்கான அரசியலை, தமக்கான கல்வியை, மருத்துவத்தை, இயற்கையை மீட்டுக் கொண்டால் ஒழிய வாழ்வுக்கு வழியில்லை என்ற நிலைமை பெருகி வருகிறது. இந்த நிலையில் மக்கள் விடுதலைக்கான அரசியலை, பொருளியல் முதலியவற்றை நமக்கு முன்வைப்பது மார்க்சியம் தவிர வேறு இல்லை.

# V. இந்திய மெய்யியலில் இருப்பனவும் இறந்தனவும்

## - ஒரு நூலின் திறனாய்வு

இந்தியத் தத்துவங்களை மார்க்சிய முறையில் நெடுங்காலமாக ஆராய்ந்து வருபவர் தேவிபிரசாத் சட்டோபாத்தியாயா. இவரது சாதனைகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கொள்ளலாம்.

இந்தியத் தத்துவ வரலாற்றில் பொருள் முதல்வாதப்போக்குகளைக் கண்டறிவது இவரது நோக்கம். பிற இந்தியத் தத்துவவாதிகள் வேதாந்தமே இந்தியத் தத்துவத்தின் உச்சம் என்று கூறுவதை மறுத்து, பொருள்முதல்வாதப் போக்கே என்று இவர் சாதிக்க முயல்கிறார். இந்தியத் தத்துவத்தின் பல்வேறு வகைகளுக்குள் இருந்து லோகாயதத்தை மீண்டும் புதிதாகக் கட்டமைக்க இவர் முயற்சி செய்கிறார். வேதகாலத்தையே வர்க்க வேறுபாடு இல்லாத காலமாகக் காண்கிறார். சாந்தோக்கிய உபநிசத்தின் உத்தல ஆருணியை மீண்டும் உயிர்த்தெழுப்புகிறார். மீமாம்சம் சடங்குகளையே முதன்மையாகக் கொண்டு மேலுலகம், முக்தி ஆகியவற்றை மறுத்த தன்மையை நிரூபிக்கின்றார். சாங்கியத்தில் புருஷன் - ஆன்மா கோட்பாடுகளில்லாத காலத்தை விவரிக்கின்றார். நியாய வைசேசிகத்தின் அணுக்கொள்கை, அறிவுக் கொள்கையை மிக விரிவாக எடுத்துப் பேசுகிறார். இவ்வாறு, இந்தியத் தத்தவத்திலுள்ள பொருள் முதல்வாதப்போக்குகளைக் கண்டறிவதில் சிறப்பான கண்டுபிடிப்புகளைச் செய்திருக்கிறார் தேவி பிரசாத். இவை நாளடைவில் எப்படி வேதாந்தத்திற்கு இரையாயின என்பதையும் தேவிபிரசாத் தமது நாம் விமர்சனத்துக்கு எடுத்துக்கொண்ட மேற்குறிப்பிட்ட நூலில், நாம் மேலே தொகுத்துக் கொண்ட கருத்துக்களை மிக விரிவாகப் பார்ப்பதோடு, அணுக்கொள்கை, அறிவுக்கொள்கை ஆகியவற்றில் சிறந்திருந்த காரணத்தால் லோகாதயத்தை விட, நியாய வைசேசிகமே பொருள் முதல்வாதப் போக்கை அதிகம் கொண்டிருந்தது என்பதை விரிவாக எடுத்துரைக்கிறார் இவர்.

தமது ஆய்வு முறையைப் பொருள் முதல்வாத அணுகல் முறையாகக் கொண்டவர் தேவிபிரசாத். இந்நூலின் முன்னுரையில், இந்தியத் தத்துவ ஆய்வின் நோக்கமாக ஒன்றைக் குறிப்பிடுகிறார். இன்றைய கால கட்டத்தின் தேவைக்காக, சமயச் சார்பின்மை, ஜனநாயகம், விஞ்ஞான மனோபாவம் ஆகியவற்றை இந்தியத்

தத்துவங்களுக்குள் இருந்து தொகுத்தெடுத்து ஒரு மறு உருவாக்கம் செய்யத் தான் விரும்புவதாகக் கூறியுள்ளார். நூல் முழுவதையும் பார்க்கும்போது இந்தியத் தத்துவங்களினூடே விஞ்ஞான மனோபாவம் பற்றி அதிகம் கருத்துக்களைத் தேவிபிரசாத் தொகுத்துக் கொள்ள விரும்புவது தெரிகிறது. "பழங்கால இந்தியாவில் விஞ்ஞானம்" என்ற பொருளில் தமது அடுத்த புத்தகம் அமையும் என்பதையும் தேவிபிரசாத் குறிப்பிட்டுக் கொள்கிறார்.

ஒன்றை நாம் இங்கு கவனித்துக் கொள்ளலாம். தேவிபிரசாத் கருத்தில் பொருள் முதல்வாத அணுகல்முறை என்பது சமயச் சார்பின்மை, ஜனநாயகம், விஞ்ஞான மனோபாவம் ஆகியவற்றைக் கொண்டது. இந்த ஆய்வு முறையை "இயக்கவியல் ஆய்வு முறை" என்பதாக அவர் மார்க்சியவாதி என்பதால் நாம் கருதிக் கொள்ளலாம். தேவிபிரசாத், குறிப்பிட்ட இந்த நூலிலும் முன்னைய நூல்களிலும் தமது பொருள் முதல்வாத அணுகல் முறையிலிருந்து புத்த மதத்தின் தோற்றம் பற்றிய விளக்கத்தை அற்புதமாகச் செய்திருக்கிறார். சமுதாயத்தில் வர்க்க வேறுபாடுகள் தோன்றிய நிலைமை, அரசின் தோற்றம், தனிச் சொத்தின் கொடுமை, பேராசை இவற்றுக்கிடையில் புத்த மதத்தின் தோற்றத்தை தேவிபிரசாத் விளக்குகிறார். முன்னைய சமுதாயத்திற்குள் நிற்க முடியாத நிலையிலும், அரசு தனிச்சொத்து முதலியவை இல்லாத காலம் பற்றிச் சிந்திக்க முடியாத நிலையிலும், ஓர் இடைக்கால ஏற்பாடாகப் புத்தர் தன் சங்கத்தையும் "பிரதீயசமுத்பாதம்" (Dependent origination) என்ற தனது கோட்பாட்டையும் உருவாக்கியதையும் தேவிபிரசாத் கண்டறிகிறார். இத்தகைய கண்டறிதல் தேவிபிரசாத்துக்கும் அவரது பொருள்முதல்வாத அணுகல் முறைக்கும் ஒரு மாபெரும் வெற்றி.

வர்க்க வேறுபாடுகள் இல்லாத வேதகாலத்தை அடுத்து, சமுதாயம் வர்க்கங்களாக வேறுபட்ட நிலையில், உபநிசத்துக்களின் தோற்றத்தையும் தேவிபிரசாத் விளக்குகிறாார். உபநிதக் கோட்பாடு வளர்ந்த சூழலில் மகாயானம், எப்படி அதன் பாதிப்புக்குள்ளாகியது என்பதையும், அதன் வளர்ச்சியின் இன்னொரு கட்டத்தில் வேதாந்தம் எப்படி அத்வைதமாக உருவெடுக்கிறது என்பதையும் தேவிபிரசாத் சிறப்பாக விளக்குகிறார். அத்வைதம் கூறும் பிரம்மம், சூன்யவாதம் கூறும் ததாதாவும் வேறுபடவில்லை அதாவது, ஒரு தத்துவம் இன்னொன்றாக பரிணமிக்கின்றது என்பதை தேவிபிரசாத் மிகச் சரியாகவே விளக்கியுள்ளார்.

தமது நூலில் இடையிடையே இந்திய வரலாற்றாய்வு

போதிய அளவில் நடைபெறவில்லை என்பதை தேவிபிரசாத் பல முறையும் குறிப்பிட்டுக் கொள்கிறார். ஆயினும், போதிய வரலாற்று ஆதாரங்கள் கிட்டாத நிலையிலும், சில முடிவுகளை தேவிபிரசாத் எடுத்துக் கொள்வதில் கவலை கொள்ளவில்லை. உதாரணமாக, வேதகால முடிவில், மனித உணர்வின், விடுதலையைப் பற்றிக் குறிப்பிடும் தேவிபிரசாத், உடனே விடுதலை பெற்ற மனித உணர்வு எப்படி நோய் உணர்வாக மாறியது என்பதைப் பற்றியும் பேசத் தொடங்கி விடுகிறார். யாக்ஞவால்கியர் காலம் முதல் தத்துவவாதிகள் மன்னர்களுடன் சார்ந்திருந்ததை உறுதியாகக் குறிப்பிடுகிறார். கௌடில்யருடைய ஆளும் வர்க்க சேவையை விரிவாக எடுத்துரைக்கிறார். இந்தியாவில் ஒரு கட்டத்தில் தோன்றிய தர்க்கம், ஆளும் வர்க்கத்திற்கே சேவை புரிந்ததாகக் குறிப்பிடுகிறார். சங்கரர் மனுவை மேற்கோள் காட்டுவதிலிருந்தே அவரையும், அவரைப்போன்ற பிற தத்துவவாதிகளையும் ஆளும் வர்க்கத் தொண்டர்களாக விவரிக்கின்றார். புத்தமதவாதிகளும் இத்தகையவரே என்று குறிப்பிட்டுக் கொளகிறார். இந்தியத்தத்துவவாதிகளில் லோகாயதவாதிகள் தவிர எல்லோருமே சட்டம் வகுப்பவர்க்கு அஞ்சி இருந்ததாகவும் தேவிபிரசாத் குறிப்பிடுகிறார். வாத்சாயனருடைய பிறப்புப் பற்றித் தெரியாத நிலையிலும் அவர் ஒரு பிராமணராகத்தான் இருக்க வேண்டுமென்று குறிப்பிடுகிறார் தேவிபிரசாத். இவ்வாறெல்லாம் தேவிபிரசாத் குறிப்பிடுவதற்கான அடிப்படை, தத்துவவாதிகளெல்லாருமே சுரண்டும் வர்க்கத்தின் நலனுக்காகவே தத்துவம் வகுத்திருக்க வேண்டுமென்ற அவரது இறுகலான கருத்துத்தான்.

இப்போது நமக்கு முன் சில பிரச்சினைகள் எழுகின்றன. தாம் பாராட்டும் நியாய லோகாயதவாதிகளும், வைசேசிகர்களும் சுரண்டும் வர்க்கத்தின் நலனுக்காகத்தான் தத்துவம் வளர்த்தனர் என்பது தேவிபிரசாத்தின் கருத்தா? சுரண்டும் வர்க்கத்தின் காவலுக்காகத்தான் தத்துவமென்றால், தத்தவங்களில் பல வகைகளும் ஒன்றை மற்றது மறுப்பதும் ஏன் என்பது நமக்கு விளங்கவில்லை.

கௌடில்யர், அரசாங்கத்திற்குப் பணம் திரட்டும் நோக்கத்துடன் பலவகையான நம்பிக்கைகளைப் பரப்பச் சொன்னார் என்பதிலிருந்து, சமுதாய வரலாற்றுக்காலம் முழுவதும் மூட நம்பிக்கைகள், புராணக்கதைகள், தத்துவங்கள் இதற்காகவே ஏற்பட்டன என்பது உண்மையாகுமா? தாம் பரப்பும் மூட நம்பிக்கைகளுக்குள் ஆளும் வர்க்கம் சிக்கிவிடக்கூடாது என்று கௌடில்யர் கூறுவதிலிருந்து, ஆளும் வர்க்கத்திடம் இத்தகைய மாயைகள் எப்போதும் இருந்ததில்லை என்று ஆகிவிடுமா?

விஞ்ஞானமும் கலைகளும் செழித்த குப்தர் காலத்தில் புத்தமதம் தர்க்க இயலைத் தன் தத்தவ விளக்கத்திற்கு விரிவாகப் பயன்படுத்தியது. இந்தப் புத்தமதம் வியாபாரிகளின் ஆதரவைப் பெற்றதோடு ஒரு கட்டத்தில் மக்கள் சார்புடையதாகவும் இருந்தது. இது, தேவி பிரசாத் கவனித்திருக்க வேண்டிய ஒரு முக்கியமான உண்மை.

இவ்வாறு சில பிரச்சினைகள் எழும்போது, இதற்கான காரணத்தை நாம் தேவி பிரசாத்துக்குள்ளும் தேட வேண்டியவர் ஆகின்றோம். தேவி பிரசாத்திடம் தாம் தீர்க்கமுடியாத பல பிரச்சினைகள் உயிரோடிருக்கின்றன. தேவிபிரசாத்தின் ஆய்வுக் கண்ணோட்டமே இதற்கு முதற்காரணம் என்று நாம் எண்ணவேண்டியிருக்கிறது. அதாவது, மார்க்சியம் பற்றி இவர் கொண்டுள்ள விளக்கம் இவரது ஆய்வுக்கண்ணோட்டத்தைக் கடுமையாகப் பாதித்திருக்கின்றது.

தத்துவங்களை இருவகைகளாக ஏங்கெல்ஸ் பிரிக்கிறார். ஒன்று கருத்துமுதல்வாதம். மற்றது பொருள்முதல்வாதம். பொருளா? ஆன்மாவா? எது முதல் என்பதிலிருந்து இப்பிரிவினை எழுகிறது. இப்பிரிவினையை ஏங்கெல்ஸ் தான் முதலில் செய்தாரா என்பது ஒரு புறமிருக்க, இக்கொள்கை பெருமளவில் அறிவுக்கொள்கைதான், இதுவே தத்துவம் ஆகி விடாது. தத்துவ ஆய்விற்கான கருவிகளில் ஒன்று அறிவுக் கொள்கை. பொருள் தான் முதல் என்பதால் ஒரு தத்துவம் முற்போக்கு ஆகிவிட முடியாது. கடவுள்தான் முதல் என்பதால் ஒருதத்துவம் பிற்போக்கு ஆகி விட முடியாது. லெனின் கூறியபடி, வறட்டுப்பொருள் முதல்வாதம் தத்துவ வகையிலான கருத்து முதல் வாதத்தை வெல்ல முடியாது. ஏங்கல்ஸ் இன்னொரு இடத்தில் எடுத்துக் காட்டுவது போல, முன்ஸர் சமயவாதியாக இருந்தபோதிலும், ஜெர்மனில் நடைபெற்ற வர்க்கப்போராட்டத்தில் அந்தச்சமயவாதிதான் உறுதியாக நின்றார். ஹெகலின் தத்துவத்தையே தலைகீழான பொருள் முதல்வாதம் என்று ஏங்கல்ஸ் கூறினார். சமயங்கள் காலப்போக்கில், பொருள் முதல்வாதத் தன்மையை அதிகம் பெற்று வருவதை ஏங்கல்ஸ் குறிப்பிட்டார். ஏங்கல்ஸே கூட காண்ட், ஹியூம் ஆகியவர்களைக் கருத்துமுதல்வாதம், பொருள் முதல்வாதம் ஆகியவற்றுக்கு இடையில் வைத்துப் பார்த்தார். பிளக்கனோவின் கருத்துக்கள் இவ்வகையில் பிரசித்தமானவை.

இவற்றிலிருந்து நாம் சில உண்மைகளைத் தேர்ந்து கொள்ள வேண்டி இருக்கிறது. தத்துவங்களையும், சமயங்களையும் சில தேவைக்காகக் கருத்துமுதல்வாதம், பொருள்முதல்வாதம் என்று

பகுத்துக் கொள்ள நேர்ந்தபோதிலும், இவ்வழியிலேயே தொடர்ந்து செல்வதில் ஆழமான உண்மைகளைக் கண்டறிய முடியாது. சமயம் கூறும் பிரம்மம் என்பது பொருளாகவே இருந்து விட முடியும். சமயம் உலகத்தைத் தலைகீழாகப் பார்க்கிறது என்ற கூற்றுக்கு, பொய்யாகப் பார்க்கிறது என்று பொருளில்லை. பலருக்கு வாழ்க்கை கனவாகி விட்ட நிலையில் வாழ்க்கையை ஒரு மாயை என்று குறிப்பிடுவதில் பொருளுண்டு. பலருக்கு வாழ்க்கை அர்த்தமற்றுப் போய்விட்ட நிலையில், சூன்யந்தான் இறுதி உண்மை என்பதிலும் பொருளுண்டு. பொருளிலேயே - பணத்திலேயே - வாழ்க்கையைப் பார்ப்பவன், பொருளே முதல் என்று கூறுவதற்கும் இடமுண்டு. தத்துவம் எதுவும் வாழ்க்கையை, உலகத்தைப் புறக்கணித்து விட முடியாது. வாழ்க்கையை ஒரு தத்துவம் முற்றாகப் புறக்கணிக்கிறது என்றால் வாழ்க்கை வாழ்வதற்கான தகுதியை இழந்திருக்கிறது என்பது பொருளாக இருக்கமுடியும்.

தத்துவம் வாழ்க்கைக்குப் பொருள் கூறுகிறது. கடவுள், மேலுலகம், ஆன்மா முதலிய கருத்துக்களை, வாழ்க்கை தன் தேவைக்காகத்தான் படைத்துக் கொள்கிறது. இவற்றை ஆளும் வர்க்கந்தான் படைத்தது என்பது பொய். வர்க்க வேறுபாடுகள், வரலாற்றின் தேவையையொட்டிப் பிறந்தவை. வர்க்க வேறுபாடுகள் மூலமும் வரலாறு வளர்ந்திருக்கிறது. சுரண்டலும், அதன் கொடுமைகளுமில்லாமல் சமுதாயம் வளர்ந்ததில்லை. சமுதாயம் தன் வாழ்க்கைக்கும் வசதிக்கும் நிறைய மக்களைப் பலி வாங்கி இருக்கிறது. இத்தகைய சிந்தனைகளோடு மீண்டும் தேவி பிரசாத்தைப் பார்த்தால் பல விஷயங்கள் நமக்குப் புதியதாகப் புரிகின்றன.

லோகாயதம் பற்றிய தேவியின் விமர்சனங்கள் நாம் ஏற்கத்தக்கவை. வெறும் புலன் வாழ்க்கைக்கே முக்கியம் தந்த லோகாயதம் மக்களுக்கு நம்பிக்கை தரவில்லை. பொருட்கலப்பில் இருந்து உணர்வு தோன்றுவதாகக் கூறிய லோகாயதம், எல்லாப் பொருட்கலப்பிலிருந்தும் உணர்வு தோன்றுவதாக விளக்க முடியவில்லை. உணர்வு தோன்றுவதாகிய பொருட்கலப்பில் இருந்தே, எப்படி உணர்வு தோன்றுகிறது என்பதை லோகாயதம் விளக்கவில்லை. அதாவது, இப்பிரச்சினையில் லோகாதயத்திற்கு அக்கறையில்லை. உணர்வை, இது அதிக அளவில் ஒரு பிரதிபலிப்பாக, ஒரு போதையாகக் கருதுகிறது. அனுபவித்துத் தீர்ப்பதற்குரியது இந்தப்போதை. இந்தப் போதையை உடல் கொண்டிருப்பது லோகாயத நோக்கில் நல்லதுதான். இத்தகைய நோக்கு உடையவருக்கு, தேவி கூறுகிறபடி விஞ்ஞானம் முதலிய பிரச்சினையில் அக்கறை இல்லாததில் வியப்பில்லை. உணர்வின் போதைத்தன்மையை லோகாயதவாதிகள்

பார்த்தார்களேயொழிய, அதன் படைப்புத் தன்மையை அவர்கள் பார்க்கவில்லை. இவர்களுக்கு வாழ்க்கை ஒரு தற்செயல், பிரபஞ்சத்தில், வரலாற்றில் வாழ்க்கைக்குப் பொருளில்லை. ஆகவே இந்தியத் தத்துவ வரலாற்றில் இவர்கள் பெரிதாக மதிக்கத்தக்கவர்களாக இருந்ததில்லை என்பதில் வியப்பெதுவுமில்லை.

இவர்கள் கூறிய சுபாவ பாவம், கடுமையான விமர்சனத்துக் குரியது. பழம் இனிப்பது ஏன்? அது அதன் சுபாவம் நீர் குளிர்ந்திருப்பது ஏன்? அது அதன் சுபாவம், பறவை பறப்பது - அதன் சுபாவம். இந்தப் போக்கில் தான் பதில் வரும் என்றால், கேள்விக்குத் தேவையில்லை; ஆய்வுக்குத் தேவையில்லை. இதனால் இவர்கள் விதண்டாவாதிகள், சொல் ஜாலக்காரர்கள் என்று விமர்சனம் செய்யப்பட்டதில் குற்றமில்லை. இந்தக் கேள்விகள் விஞ்ஞான வளர்ச்சிக்கான கேள்விகள். இவற்றை அறவே புறக்கணித்தவர் லோகாயதவாதிகள்.

தேவி பிரசாத் உபநிசத்துகளில் உணர்வின் விடுதலையைப் பாராட்டிய அதேவேகத்தில் மறுநொடி யிலேயே இந்த மன உணர்வை இகழத்தொடங்கி விடுகிறார். இது சரியில்லை.

வேலைப்பிரிவினை எளிய நிலையிலிருந்த காலத்தில் உடலுழைப்புக்கு அதிகத் தேவை இருந்தது, வேலைப்பிரிவினை பல்கும்போது - வேலைகளில் நுணுக்கங்கள், திறன்கள் பெருகும் போது - சிந்தனையின் பங்கு பெருகி விடுகிறது. மூளையின் பங்கு பெருகாவிட்டால் தொழில்கள் வளர இயலாது. இந்நிலையில் உடலுழைப்பின் சலிப்பிலிருந்து மூளைக்கு விடுதலை தரவேண்டும். மிகையுற்பத்தியின் போக்கில்தான் இது சாத்தியம், தொடர்ந்து மிகையுற்பத்தியின் வளர்ச்சிக்கும் இதுதேவை. தொழிற்பெருக்கம், மிகையுற்பத்தியின் பெருக்கம் ஆகியவை சமுதாய வளர்ச்சி நோக்கில் தேவை. புராதனப் பொதுவுடைமைச் சமுதாயத்திலேயே கருவிகளைச் செய்பவர்கள் போலவே, கலைஞர்களும், புரோகிதர்களும் இருந்தனர். அவர்கள், இத்தகையவர்கள்தான். அடுத்த சமுதாயத்தில் இவர்கள் தொகை அதிகரிப்பதில் தவறு இல்லை. இந்தச் சமுதாயத்தில் சிந்தனை ஆராய்ச்சி, கைகளை இயக்குகிறது. சிந்தனை தன் முழு ஆற்றலை வெளிப்படுத்துகிறது. ஓட்டப்பந்தயத்தில் வேகமாக ஓடுபவன், இறுதி இலக்கில் நின்றுவிட இயலாது. அவன் முழுவதும் ஓடித்தீரவேண்டும். சிந்தனையும் இத்தகையதுதான்,

சிந்தனை இந்நிலையில், தனக்குள்வைத்து உலகத்தை, ஏன் அண்டத்தையே செரிக்க முயற்சி செய்யும். உபநிசத்துக்கள் செய்த

முயற்சிகள் இத்தகையவை. முடியாதபோது சிந்தனை தன் எதிர்மறைக்குள் மறையும், அதாவது, பொருளிலிருந்து, சமுதாய நிலைகளிலிருந்து தோன்றிய சிந்தனை தன் முழுவேகத்தில் ஓடி, பொருளைக்கடந்து சென்று, இறுதியில் ஓடுவதற்கு இடம் இல்லாமல், இலக்கு இல்லாமல், திரும்பி வந்து பொருளில் முடங்கும். பொருளை அறவே புறக்கணித்து விட்டுச் சிந்தனை ஓடிவிட முடியாது. சிந்தனை எங்கே ஓடினாலும், இறுதியில் அது பொருளின் எல்லைக்குள் வந்துதான் தீரவேண்டும். பொருளில் இருந்துதான் சிந்தனை தோன்றியது என்பது, சிந்தனைக்குப் பழி அல்ல. சிந்தனை அதனை மீறிச்செல்லப் பார்க்கிறது என்பது, பொருளுக்கு இகழ்வும் அல்ல. பொருளில் இருந்து தோன்றிவிட்டது என்பதால், அந்தத் தாயின் காலடியிலேயே இது கிடக்கவேண்டும் என்பது தேவையில்லை. சிந்தனை தனது உயிர்த்துடிப்பை, பொருளிடம் தனக்கு உறவே கிடையாது என்று கூறித்தான் வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதுமில்லை. இவை ஒன்றோடொன்று, ஒன்றில் ஒன்றாக இருக்கக்கூடியவை. இருக்கவேண்டியவை.

அதாவது, இந்த முரண்பாடு - இந்த இயக்கம் - இந்தப் பயணம் முழுவதுமே தேவையானது. யாக்ஞவல்கியரும், உத்தல ஆருணியும் இந்தப்பயணத்தின் இரு எல்லைகளைப் பிரதிபலிக்கிறார்கள். லெனின் கூறிய, Zigzag Path -இல் இவர்கள் சென்றவர்கள். செயலும் சிந்தனையும் முன்னும் பின்னுமாக. ஒன்றை மற்றது மீறியதாகத்தான் செல்லும். சில சமயம் சிந்தனை மட்டுமே; சில சமயம் செயல் மட்டுமே; இது தவிர்க்க இயலாதது. வேத காலத்திலிருந்த சடங்கு முறைகள், முன்னைய காலத்தின் தொடர்ச்சிகள். அவை மாந்திரீக சடங்குகள்.இவை வேதகாலத்தைக் கடந்தும் இன்றுவரை எத்தனையோ வடிவங்களில் நிலைத்திருக்கின்றன. மீமாம்சம் தொடர்ந்து உயிர் கொண்டிருப்பதின் நியாயம் இதுதான். - புரிகிறதோ இல்லையோ செய். செய்து கொண்டே இரு - தெய்வம் வரம் கொடுக்க வேண்டாம். செயல் பலன் தரும். - செய்வதைச் சரியாகச் செய். பலன் கிட்டும் - இப்படிக் கூறியது மீமாம்சம்.

எல்லாரும் எல்லாவற்றையும் ஆராய்ந்து முற்றறிவோடு செய்யமுடியாது. செய்வதற்குச் சிலர் வேண்டும். அவர்கள் செய்து கொண்டே இருக்க வேண்டும். மூளை உழைப்பும், உடல் உழைப்பும் பிரிந்திருப்பதற்கான காரணம் இது. இதை நெடுங்காலம் தவிர்க்க இயலாது. யாகம் செய்து கொண்டே இருந்தால் எப்போதாவது மழை பெய்கிறது. ஆகவே யாகத்தைத் தொடர்ந்து செய் ..... என்பது போல நம்பிக்கை பலம் பெற்று விடுகிறது. இம்முறையில் பிராமணர்களும் புரோகிதர்களும் எல்லாச் சமுதாயத்துக்கும் தேவைப்படுகிறார்கள்.

முழுமையான கம்யூனிஸ சமுதாயம் வரும் வரை இவர்கள் ஏதோ ஒரு வடிவில் இருக்கிறார்கள். இந்த வேறுபாட்டை இன்று நாம் செயலளவில் கடக்காவிட்டாலும், சிந்தனாரீதியாக இன்று கடந்து விட்டோம். இன்றைய நிலையில் நாம் முன்னோரை, தேவி பிரசாத் போல, காய வேண்டியதில்லை.

தத்துவத்தில் கூர்மையான பிரச்சினை "தான்" என்பது. ஆன்மா, மனம், Ego என்றெல்லாம் பல பெயர்களில் இது கூறப்படுகிறது. சமுதாயத்தில் சிக்கல் மிகுந்த காலங்களிலெல்லாம் நான் யார்? என் லட்சியம் என்ன? என்ற கேள்விகள் எழுகின்றன. இவை தத்துவக் கேள்விகள். அதாவது, புறப்பொருட்களில், நிகழ்ச்சிகளில், தன்னை இழந்துவிட்ட மனிதன், மீண்டும் தன்னைப் பெறுவதற்காகத் தேடும்போது, கேட்கும் கேள்விகள். இந்தியத்தத்துவம் இந்தக் கேள்வியைக் காலந்தோறும் பலமாக எழுப்பிவந்திருக்கிறது. தன்னை ஒரு மார்க்சிய வாதியாக ஒருவர் இக்காலத்தில் காண்பதும் இதன் ஒரு தொடர்ச்சிதான்.

பொருளுக்கும் மனிதனுக்கும் என்ன உறவு இருக்கிறது என்பது போன்ற கேள்வி மட்டுமல்ல இது. எத்தகைய உறவு இருக்கவேண்டும் என்பது போன்ற கேள்வியும் இது. இந்தக் கேள்விக்கான விடையிலிருந்து சமூகச் செயல்கள் பிறக்கின்றன. விடை எக்காலத்தும் active ஆக கிடைத்துவிடாது. பொருள் செய்யும் சித்திரவதைகள் மிகுந்திருக்கும் காலங்களில் Passive ஆன விடை கிடைக்கிறது. அப்போது, அந்த மனிதன் உலகம் எனக்கு வேண்டாம் எனத் துறவு மேற்கொள்கிறான். அவன் இகழத்தக்கவன் அல்ல. அவன் மேற்கொள்ளும் துறவும் ஒருவகையில் active ஆனதுதான். புத்தர் போல அவனும் வணக்கத்திற்குரியவன், ஒரு தத்துவவாதி, அவன் தத்துவவாதியாக இருக்கும் வரை, ஆக்டிவ் ஆகத்தான் இருக்கமுடியும். இருக்கும் சமுதாய நிலைகளை அவன் சாதாரணமாக ஒப்புக்கொள்ள முடியாது அவனது சிந்தனைத் தீவிரம் அந்நிலைகளுக்கு எதிராக - அந்நிலைகளைக் காப்பவர்களுக்கு எதிராகத்தான் அவனை நிறுத்தும். அநேகமாக இவன் கலகக்காரனாகவே இருக்கிறான். இவனிடம் புரட்சிக்கூறுகள் இருக்கின்றன.

நான் நானாக முயலும்போது, அது எனக்கும் மற்றவர்க்கும் பிரச்சினை ஆகிறது நான் என்னை அறவே இழந்து விட்டால் பிரச்சினையில்லை. இந்த நான் என்ற தேடல், மனிதத்தேடல். இந்தத் தேடல் இருக்கும் வரை மனிதன் விலங்காகி விட முடியாது; அடிமையாகிவிட முடியாது. தனக்குத் தானே பிரச்சினையாகப் போய்விட்டது இந்த நான். இதை என்ன செய்வது என்ற பிரச்சினை

இந்தியத்தத்துவ வரலாறு முழுதும் பெரிய பிரச்சினை. "வேதங்கள் கற்றுப் பயனில்லை. தன்னை அறிவது எப்படி" என்ற நாரதன் கேள்வி நல்ல கேள்வி.

உலகில் உள்ள இயற்கை, சமுதாயப் பிரச்சினைகள், அகியவற்றின் சார்போடு இந்த நான் இருக்கிறது. ஒரு கட்டத்தில் நானே பிரம்மம் என்றும் இந்த நான் கருதுகிறது. இதற்குப் பொருள், மனிதன் வரலாற்றில் தோன்றிய பிறகு, உலகத்தைத் தானாக, தனக்குள் சார்த்திப் பார்க்கப் பழகி விட்டான் என்பது தான். மனிதன்தான் எல்லாப் பொருட்களுக்கும் அளவு கோல் என்ற கூற்றின் உண்மையும் இது தான்.

இன்னொரு கட்டத்தில் மனிதன் இவற்றில் தான் எதனோடும் இல்லை என்று சூன்யத்தைத் தரிசிக்கிறான். அதாவது பொருளோடு பொருளில் தான் இருப்பது போலவே பொருளுக்கு அப்பாலும் தான் இயங்க முடியும் - இயங்குவதாகக் கருதிக் கொள்ள முடியும் என்பது இதன் பொருள்.

தான் இவ்வாறு இவ்விரு வகையிலும் தன்னைப் புரிந்து கொள்கிறது; படைத்துக் கொள்கிறது. இந்தியத்தத்துவ வரலாற்றில் இவ்விரு போக்குகளும் இடைவிடாது வருகின்றன. அதாவது, மனித விடுதலை, தத்துவத்தின் சாரமான கடமை, தத்துவம் மனித விடுதலைக்கு வழிகாட்ட வேண்டும். வாழ்க்கையை விவரித்தால் போதாது; விடுவிக்க வேண்டும். சிறியதிலிருந்து பெரியதற்குள் - சாதாரணத்தில் இருந்து உன்னதத்திற்குள் - தனி மனித நிலையிலிருந்து சமுதாயத்திற்குள், வரலாற்றிற்குள்-காலத்திற்குள்ளிருந்து காலமற்றதுக்குள் விடுவிக்கவேண்டும். இதற்காகத்தான் பிற ஆராய்ச்சிகள் - விஞ்ஞானம், வரலாறு. அறிவுக்கொள்கை முதலியன தேவைப்படுகின்றன. ஆய்வின் நோக்கம் ஒன்றே ஒன்று. அது, மனித விடுதலை.

மனித விடுதலையை இந்தியக் கருத்து முதல்வாதத்தத்துவங்கள் என்பவை முதன்மையாகக் கொண்டிருக்கின்றன. தொடக்கத்தில் தமக்கு இந்த நோக்கம் இல்லாமல் இருந்தாலும், பிற்காலத்தில் சாங்கியம், நியாய வைசேசிகம் ஆகியவை இந்நோக்கங்களைப் பெற்றன. இதற்காகத் தேவி பிரசாத் இவர்களை நொந்து கொள்வது, தத்துவம் யாது என அறியாததன் விளைவு. வெறும் விஞ்ஞானத்தை, அறிவுக் கொள்கையையே கண்டதன் விளைவு. விஞ்ஞானத்திற்குத் தரும் முதன்மையால்தான், அணுக் கொள்கை கூறும் நியாய வைசேசிகரை இவர் பாராட்டுகிறார். அணுக் கொள்கையிலிருந்து

தத்துவத்திற்கு வரும்போது இவர்கள் சாதனை தேய்ந்து போகிறது.

இந்தியத் தத்துவத்தில் 'what is living' என்று பார்த்தால் தேவியின் கருத்தில் சிலவே மிஞ்சுகின்றன. லோகாயத வாதிகளின் மேலுலக மறுப்பு, புரோகிதர் மறுப்பு; சாங்கியர்களின் பிரதான வாதம்; நியாயவைசேசிகர்களின் அணுக்கொள்கை; அறிவுக்கொள்கை: இவை தவிர, புத்தரின் சில கொள்கைகள்; இந்தியத்தத்துவத்தில் இன்றும் இவை உயிருள்ளவை. மற்றவை இறந்து விட்டவை.

தத்துவ வரலாறு இப்படிப் பிய்த்துப் பிரித்துச் சிதைக்கத்தக்கது அல்ல. ஒரு வகையில் ஹிரியண்ணாவின் பார்வை, இதைவிட வளமானது, இந்தியத் தத்துவ வரலாறு முழுவதும் ரியலிஸத்திற்கும், ஐடியலிஸத்திற்கும் நடைபெற்ற போராட்டம் தான் என்கிறார் ஹிரியண்ணா. அதாவது, இவை ஒன்றோடொன்று தொடர்புடையவை. ஒன்றினுள் மற்றதும் இருக்கிறது. ஒன்றில்லாவிட்டால் மற்றதும் இல்லை என்ற கருத்தில் அவர் பார்க்கிறார். ஆனால், தேவி பிரசாத் கருத்துமுதல்வாதத்தைப் புறக்கணித்துவிட்டு, பொருள்முதல்வாதப் போக்குகளையே நிலை நிறுத்த விரும்புகிறார்.

இவ்விரு போக்குகளுமே இந்தச் சமுதாயச் சூழலில் இருந்து தான் பிறக்கின்றன. இவை முயற்சி செய்யாமல் பெற்றெடுத்த, வேண்டாத குழந்தைகள் அல்ல. இவை பிறக்கும் போதே தாயைச் சித்திரவதை செய்து, சித்திரவதை செய்யப் பிறந்த குழந்தைகள். அதாவது இவை உயிரியக்கம் அற்ற தான்தோன்றிகள் - பிரதிபலிப்புகள் அல்ல. இவை உயிர்த்துடிப்புள்ள எதிர்வினைகள் தான். தவிர, முற்றாகக் கருத்துமுதல்வாதம் அல்லது பொருள்முதல்வாதம் என்று பிரித்துப் போட்டு விடுகிற மாதிரியும் இவை இல்லை.

இந்த ஆய்வு முறை - இந்தப்பிரிவினை - உண்மையைக் கண்டறிவதற்கான கருவிகள்தான். இவற்றை நாம் நெடுந்தூரம் சுமந்து திரிய முடியாது. தீவிரமான உண்மையை இந்தக் கருவிகள் தனித்தனியே காட்டுவதில்லை. புத்தரைப் பற்றி தேவி பிரசாத்தின் உடன் பாட்டு முறையிலான மதிப்பீடு இவருடைய கருவியின் தகர்வைத்தான் காட்டுகிறது. புத்தர் சமயவாதிதான். ஆனால் அவர் அரசின் தோற்றம் தனிச்சொத்தின் தோற்றத்தைப் பார்க்க முடிந்தது. ஆசை, பொறாமை, கொடுமைகள் மனிதனின் விதியாகிவிட்டதைப் பார்க்க முடிந்தது. இந்தக் கொடுமைகள் நெடுங்காலத்திற்குத் தீராது என்பதையும் அவர் பார்க்க முடிந்தது. கொடுமை தீப்பற்றி எரியும் உலகில், நீர் சூழ்ந்த சில தீவுகளை - சங்கங்களை - அவர் பார்க்க

முடிந்தது. இவ்வளவையும் தேவி பாராட்டுகிறார். சங்கம் ஏற்படுத்தியதற்காக அவரைத் தேவி இகழவில்லை. புத்தருடைய கோட்பாட்டை ஒரு palliative ஆக, மார்க்ஸ்மொழியில் opium ஆகப்பார்க்கிறார்.

மார்க்ஸ் கூறினர், "Religious distress is at the same time the expression of real distress and the protest against real distress. Religion is the sigh of the oppressed creature, the heart of a heartless world, just as it is the spirit of a spiritless situtation." மார்க்ஸின் இந்த வாசகத்தில் புத்த மதத்தை நம்மால் பார்க்கமுடியும். தேவியாலும் இப்படிப் பார்க்க முடியும் இந்தப் பார்வையோடு இந்திய தத்துவ வரலாறு முழுவதையும் பார்க்கமுடியும். பார்த்து மதிப்பிட முடியும். இவ்வாறு செய்யாதது தேவி பிரசாத்தின் குறைபாடு.

இப்படி முழுமையாகப் பார்த்தால் இந்தியத் தத்தவத்தில் உயிருள்ள அம்சங்களாக மிகப் பலவற்றைத் தேவி பிரசாத் பார்த்திருக்க முடியும்.

மனுவின் சட்டத்தொகுப்பு எத்தகைய சமுதாயத்தில், எதன் தேவைக்காக எழுந்தது என்பதைப் பார்த்திருக்க முடியும். புராதனச் சமுதாய முறை மாறி அரசுமுறைச் சமுதாயத்தைக் கொண்டு வருவதற்காகக் கௌடில்யர் வகுத்த முறைகளை, கோசாம்பியைப்போல, உடன்பாட்டொளியில் பார்த்திருக்க முடியும். அரசை நிறுவ வேண்டியதன் நியாயத்தின் முன் கடவுள் நம்பிக்கையை, மூட நம்பிக்கைகளைக் கௌடில்யர் பயன்படுத்திக் கொண்டது தவறாகத் தோன்றாது. சமுதாய வரலாறு முழுவதும், - ஏன் இன்றும் கூட் மூட நம்பிக்கைகள் பல உண்டாக்கப்பட்டுக் காப்பாற்றப்படுவதை நாம் பார்க்கமுடியும். பசுமாடுகளும் வேண்டும்: விவாதங்களும் வேண்டு - மென்ற யக்ஞ்வல்கியரின் கூற்றுச் சரியானது தான்.

"கருத்து முதல்வாதிகளுக்குத்தர்க்கம் ஒரு நெருக்கடியைக் கொண்டு வருகிறது" என்று தேவி குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது. உதாராணமாக, அத்வைதவாதிகள் புற உலகை மறுக்கும்போதே, புற உலகிலிருந்து பெற்ற அனுபவ அறிவை - தர்க்கவியல் அறிவைப் பயன்படுத்திப் புற உலகை மறுப்பது, ஒரு வகையில் விசித்திரந்தான். இவர்கள் தங்கள் விவாதமுறைக்குத் தாங்களே பலியாகினர் அல்லது தோற்றுப் போயினர் என்று பார்ப்பதைவிட, இவர்களுக்குள்ளே இயங்கும் இருவகைப் போக்குகளுக்கிடையில் இவர்கள் தவிர்க்க இயலாமல் தடுமாறினர் என்று பார்ப்பது மேலும் சரியாக இருக்கும். அதாவது, கருத்து முதல் வாதமும், பொருள் முதல் வாதமும் ஒரு

மனிதனிலேயே செயல்படும் இரு கூறுகள் தான்.

இந்தியக் கருத்து முதல்வாதிகளுக்கு இருவகை உண்மைகள் தேவைப்பட்டன என்று விமர்சனம் செய்கிறார் தேவி பிரசாத். அத்வைதிகள் வியவகாரிக சத்தியம், பரமார்த்தித சத்தியம் என்று பேசினர். சூன்யவாதிகளும் விஞ்ஞானவாதிகளும் உலகத்தை, உண்மையை இரண்டாகக் கண்டனர். உணவை உண்டு கொண்டே அதை மாயையென்று அத்வைதிகள் கூறியதை விமர்சனம் செய்கிறார் தேவி.

உலகமும் உண்மையும் இரண்டாகி விட்டது உண்மைதான். தோற்றம் ஒரு வகை, உண்மை மற்ற ஒரு வகை லட்சியம் ஒரு மாதிரி; நடைமுறை இன்னொரு மாதிரி. வர்க்கச் சமுதாயம் இன்றைய யதார்த்தம்; வர்க்கமற்ற சமுதாயம் இதற்குள்ளே ஒரு கனவு. இன்றைய யதார்த்தத்திலிருந்து கொண்டு, இதிலுள்ள சாதகமான அம்சங்களைப் பிடித்துக்கொண்டு, நாளை பற்றிக் கனவு காண்பதோ, உழைப்பதோ இங்கு நடக்கும் இரட்டை வாழ்க்கைதான். இது ஒரு மனிதவியல் பிரச்சினை. மனிதனைச் சித்திரவதை செய்யும் பிரச்சினை. காரியவாதிகள் இதை வேறு முறையில்தான் பார்ப்பார்கள். இந்தப் பிரச்சினை கருத்துமுதல்வாதிகளுக்கு இருந்தது போலவே, பொருள் முதல்வாதிகளுக்குமுண்டு. இதற்குள் சிக்கிவிட்டது தவிர்க்க இயலாதது; தேவையானது. இதற்காக கருத்து முதல்வாதிகள் இகழத்தக்கவர் அல்லர். இரண்டிலுள்ளும் ஊடுருவிப் பார்ப்பது இயக்கவியலாளனின் பணி. கருத்து முதல்வாதத்திற்குள்ளும் வரலாறு இயங்குகிறது.

அறிவைப் பெறுவதற்கான வழி வகைகளுள் பிரத்தியட்சத்தைப் போலவே அனுமானமும் தேவைப்படுகிறது. இவற்றோடு செயல் முறையின் பெருமையை நியாயவைசேசிகர், குறிப்பாக வாத்சாயனர். விளக்கியதற்காகத் தேவி பிரசாத் மிகவும் பாராட்டுகிறார். அதே சமயம் Mystic trance மூலம் உண்மையைப் பெற முடியாது என்று குமாரிலர் – மீமாம்சகர் கூறியதையும் தேவி வெகுவாகப் பாராட்டுகிறார்.

சடங்குகளையே போற்றும் மீமாம்சகர் தியானம், தவம், உள்ளுணர்வு ஆகியவற்றைப் போற்ற முடியாது என்பது தெளிவு. நியாயவைசேசிகர் தியானத்தைக் கண்டிக்காததற்காகத் தேவி பிரசாத் அவர்களை விமர்சனம் செய்கிறார். லோகாயதவாதிகள் இதனைத் துச்சமாகக் கருதியதையும் தேவி பாராட்டுகிறார்.

இது ஒரு பிரச்சினை. இந்தியத் தத்துவ வரலாற்றில் இது கடுமையான பிரச்சினை. இச்சமயம் பாணி தேஷ்பாண்டேவுக்கும்

அவரது விமர்சகர்களுக்கும் நடந்த விவாதத்தை நாம் நினைவு கூர்வோம்

உள்ளுணர்வின் ஆற்றலையும் யோக முறைகளையும் பாராட்டிய தேஷ்பாண்டே ஐன்ஸ்டின் $E = mc^2$ என்று கண்டறிந்ததையும், மார்க்ஸ் வரலாறு வர்க்கப் போராட்டம் என்று கண்டறிந்ததையும் உள்ளுணர்வு வழியில் என்று கூறினார். சோவியத் யூனியனிலும் உள்ளுணர்வின் ஆற்றல் விஞ்ஞான முறையில் நிரூபிக்கப்பட்டுள்ளதையும் அவர் சான்று காட்டினார். வெற்றறிவிலிருந்து உள்ளுணர்வு பேருண்மைகளைக் காண்பதில்லை. ஏற்கெனவே உள்ள பிரச்சினைகள் கூர்மைப்படும்போது உள்ளுணர்வு ஒரு பாய்ச்சலாகப் பேருண்மைகளைக் கண்டறிகிறது என்று கூறினார். தேவி இதனை ஏற்கவில்லை.

புத்தர் கண்ட "Dependent origination" இப்படிக் கண்டதுதான். வைசேசிகர் கண்ட அணுக்கொள்கை இத்தகையதுதான். அத்வைதிகள் இறுதி உண்மையைப் பரப்பிரம்மமாகக் கண்டதும், சூன்யவாதிகளின் சூன்யதாவும் இதுதான். இவை உலகியல் அனுபவங்களை விளக்குவதற்காக மனிதன் கண்ட மிகப் பெரிய கருதுகோள்கள். வரலாற்றில் இவை இன்றியமையாதவை. இவையில்லாமல் பெரிய பிரச்சினைகளை மனிதன் அறிந்து கொள்வதில்லை.

பொருள்களின் பன்மை வடிவங்களுக்கு இடையில் ஊடுருவியுள்ள ஒருமையைக் காண்பது தேவைப்படுகிறது. பொருள் என்று இதனைக் கூறுவது போலவே, பரப்பிரமம் என்று இதனைக் கூறியது இன்னொரு முறை. ஹேகலின் பரப்பிரமம் என்பது பொருள்தான் என்ற விமர்சனமும் உண்டு. பல கடவுள் கொள்கை என்பது பொருள் முதல் வாதத்தின் ஒரு வகை தான் என்று பிளக்கனோவ் கூறினார். கடவுள் ஆக்கத்திற்குள் பயர்பாக் (Feuerbach) மனிதனைக் கண்டது இப்படித்தான். பிரத்தியட்சம், அனுமானம் ஆகிய அளவைகளிலேயே செயல்படும் அறிவு பயனற்றது என்று சங்கரர் கூறியதை இம்முறையில் நாம் விளங்கிக் கொள்ள முடியும். உள்ளுணர்வு செயல்படும் முறையை விஞ்ஞான முறையில் விளங்கிக் கொள்ளும் பொருட்டு, சங்கரரை மறுப்பதும், விமர்சிப்பதும், புரிந்து கொள்ளத் தகுந்ததுதான்.

மோட்சம், நிர்வாணம் ஆகியவற்றையும் நாம் இந்த வகையில் விளங்கிக் கொள்ளலாம். தனிச்சொத்தின் ஆரவாரங்கள் இல்லாத நிலைமை, போட்டி, பொறாமை, பேராசை முதலிய தீக்குணங்கள் இல்லாத நிலைமை, நன்மை, தீமை என்ற வேறுபாடுகள் செய்யத் தேவையில்லாத நிலைமை - இத்தகைய இறுதி நிலை அல்லது அதை

நோக்கிச்செல்லும் பயணம் - இது முக்தி அல்லது நிர்வாணம். இது மனித விடுதலை.

புத்த மதமும் நியாய-வைசேசிகமும் கூறிய மோட்சத்தைப் பற்றிய இந்த வர்ணனை, நாம் புரிந்து கொள்ளத்தக்கது. பிற மதவாதிகளின் வர்ணனை, இதிலிருந்து வேறுபட்டதில்லை. சமயவாதிகளின் இந்த லட்சியம் சமுதாயத்தின் லட்சியம்தான். வேறு வழி இல்லாததால் இந்தச் சாதனை நெடுங்காலம் தனிமனிதர்க்கு அல்லது சிறு குழுவினர்க்கு உரியதாக இருந்தது. இதைச் சமுதாய அளவில் வைத்துச் சாதிப்பது சமய நெறிக்கு மாறானதல்ல. தேவி பிரசாத்துக்கு மோட்சம், நிர்வாணம் என்பது கசக்கிறது. சாங்கியமும், நியாயவைசேசிகமும் முக்தி என்ற இலட்சியத்தைப் பிற்காலத்தில் ஏற்றுக்கொண்டது இவருக்குப் புரியவில்லை. முன்பே கூறியது போலத் தத்துவ அறிவுக்குறைவுதான் இவரை இவ்வாறு கணிக்கச் செய்கிறது. தேவி பிரசாத்தே கூறுவது போல நியாய-வைசேசிகர் கூறும் அணுக்களின் இயக்கம் உள்ளார்ந்ததல்ல. அது புறத்திலிருந்து கொடுக்கப்படும் இயக்கம்தான். புறத்தில் ஒரு கடவுள்; அப்புறம் அதன் பிரதிபலிப்பு ஆன்மா தேவைப்பட்டு விடுகிறது.

மனிதனைப் பொருளிலிருந்து பிரிப்பது அவனுடைய ஆன்மா. இந்த ஆன்மா விடுதலையை நாடுவது இதற்கு இயல்பு. துன்பமற்ற ஓர் உலகம் இதன் தேட்டம்.

சாங்கியமும் புருஷனை - கடவுளை - ஏற்றது வியக்கத்தக்கதல்ல. உள்ளுக்குள் இது கடுமையான பிரச்சினைகளைக் கிளப்பத்தான் செய்தது. கடவுளை ஒப்புக் கொண்டவர்களில் யார்தான் கடவுளை முற்றாக நம்பி, நிம்மதியாக இருந்தார்கள்! கடவுள் கைக்கு எட்டும் நேரம் குறைவு. எட்டாத நேரமே மிகுதி. தேவார, திருவாசகங்கள் இந்த உண்மையைத் தான் சொல்கின்றன. இந்த மண்ணுலகிலிருக்கும் வரை, விண்ணுலக வடிவிலான கடவுளை அதிக நேரம் கைக்குள் வைத்திருக்க முடியாது. சமயங்கள் இந்த முரண்பாட்டுக்குள் - முரண்பாட்டோடு - கடுமையாகத் துன்புறுகின்றன. இந்த முரண்பாடு பொருள் முதல்வாதிக்குள்ளும் உண்டு. பொருள் முதல்வாதியிடம் இந்த முரண்பாடு வேறு வகையில் விளக்கம் பெறுகிறது. பொருளுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவு - பொருளுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவு, உடலுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவு செயலுக்கும் சிந்தனைக்கும் உள்ள உறவு - அதே சமயம் முரண்பாடு; இந்த நிலை தவிர்க்க இயலாதது. இதற்குள் தான், இதனோடுதான், மனிதன் இருக்கிறான், இயங்குகிறான்.

இப்படிப் பார்ப்பதுதான் இயக்கவியல்பார்வை. கருத்து முதல்வாதம் என்று கூறப்படுவதும் நமக்குத் தத்துவ மரபு தான். இதற்குள்ளும்தான் நாம் இருந்து வளர்ந்து வந்திருக்கிறோம். இந்தப் பார்வையில், இந்தியத் தத்துவத்தில் "what is living?" என்பது ஏராளம். "what is dead?" என்பது மிகக் குறைவு. இந்தியத் தத்துவ மரபுதான் நாம் தொடர்ந்து இயங்குவதற்கான ஆற்றல் மிக்க களம். இந்த மரபு சாகாது.

– **வைகை** – நவம்பர் 78

(பேராசிரியர் தேவி பிரசாத் அவர்களின் "What is living and what is dead in Indian Philosophy" என்ற நூலின் திறனாய்வு இந்தக் கட்டுரை.)

# VI. பிற்சேர்க்கை

# ஞானியுடன் நேர்காணல்

சூத்திரதாரி, சிபிச்செல்வன், கோவிந்தராஜ்.

**● முதலில் உங்கள் இளமைக் காலம், குடும்பம் மற்றும் கல்வி குறித்து . . .**

நான் 1935-இல் பல்லடம் தாலூகா சோமனூரில் பிறந்தேன். என்னுடைய மூன்றாவது வயதில் எங்கள் குடும்பம் அவிநாசி தாலூகா சுள்ளிப் பாளையத்திற்கு - சாவக்கட்டுப்பாளையத்திற்கு அருகில் - குடிபெயர்ந்தது. எங்க அப்பாவுக்குத் தானிய வியாபாரம். ஐந்தாம் வகுப்பு வரை சாவக்கட்டுப்பாளையத்துல படித்தேன். என்னுடைய ஆசிரியர் ரங்கசாமி நாயுடு அப்போது ஆனந்தவிகடனில் வந்து கொண்டிருந்த சித்திர ராமாயணத் தொடரையெல்லாம் கற்றுக் கொடுத்திருக்கிறார். பிறகு குமரேச சதகம் போன்றவற்றை அவரே வீட்டில் கற்றுக் கொடுத்தார். பிறகு கருமத்தம்பட்டி ஆர்.சி. பள்ளியில் படித்தேன். தலைமை ஆசிரியர் நஞ்சுண்டேஸ்வரனின் தூண்டுதலும் கற்பித்தலுமே எனது திறமையை நான் உணரக் காரணமாயின. அதன்பிறகு கோவையில் மைக்கேல் பள்ளியில் படிப்பைத் தொடர்ந்தேன். அங்கே புலவர் சுந்தரராசனாரின் தமிழ்ப் பற்று என்னைப் பெரிதாய்க் கவர்ந்தது.

எனது கல்லூரி வாழ்க்கையைப் பொறுத்தவரை, கோவை அரசு கலைக் கல்லூரியில் பேராசிரியர்கள் பா.சு. மணியம், உருத்திரமணி, கொண்டல் சு. மகாதேவன், பொன்னப்பன் இவர்கள் அனைவரும் தமிழ் உணர்வையும், தமிழ்ப் பற்றையும், தமிழ்க் கல்வியையும் சிறப்பான முறையில் மனதில் பதித்தார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் B.O.L. படித்தபோது லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், அருணாசலம் பிள்ளை, முத்துசாமிப்பிள்ளை, முத்து சண்முகம், சோமசுந்தரம்பிள்ளை ஆகிய பேராசிரியர்கள் தமிழ் இலக்கணம், இலக்கியம் முதலியவற்றில் மிக ஊறித் தமிழின் ஆக்கத்தினுடைய உருவமாகத் திகழ்ந்தவர்கள். இது மாதிரியான தொடர்ச்சியான சூழல் காரணமாகத் தமிழ் இலக்கியம், தமிழ்ப் பற்று ஆகியவை எனக்குள் வேரூன்றின. அந்தக் காலத்தின் தமிழ்ச் சூழலையும் இன்னொரு காரணமாகச் சொல்லலாம். தமிழ் ஏறுமுகமாக இருந்த காலமது. அண்ணாத்துரை, கருணாநிதி போன்றவர்கள் தமிழை முதன்மைப்படுத்தினார்கள். இவை எல்லாவற்றின் ஒட்டு மொத்தமான விளைவுகளில் எத்தனையோ பேர்களில் நானும் ஒருவன்.

● மதம் பற்றிய உங்களின் கருத்துக்களையும், அனுபவங்களையும் சொல்லுங்கள்.

சின்ன வயதிலேயே எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. சுள்ளிப்பாளையத்திலேயே நாங்கள் நண்பர்களெல்லாம் சேர்ந்து ஊருக்கு வெளியே ஒரு சின்னக் கோயில் கட்டி பூஜையெல்லாம் செய்து கொண்டிருந்தோம். நாங்களே ஒரு சின்னத் திருவிழா நடத்தினபோது, அவிநாசி என்கிற நண்பருக்குச் சாமி வந்தபோது, எனக்கு ஏன் சாமி வர்லேன்னு ரொம்பநாள் ஒரு கேள்வியிருந்தது.

பிறகு இரண்டாம் உலகப் போர் சமயத்தில் குடும்பம் பயங்கர வறுமையில் இருந்தது. ரேஷன் கடைகள் வந்தன. எல்லோரும் கத்தாழையைச் சாப்பிட்டபோது நாங்களும் சாப்பிட்டோம். எங்கள் அப்பா ரேஷன் கடையிலிருந்தபோதும் கூட எல்லோருக்கும் கிடைக்கிற புழுத்த மக்காச் சோளத்தைத் தவிர வீட்டில் வேறு உணவு கிடையாது. வீட்டில் குழந்தைகளும் அதிகம். கடவுளைக் காண வேண்டும் - கண்டால் என்னுடைய பிரச்சினைகள் தீர்ந்துவிடும் என்கிற நம்பிக்கை எனக்கு மிக அதிகமாக இருந்தது. அப்போது தாகூரை ரொம்ப விரும்பிப் படித்துக் கொண்டிருந்தேன். சமய நூல்களில் சடங்கு முதலியவற்றை வற்புறுத்தக்கூடிய புராணங்களில் எனக்கு ஆர்வம் கிடையாது. திருவாசகம் போன்றவற்றோடு சரி. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்தபோது அரவிந்தர், விவேகானந்தர் நூல்களையெல்லாம் விரிவாகப் படித்தேன். அப்பொழுது தான் தியானத்தில் ஈடுபட்டேன். தனியறையில் காலை நேரத்தில் அரைமணி நேர தியானமென்று தொடங்கி நாளடைவில் மிக வித்தியாசமான அனுபவங்களை அடைந்தேன். தியானத்திலிருக்கும் போது கண்ணுக்குள் ஒரு நீலநிற ஆகாயம். அதன் மத்தியில் நீலநிறம் விலகி மையத்தில் ஒரு மேகம். சிறிது நேரம் அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, மேகம் விலகிக் கண்ணைக் கூசச் செய்கிற மாதிரி சூரியன். தாகூர் விவேகானந்தர் மூலமாக உள்வாங்கிக் கொண்டிருந்த அத்வைத உணர்வுகளை அனுபவித்தேன் தியானத்திலிருக்கும் போது, திடீர்னு மேலே உச்சந்தலையிலிருந்து குளிர்ந்த நீர் அப்படியே மெல்லக் கீழிறங்கும். உடம்பெல்லாம் அது வரும். அதனுடைய ஆனந்தமும், பரவசமும் அளவில்லாதது. அப்போது என்னை நானே கடவுளென்று உணர்ந்து கொள்வேன். ஒரு நான்கைந்து மாதம் கழித்து, ஒரு கட்டத்தில் வேறு மாதிரி அனுபவங்கள் ஏற்பட்டன. விடுதியில் சாப்பிட்டு விட்டு வெளியே வருகிறேன். நான்கைந்து நாய்கள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. அவற்றை நான் உற்றுப் பார்க்கிறபோது நாய்களோடு நான் இருக்கிறேன். ஒரு முறை ரயிலில் பயணம் செய்யும்போது எனக்கெதிரே ஒரு அம்மா குழந்தைக்கு

பாலூட்டிக் கொண்டிருக்கிறாள். ஒரு நிமிடம் உற்றுப் பார்த்தால் நான் குழந்தையாகி விடுகிறேன். ஒரு முறை B.O.L. படித்து என்ன செய்யப்போகிறோம் என வெறுத்து ஊருக்கு வந்த போதுதான் எனக்குக் காசநோய் இருப்பது தெரிந்தது. பெருந்துறையில் எட்டு மாதம் இருந்தேன். இதற்கிடையில் மார்க்சியம் உட்பட எல்லா நூல்களையும் நான் படித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய அடிப்படையான உணர்வு மார்க்சியத்தை எப்படியாவது மறுத்துவிட வேண்டும் என்பதற்காகவே இருந்தது. பெருந்துறையில்எல்லாவற்றையும் விரிவாக யோசிக்க முடிந்தது. அப்போது அமெரிக்க உளவியலாளர் வில்லியம் ஜேம்ஸ் எழுதின "The Varieties of Religious experience" என்கிற புத்தகத்தில் படித்த பல விஷயங்கள் நினைவிலிருந்தன. "சின்ன வயதில் நமக்குள் நம் பெற்றோர்களும் மற்றவர்களும் சிலவற்றைத் திணிக்கிறார்கள். கடவுள், வடிவங்கள், கடவுள் பற்றிய கதைகள் என்று ... பின்னாளில் தியானம் போன்றவற்றின்போது அவற்றை நாம் கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் அனுபவிக்கிறோம். realise செய்கிறோம். எனவே கடவுளைப் பார்ப்பது பேசுபவதென்ப தெல்லாம் சின்ன வயதில் நமக்குள் திணிக்கப்பட்ட உணர்வுகள்தான்" என்று வில்லியம் ஜேம்ஸ் சொன்னது சரியென்று உணர்ந்தேன்.

- **இதிலிருந்து நீங்கள் மார்க்சியத்துக்கு எவ்வாறு வந்தீர்கள்?**

இடைக்காலத்தில் பெரியாருடைய பல கூட்டங்களை நான் கேட்டிருக்கிறேன். பெரியாருடைய பாதிப்பு என்னளவில் பொருள்தான் உலகம் ... நாத்திக வாதமென்பது ஒரு வகைப் பொருள் முதல்வாதப் போக்கிற்கு என்னைத் தள்ளியது. ஆனால் என்னுடைய எல்லா அனுபவங்களுக்கும் அது போதுமானதாயிருக்கவில்லை. அப்பொழுது தீர்வாக மார்க்சியம்தான் வருகிறது. அத்வைதத்தில் தீவிரமான அனுபவங்களைப் பெறக் கூடிய சமயத்தில் அதிலிருந்து நீங்கள் வெளியேறியாக வேண்டும். உள்ளே தங்க முடியாது. உள்ளேயே தங்கினால் நீங்கள் தீர்ந்தீர்கள். என்னுடைய அனுபவங்களே அதற்கு ஆதாரமாகியிருக்கிறது. அத்வைதத்திலிருந்து வெளியே வரும்போது பெரியார் வழியாக நான் மார்க்சியத்திற்கு வந்து சேர்கிறேன். வரலாறு முதலிய புரிதலின் காரணமாக நான் பெரியாருக்குள்ளேயும் தங்க முடியாமல் மார்க்சியத்திற்கு வருகிறேன். 1960-க்கு பிறகு கலை இலக்கியப் பெருமன்றம். பிறகு 1965-இல் தான் எனக்கு எஸ்.என். நாகராசன் அறிமுகமாகிறார். அவருடைய மார்க்சியம் மிக வித்தியாசமான மார்க்சியம். அதற்கு முன்பே ஜீவா வழியாக குருசேவுடைய மார்க்சியத்தில் எனக்கு உடன்பாடு இருந்தாலும், நாகராசன் வந்த பிறகே பெரும் தெளிவு ஏற்பட்டது. மாவோ வரிசைக்கு வந்து சேர்ந்தேன். 1967, 1968 -இல் தமிழ்நாட்டில் எம்.எல்.

கட்சி தோன்றியபோது நண்பர்களுடன் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக "புதிய தலைமுறை" பத்திரிகை தொடங்கப்பட்டது. அதில் எஸ்.வி. ராஜதுரை, எஸ்.என். நாகராசன், ஆதி பிறகு நான், வெங்கட்ராமன், நஞ்சப்பன் ஆகியோர் இந்தப் பத்திரிகையை நடத்தினோம். சமய உணர்வுகளின் சாரமான சமதர்மம் என்பதைச் சரியாக அர்த்தப்படுத்தினால் அத்வைத உணர்வு என்பது பொருளியல் சமூகச் சூழலில் சோஷலிஸம்தான். அத்வைதத்திற்குள் நுழைந்த யாரும் வெளியேறி சோஷலிஸத்துக்கு வந்தேயாக வேண்டும். விவேகானந்தர், பாரதி எல்லோரும் அப்படித்தான் வந்தார்கள்.

**• இலக்கியத்துறைக்கு, குறிப்பாகத் திறனாய்வுத் துறைக்கு நீங்கள் வந்தது பற்றிச் சொல்லுங்கள் . . .**

"புதிய தலைமுறை" பத்திரிகையில் நான் எழுதின கட்டுரைகள் பெரும்பகுதி விமரிசனக் கட்டுரைகள்தான். திறனாய்வுத் துறையில்தான் ஈடுபாடும் இருந்தது. இதற்குக் காரணம் எனது வாழ்க்கைச் சூழல். வாழ்க்கை எனக்கு எப்போதும் சிக்கலாகவே இருந்தது. இந்தச் சிக்கலுக்கான காரணத்தைத் தெரிந்து அதைத் தீர்ப்பது குறித்தே என் கவனமிருந்தது. ஒவ்வொரு நாளும் வாழ்க்கை அர்த்தமற்றதாகி விடுகிறது. திரும்பத் திரும்ப அதனை நாம் அர்த்தப்படுத்த வேண்டியதாகிறது. இதனால் இயல்பாகவே என்னுடைய கவனம் வரலாறு, தத்துவம், இலக்கிய விமரிசனம் போன்றவற்றில் குவிந்தது. 1955 -இலேயே சி.சு. செல்லப்பாவின் தொடர்பு எனக்கிருந்தது. புதுக் கவிதைப் போக்கை நான் வானம்பாடிகளில் யாரைக் காட்டிலும் முன்கூட்டியே ஏற்றுக் கொண்டேன். அதன் பிறகு வானம்பாடிச் சூழலில் விரிவான முறையில் கவிதை பற்றிய விமரிசனங்களில் நான் ஈடுபட்டேன்.

மார்க்சிய ஆய்வைப் பொறுத்தவரையில், ரஷ்ய அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட மார்க்சியம் போதாது, மேற்கத்திய நாடுகளில் நடைபெற்ற மார்க்சிய ஆய்வுகளையும் மாவோவின் மார்க்சியத்தையும் இயன்ற அளவிலாவது தமிழில் கொண்டு வரவேண்டுமென்கிற முயற்சியில் எஸ்.என். நாகராசன், எஸ்.வி. ராஜதுரை ஆகியோரின் ஒத்துழைப்போடு "பரிமாணம்" என்கிற பத்திரிகையை நான் பொறுப்பேற்று நடத்தினேன். அல்தூஸர் தொடங்கி பல கட்டுரைகள் அதில் வெளிவந்தன. "பரிமாணம்" அனுபவங்கள் எனக்குத் திருப்தி தருபவை.

அதன்பிறகு பெங்களூர் நண்பர்களோடு இணைந்து "இலக்கு" பத்திரிகையின் மூலமாகச் சில கடமைகளைச் செய்தேன். பிறகு

"நிகழ்" பத்திரிகையைத் தொடங்கினேன். தமிழ்நாட்டின் சிற்றிதழ் சூழல் என்பதை "கசடதபற"வில் தொடங்கி நாம் கவனித்து வருகிறோம் அந்தச் சூழலில் இயங்கக் கூடிய பல பேர்களில் நானும் ஒருவனாக மாறி இயங்கிக் கொண்டிருக்கிறேன்.

**● தமிழக இலக்கியச் சூழலில் ஒரு பெரும் சக்தியாய் வெடித்த வானம்பாடிகள், அவசர நிலைக்குப் பின் சரிவையும் பின்வாங்கலையும் சந்தித்தனர். இதன் பின்னணியையும், காரணங்களையும் பற்றிச் சொல்லுங்கள்.**

வானம்பாடிகளின் சரிவு என்பது 1972-73 -இல் தொடங்கியது. முதலில் வானம்பாடிகளின் சாதனை என்று பார்த்தால் முக்கியமானது சமூக விமரிசனங்களை மார்க்சியம் பற்றிய புரிதலோடு ஒரு புதுக் கவிதை வடிவத்துக்குள்ளே கொண்டுவந்தது எனலாம். வானம்பாடிகளின் தோற்றம், தமிழ் இலக்கியச் சூழலின் தவிர்க்க முடியாத ஒரு கட்டத்தில் நிகழ்ந்தவொரு குறிப்பிடத்தக்க தோற்றம் என்பதில் சந்தேகமில்லை. வானம்பாடிகள் காலத்தில் நக்ஸலைட் இயக்கம் மிகத் தீவிரமாக இந்தியாவைக் கலக்கிக் கொண்டிருந்தது. வானம்பாடி நண்பர்களில் பலர் இந்த உணர்வுகளை உள்வாங்கிக் கொண்டவர்களாகவே இருந்தார்கள். மா.லெ. இயக்கம் தமிழகத்தில் பல்வேறு அலைகளை எழுப்பிக் கொண்டிருந்தது. நாளுக்கு நாள் இந்த மார்க்சியத்துக்குள் மாவோ நெறியில் உள்ளே செல்வதென்பது குடும்பச் சூழல்களிலும், வெளிச் சூழல்களிலும் நண்பர்களுக்குச் சில பிரச்சினைகளை ஏற்படுத்தியது. போலீஸ் விசாரணைகள் போன்றவை. அப்பொழுது தான் தொடர்ந்து முன்னுக்குச் செல்ல முடியாது பின்வாங்கத் தொடங்கினார்கள். மா.லெ. கோட்பாடு தேவையில்லை - நாம் மிகத் தீவிரமாகப் போகக் கூடாது என்ற நிலைபாடு ஏற்பட்டது. இந்நிலையில் கலை-இலக்கியப் பெருமன்றத்தில் நண்பர்கள் பலரும் இணைந்தார்கள். அதற்குப் பெரிய அளவு மேடையும் இருந்தது. வானொலியின் ஆதரவு இருந்தது. பின்பு அவசரநிலை பிரகடனமான போது, "இந்திராதான் இந்தியா - இந்தியாதான் இந்திரா" கோஷங்களை நண்பர்கள் எழுப்பினார்கள். அதேபோல், மார்க்சிய கட்சித் தலைவர்கள் எம்மாதிரியிருக்கிறார்கள் - எவ்வளவு தூரம் மார்க்சியத்தை உள்வாங்கிக் கொண்டவர்களாக இருக்கிறார்கள், போராட்டங்களில் எவ்வளவு தூரம் உண்மையாய் இருக்கிறார்கள் போன்ற விஷயத்தைப் பார்க்க இவர்கள் மறுத்தார்கள். காமம், தனியுடைமைப் பற்று, குடும்பப் பற்று போன்ற உணர்வுகள் தங்களுக்குள்ளும் இருப்பதை உணர மறுக்கிறார்கள். கவிதை வழியாய் அறிவுரை சொல்வது, மேடைகளைப் பயன்படுத்துவது, தோரணைகளை அனுபவிப்பது என்கிற பாணியில் தீவிரமாகப் போகிறார்கள். தொடக்கத்தில் காதல் பற்றிக் கவிதை

எழுதவேண்டாமென்றவர்கள், பின்பு காதல் பற்றிக் கவிதையெழுது கிறார்கள். பட்டிமன்றப் பாணியில் கவியரங்குகள் நடத்துகிறார்கள். மேத்தா இதில் குறிப்பிடத்தக்கவர். இந்தத் தற்பெருமை, தங்களைப் பற்றிய தேடலை ஒதுக்கிய நிலை, தங்களின் பீடங்களை விட்டு இறங்க முடியாமை இவையெல்லாம்தான் முதன்மையான காரணங்கள் என்றாலும், அடிப்படையில் அவை தனிநபர் காரணங்களல்ல. தத்துவரீதியாய் ஆய்வுக்குரிய காரணங்கள்தான். வானம்பாடியின் சரிவிற்குப் பின் பலர் அந்தப் பாணியில் கவிதையெழுதத் தொடங்கினார்கள். தொடர்ந்து வானம்பாடி உணர்வுகளைத் தக்கவைத்துக் கொண்டு, இன்றும் சில வானம்பாடிகள் இயங்கி வருகிறார்கள் - கவிதைத் துறையில் புவியரசு, சிற்பி போன்றவர்களும், இலக்கியத் திறனாய்வில் நானும், தத்துவம், அறிவியல் சார்ந்ததில் ஜீவஒளியும் அதே உணர்வுடன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

**● மார்க்சிய நோக்கில் தத்துவம் குறித்த உங்களின் பார்வை எந்த விதத்தில் மாறுபட்டதாயிருக்கிறது?**

எஸ்.என். நாகராசனின் தொடர்பு காரணமாக மார்க்சியத்தைப் பற்றிய விரிவான ஆழமான புரிதல் எனக்குள் ஏற்பட்டது. தொடக்கத்திலேயே மாவோவின் மார்க்சியத்தில் எனக்கு ஈடுபாடு இருந்தது. ஸ்டாலினியம் பற்றி "புதிய தலைமுறை" காலத்திலேயே தீவிரமான விமரிசனம் இருந்தது. ஸ்டாலினியம் என்கிற மாபெரும் சிக்கலைக் குறித்து "பரிமாணம்" தனி இதழ் முழுக்க விரிவாய் விவாதித்திருக்கிறோம். மார்க்சியத்திலிருந்து "அந்நியமாதல்" என்கிற கோட்பாட்டை எடுத்தால்தான் அந்தத் தத்துவம் என்கிற விஷயத்துக்குள் நம்மால் போக முடியும். 1844-இல் மார்க்ஸ் எழுதின "பொருளாதாரத் தத்துவக் கையெழுத்துப் படிகள்"-இல் அந்நியமாதல் குறித்து விரிவாகச் சொல்லியிருக்கிறார். மார்க்ஸை இளைய மார்க்ஸ், முதிய மார்க்ஸ் என்று பிரிப்பதில் ஏதும் பிரயோஜனமில்லை. அந்த அடிப்படையில் தொடங்கினால்தான் வாழ்வின் அர்த்தம் குறித்த தேடலுக்குள் நாம் போக முடியும். வாழ்வின் அர்த்தம் குறித்த தேடலை இருத்தலியல் என்று சொல்கிறார்கள். அது அப்படி இல்லை. நானும், எஸ்.வி. ராஜதுரையும் இருத்தலியல் குறித்துப் பல நூல்களைப் படித்து விவாதித்த பின்னரே எஸ்.வி. ராஜதுரை "எக்ஸிஸ்டென்ஷியலிஸம்" புத்தகத்தை எழுதினார். இருத்தலுக்கான தேடல் மார்க்சியத்தோடு சம்பந்தப்பட்டது என்பதை அந்நூலில் மார்க்ஸின் பல மேற்கோள்களோடு பல ஆதாரங்களோடு எழுதியிருக்கிறார். அந்நியமாதல் தவிரப் பிற பிரதேசங்களுக்கு நான் போகவில்லை என்று குற்றம் சாட்டுகிறார்கள். அது தவறு. வரலாறு, அதன் அடிப்படையில் தத்துவப் பார்வை, வாழ்வைப் பற்றிய விரிவானப்

பார்வை இவையெல்லாம் மார்க்சியத்திற்கு மிக அவசியமான பகுதி. அந்நியச்சூழலில் வரலாறு பற்றி மார்க்சியவாதிகள் போதிய அளவில் ஆய்வு செய்யவில்லை. தமிழ்த் தேசியம் பற்றி மார்க்சியர்களுக்கு உடன்பாடில்லை.

மார்க்சியத்தை நாம் ரஷ்ய-சீன எல்லைகளுக்குள் நிறுத்தி விடாமல், மேற்கில் நடைபெற்ற மார்க்சிய ஆய்வுகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். மார்க்சிய கட்சிகள், தமது ஊழியர்களுக்குக் குறுக்கப்பட்ட மார்க்சியத்தைத்தான் கற்றுக் கொடுக்கின்றன. சூழலுக்கேற்ப மார்க்சியத்தை வளர்ப்பதற்குப் பதிலாக கட்சி, தேவைக்கேற்ப மார்க்சியத்தை ஊழியர்களுக்குள் திணிக்கிறது. இதிலெல்லாம் எங்களுக்கு உடன்பாடில்லை. மா.லெ. இயக்க அரசியல் அனுபவங்கள் மனதிற்கு உவப்பானதாயில்லை. எஸ்.என். நாகராசன் சொல்கிற மாதிரி சோவியத் யூனியன் தகர்வுக்குப் பின் எனது மார்க்சியப் பார்வை ஆழம் பெற்றுள்ளது. இன்றைய உலகச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு மார்க்சியத்தை விரிந்த அளவில் உருவாக்கிக் கொள்ளவேண்டும்.

**● சோவியத் யூனியன் தகர்வுக்கான காரணங்கள் என்று எவற்றைச் சொல்ல முடியும்?**

சோவியத் யூனியனின் தகர்விற்கு முன்பே கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் தகர்வுகள் தொடங்கி, பின் சோவியத் யூனியனுக்குள்ளும் போய், உலக அளவில் மார்க்சிய கட்சிகளைப் பாதிக்கிற தகர்வுகளாய் மாறியிருக்கின்றன. சோவியத் யூனியன் தகர்வை நாம் கவனத்தோடு பார்க்க வேண்டும். ஸ்டாலின் காலத்தில் ஏகாதிபத்தியத்தை எதிர்கொள்கிற நோக்கோடு பல காரியங்களை ஸ்டாலினும் கட்சியும் செய்கின்றனர். பெரிய அளவில் கனரகத் தொழில்துறையை வளர்த்தெடுக்க மூலதனத்தை உள்நாட்டிலிருந்தே திரட்டும் பொருட்டுக் கூட்டுறவுப் பண்ணைகளை ஏற்படுத்துகிறார்கள். தொழிலாளர்களுக்குத் தொழிற்சங்க உரிமைகள் மறுக்கப்படுகின்றன. மேற்கத்திய தொழில் நுட்பங்களைத் தீவிரமான அளவில் பெருக்கினார்கள். விவசாயிகளைப் பயங்கரமாகச் சுரண்டினார்கள். இந்தச் சுரண்டல் போதாமல் போனபோதுதான் "உழைப்பாளர் முகாம்கள்" ஏற்படுத்தப்பட்டன. ராணுவம் பலப்படுத்தப்பட்டது. பெருநகரங்கள், அறிவியல் ஆராய்ச்சிகள் இவையெல்லாம் ஏற்படுகின்றன. மேற்கத்திய உலக வசதிகளை ரஷ்யாவிலும் ஏற்படுத்துகிற போக்குத் தொடங்கியது. கனரகத் தொழிலின் அடிப்படையில் ஒரு பெரும் நாகரிகத்தை உற்பத்தி செய்வதென்பதைச் சோஷலிசம் என்று சொல்லிக் கொண்டார்கள்.

விஞ்ஞானத்தைத் தொழில்நுட்பமென்பது அசுர சக்தி. யார் கையிலிருந்தாலும் அதை மனித முகத்தோடு மாற்றியமைக்க முடியாது. விஞ்ஞான, தொழில்நுட்பம் வழியாகப் பெரும் அணைக்கட்டுகள் கனரகத் தொழில்கள் அணுமின் நிலையங்கள் இதையெல்லாம் வளர்த்தால்தான் சமூகத்தில் உற்பத்தியைப் பெருக்க முடியும் என்பது அசுரத்தனத்திற்குத் தீனி போடுவதுதான். மார்க்சியம் என்ற பெயரில் முதலாளித்துவம் புகுந்து ஆக்கிரமிக்கிற போக்கு சர்வதேச அளவில் எல்லாக் கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளும் உள்ளது. இதுவே இன்று மார்க்சியத்தைப் பலவீனப்படுத்தி, ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்க முடியாமல் செய்துள்ளது.

மார்க்ஸ், ஏங்கல்ஸிற்கும் இது பற்றிய புரிதல் இருந்திருக்கிறது என்றே சொல்லவேண்டும். மேலும் தொடக்கத்திலிருந்து சோவியத் அரசியல் சட்டத்தில் சுய நிர்ணய உரிமையென்பது இருந்து வருகிறது. இதுவும் சோவியத் யூனியன் உடையக் காரணம். ஸ்டாலின் காலத்திலேயே பிரிவதற்கான முயற்சிகள் ஏற்பட்டு ஸ்டாலினால் ஒடுக்கப்பட்டது.

**● பாசிச எதிர்ப்புணர்வின் மூலம் தமிழகத்தில் பரவலாய் அறியப்பட்ட மார்க்ஸ் லெனினிய குழுக்கள், கடந்த சில வருடங்களாகப் பார்ப்பனிய எதிர்ப்பையும் தனித்தமிழ் ஆதரவையும் போற்றி வருகின்றன. பாசிசத்திற்கான முரண்பாடுகளையே பார்ப்பனியத்திற்கான முரண்பாடாகவும் சுட்டப்படுகிறது. இரண்டும் ஒன்றாகிவிட முடியுமா?**

தமிழகத்தில் பார்ப்பனிய எதிர்ப்பென்பது பெரியார் அம்பேத்கார் சார்ந்தவர்களாலும் மட்டுமன்றி மா.லெ. குழுவினராலும் இப்போது தீவிரப்பட்டுக் கொண்டிருக்கிறது. பாசிச உணர்வோடுதான் பார்ப்பன எதிர்ப்பையும் கிளப்புகிறார்கள். பார்ப்பனியம் என்பதைப் பொறுத்து எனக்கு நிச்சயமாக வேறுபட்ட பார்வை உண்டு. அண்மைக் காலத்திய சமூகச் சூழலில் பார்ப்பனியத்தின் பங்கு முக்கியமாகப்படுகிறது. ஆங்கிலேயர்கள் வந்த போது சமஸ்கிருதத்தில் தேர்ச்சி பெற்ற சமூகம் ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்று அரசு அதிகார நிறுவனங்களில் விரிவான அளவில் இடம்பெற்றது என்பது உண்மை. இன்றைய புதிய காலனியச் சூழல் மறுபடியும் அவர்களுக்கு வாய்ப்பைக் கொடுத்திருக்கிறது. தொழிற்சாலை நிர்வாக முறைகளில் பார்ப்பனியரின் ஆதிக்கம் இருந்தே தீரும். மேலும் பார்ப்பனரல்லாத மாணவர்கள் I.A.S./I.P.S. இல் தேர்ச்சி பெற்று அதிகாரத்திற்கு வந்தாலும் - இன்றைய கல்வி முறை, நிர்வாக முறை காரணமாக - திரும்பவும் முதலாளியத்துக்குச் சேவை செய்யக் கூடியவர்களாகவே இருப்பார்கள். இட ஒதுக்கீட்டின் மூலமாக அரசுப் பீடங்களுக்குப் போகிறவர்கள் பார்ப்பனர்கள்

செய்வதையே இவர்களும் செய்வார்கள். சுரண்டலும் ஒடுக்குமுறைகளும் அதிகரிக்குமேயொழிய குறையாது. உயர் பீடங்களில் பார்ப்பனியர்கள் இருந்தாலென்ன? வேறு ஜாதிகள் இருந்தாலென்ன? இத்தகைய சூழலில் பார்ப்பனர் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்று பேசிப் பயனில்லை. பார்ப்பனியத்தினுடைய மூல சக்திகள் முதலாளியமும் அரசு அதிகாரமுமே. பார்ப்பனியம் இவற்றிற்கு துணையிருக்கிற கருத்தியல் மட்டுமே. வெறும் பார்ப்பனியம் என்கிற "வாழாவெட்டித் தத்துவம்" பயன் தராது. பாசிசம் என்ற ஒரு போக்கிரியுடன் போராடத் தொடங்கி நாமும் போக்கிரியாக மாறிவிடக் கூடாது. முதலாளியத்தோடு போராடும் போது கம்யூனிஸ்ட் முதலாளியாக மாறிவிடக் கூடாது. மாறிவிடுகிறார்கள். பார்ப்பனியத்தோடு போராடும் போது நாமும் பார்ப்பனர்களாக மாறிவிடக் கூடாது. எனவே பார்ப்பனியத்தை ஒற்றை முனையில் சுருக்குவது நமக்குப் பயன் தராது.

**● தனித் தமிழ் பேசுவது எழுதுவது என்பது மட்டுமே தமிழை-தமிழனை மீட்டெடுப்பதற்கான ஊடகங்களாக முடியுமா?**

தனித்தமிழ் என்பது ஒரு இயக்கம். பொதுத் தமிழ், மக்கள் தமிழ் ஆரோக்கியமாக இருக்க வேண்டுமென்றால் - ஆங்கிலத்தின் பாதிப்பிலிருந்து தமிழை விடுவிக்க வேண்டுமென்றால் தனித்தமிழ் என்பது இருக்கவேண்டும். தனித்தமிழ் என்பது தீவிரமாக இருக்கும் போதுதான் பொதுத் தமிழில் நல்ல சொற்கள் வந்து சேரும். "பல்கலைக்கழகம், பேருந்து, சொற்பொழிவு" போன்ற சொற்கள் தனித்தமிழ் மூலம் பெற்றதுதான். இதிலிருந்துதான் நிர்வாகத்தில் ஆட்சி மொழி, பயிற்றுமொழி போன்ற வடிவங்களுக்குப் போக முடியும். சுயநிதிக் கல்லூரி, சுயநிதிப் பல்கலைக் கழகங்கள் என்ற முறையில் முதலாளிகளிடம் கல்வி ஒப்படைக்கப்படும் போது ஆங்கிலத்திற்கே அவர்கள் முன்னுரிமை தருவார்கள். இரண்டாமிடம் இந்தி மொழிக்கு! மூன்றாமிடம் கூடத் தமிழுக்கு இல்லை.

இன்றைய நவீன காலனியாதிக்கச் சூழலில், அந்நியச் சக்திகளுக்கு இடமளிக்கிற நம்முடைய முட்டாள்களாகவும் அயோக்கியர்களாகவும் இருக்கிற முதலாளிகளுக்கு சமீர் அமீன் சொன்னது போல இந்தப் பொறுக்கி முதலாளிகளுக்கு (லும்பன் பூர்ஷ்வா) எதிராக மக்களைத் திரட்டி நாம் ஏதாவது செய்யவேண்டும். தனித்தமிழ் அத்தகையதொரு இயக்கமாகிடும்போது தமிழ் வளர்ச்சியென்பது தமிழ் நிலத்தைக் காப்பது, தமிழ் இயற்கையைக் காப்பாற்றுவதென்பதாகும். இந்தச் சூழலில் தமிழ் உணர்வு என்பது என்ன? தமிழ்ப் பேராசிரியர்கள் மொழிப் பற்று இல்லாதவர்கள். பாரதிதாசன் மொழிப்பற்றை அழகாக

அர்த்தப்படுத்தினார். தமிழ் என்று சொன்னால் அகம், புறம், நாடு, அன்பு, வீரம், பெண்கள், கலை, இயற்கை என்றார். இத்தகைய தமிழ் உணர்வின் மூலமே தமிழ் விடுதலை சாத்தியம். இதைவிட்டுக் குறுகிய தளத்தில் சனிக்கிழமையைக் காரிக் கிழமையென மாற்றுவது என்பது போலித் தமிழ் என்பதாகிவிடும்.

தமிழ் இலக்கியம் பார்ப்பனியக் கறைபட்ட இலக்கியமென்று சொல்கிறார்கள். தமிழ் உணர்வென்பது சமூகத்தில் மிக பிற்படுத்தப்பட்ட வர்களுக்கு மிக நெருக்கமானது. தமிழ் உணர்வு என்று வரும்போது தமிழன் யார் என்ற கேள்வியும் குறுக்கே வரும். உழைப்பாளிகள், தொழிலாளிகள், உழவர்கள், கைவினைஞர்கள், பெண்கள், தலித் மக்கள் இவர்கள்தான் அசலான தமிழர்கள். இவர்களுக்குத் தமிழ் தவிர வேறு கதி கிடையாது. தெலுங்கு பேசுவதால் அருந்ததியர்கள் தமிழர்கள் அல்ல என்று சொல்வதில் அர்த்தமில்லை.

● **தமிழ்ச் சூழலில் பெரியாரியத்தின் தேவை இருக்கிறதா?**

பெரியாரியத்தில் சாதி எதிர்ப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு, பெண் விடுதலை, எதிர்க் கலாச்சாரப் போக்கு ஆகியவை இருப்பது உண்மை. பெரியாரியத்தைப் பெரியாருக்குப் பின் வந்த தலைவர்கள் மிகவும் சுருக்கிவிட்டார்கள். பார்ப்பனிய எதிர்ப்புக்கு அதிக அளவும், பெயரளவுக்கு மத - சாதி எதிர்ப்பையும் வைத்துக் கொண்டார்கள். மிக ஆழமாகப் பார்க்கும்போது இத்தகைய போக்கிற்குக் காரணம் இவர்களுக்குள் பதுங்கியுள்ள முதலாளிய உணர்வுதான். தாங்களே அதிகாரத்தைக் கையாள்வது, தலைமையைப் பாதுகாப்பது, சொத்து சேர்ப்பது என்று மாறிப் போன போக்கினால் தமிழ் மக்களின் விடுதலை மீதான அக்கறை குறைந்துவிட்டது. பெரியாரியத்தைத் திரும்பப் புதுப்பிக்க அதிலுள்ள சமதர்ம உணர்வு, சோஷலிஸ உணர்வு, சாதி - மத பார்ப்பனிய எதிர்ப்பு எல்லாவற்றையும் இணைத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய பெரியாரியத்துக்கு இன்று பெரிதும் தேவையிருக்கிறது. மேலும் பெரியாரியமும் மார்க்சியமும் கைகோத்துக் கொள்வது முக்கியம்.

● **திறனாய்வுப் போக்குகள் குறித்து வகைப்படுத்தும் போது - சி.சு.செல்லப்பா, க.நா.சு. வெங்கட்சாமிநாதன், பிரமிள், சுந்தர ராமசாமி, கைலாசபதி, சிவத்தம்பி, கேசவன், மற்றும் தமிழவன் போன்ற அமைப்பியல்வாதிகள் - இவர்களின் போக்குகளிலிருந்து நீங்கள் எவ்வாறு மாறுபடுகிறீர்கள்?**

இவர்களின் திறனாய்வுப் போக்குகளில் எனக்கு உடன்பாடும் உண்டு, மாறுபாடும் உண்டு. சி.சு. செல்லப்பா, க.நா.சு.,

வெங்கட்சாமிநாதன், பிரமிள், சு.ரா. ஆகியோரின் போக்கைப் பார்ப்பனிய சார்பென்று சொல்கிறார்கள். என்னைப் பொறுத்தவரையில் வெ.சா. போன்றவர்கள் "மார்க்ஸின் கல்லறையிலிருந்து ஒரு குரல்" போன்ற கட்டுரைகளை எழுதியிருந்தால்கூட, ஒட்டுமொத்தமாக இவர்கள் அன்றும் சரி, இன்றும் சரி மார்க்சியத்திற்கு எதிரானவர்கள் அல்ல. இவர்களின் ஒட்டுமொத்தமான திறனாய்வுகளைப் பார்த்தால் சமூக நலத்திற்கோ இலக்கிய நலத்திற்கோ இவர்கள் எதிரானவர்களல்ல. இவர்களுக்குள் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பார்ப்பனிய இழைகள் தென்பட்டாலும் கூட, இவர்கள் தமிழ் இலக்கியத்தின் ஆக்கத்தோடு தங்களை மிகவும் ஈடுபடுத்திக் கொண்டவர்கள். தமிழ்த் திறனாய்வுப் பரப்புகளைப் பெருமளவு விரித்தவர்கள். நிறைய இழப்புகளைச் சந்தித்தவர்கள். நமது உணர்வுகளைச் சமூகத்திற்கு நெருக்கமாகக் கொண்டு வருவதில் இவர்களின் பங்களிப்பு மிக முக்கியமானது. இவர்கள் பிறப்பால் பார்ப்பனர்களென்கிற காரணத்தால் இவர்களை விமரிசிப்பது இலக்கிய விமரிசனங்களுக்குக் கேவலம்.

கைலாசபதி, சிவத்தம்பி, கேசவன் ஆகியோரிடமிருந்து மார்க்சியத் திறனாய்வு முறைகளை நான் கற்றிருக்கிறேன். என்றாலும் தொடக்கத்திலிருந்தே இவர்களின் விமரிசனப் போக்கிலிருந்து நான் வித்தியாசப்பட்டிருந்தேன். இவர்களின் போக்குகளில் ஸ்டாலினியம் ஊடுருவியிருந்தது. கட்சி ஆட்களை மட்டுமே மதித்தார்கள். மாயாகோவ்ஸ்கி, பாப்லோ நெருடா ஆகியோரின் புதுக் கவிதைகளைள ஏற்றுக்கொண்ட இவர்கள், தமிழகச் சூழலில் புதுக் கவிதையைப் புறக்கணித்தார்கள். மார்க்சியத்தில் மாவோயிஸம் முக்கியப்படுத்தப்பட வேண்டிய சமயங்களில் கைலாசபதி தடுமாறினார். மாஸ்கோ சார்பு இவர்களிடம் அதிகம். திராவிடப் பார்வைகளுக்கு எதிரான பார்வைகளே இன்றுவரை இவர்களிடம் இருக்கிறது. தனித்தமிழ் கண்ணோட்டத்திலும் மாறுபட்டார்கள். திருவள்ளுவரை வணிக வர்க்கம் என்று எழுதி இலக்கியச் சார்பை வர்க்கச் சார்பாகப் பார்த்தார்கள். பக்தி இலக்கியங்களுக்கெதிரான பார்வைகளை முன்வைத்தார்கள். அந்நியமாதலுக்கு நான் அதிகம் அழுத்தம் கொடுத்தபோது இவர்கள் யாரும் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அதை பூர்ஷ்வா கோட்பாடு என்று சொன்னார்கள்.

படைப்பியக்கத்தைப் பொறுத்தவரை creative processக்கு நான் மிக அழுத்தம் தருகிறேன். Creativity என்பது எனக்குப் பெரிய பிரச்சினையாகத் தோன்றுகிறது. இதை உற்பத்தினு அமைப்பியலாளர்கள் சுருக்குவதில் எனக்கு உடன்பாடில்லை. அமைப்பியல் பற்றித் தமிழவன் போன்றவர்கள் சொல்கிறார்கள். இவைகளின் மூல நூல்களை நான் படித்ததில்லை. இதில் தமிழவன், எம்.டி.எம்., நாகார்ஜுனன்,

அ. மார்க்ஸ் ஒரு மாதிரி சொல்கிறார்கள். நோயல் இருதயராஜ் வேறு மாதிரி சொல்கிறார். என்னைப் பொறுத்தவரை 1965லிருந்து இன்று வரைக்கும் மார்க்சியத்தை விட்டு விலகிச் சிந்திப்பது எனக்குச் சாத்தியமில்லை. மார்க்சியத்தோடு முரண்படுவதோ வேறுபடுவதோ முடியாது. மார்க்சியத்தோடுதான் வாழ்வு, மார்க்சியத்தோடுதான் சாவு என்கிற அளவுக்கு அதில் ஊறிப் போய்விட்டேன்.ஆரோக்கியமான விவாதங்கள் நமக்குள் அவசியம். தமிழவனைப் பொறுத்தவரையில் பார்ப்பனியம் பற்றிச் சரியான வரையறை வைத்துக் கொள்ளலாம். எல்லாருக்குள்ளேயும் பார்ப்பனியத்தைக் கண்டுபிடிப்பது சரியல்ல. பிறரைப் பார்ப்பனியர் ஆக்குவதன் மூலம் நாம் இவர்களை எதிரிகளாக ஆக்கி விடுகிறோம். இவர்கள் எந்த ஏகாதிபத்தியத்திற்கும் அடிமைப்பட்டவர்களல்ல தமிழ் இலக்கியச் சூழலில் நம்மோடுதான் இவர்களின் வாழ்வு. இந்த மையத்தில் அவர்களோடு நாம் கைகோத்துக் கொள்ள வேண்டும்.

- **தலித்தியம் குறித்துத் தங்களின் கருத்து ...?**

தலித் இலக்கியத்தை வரவேற்கிறேன். இதில் எனக்கு எந்த முரண்பாடுமில்லை. தலித் இலக்கியத்தைக் காட்டிலும் தலித் வாழ்க்கையின் பல்வேறு தளங்களும், கிராமங்களில் மக்கள் படும் கஷ்டம், அவமானங்கள் எல்லாம் உள்ளடக்கி நிறையக் கதைகளும் கட்டுரைகளும் தமிழில் வெளிவர வேண்டும்.

அடுத்து, தலித் இலக்கியம்னு பேசும்பொழுது தலித் இலக்கியம் என்பது தலித்துகள்தான் எழுத வேண்டுமென்கிற ஒரு குரலை சிலர் உரத்து எழுப்புகிறார்கள். எழுதவேண்டும் என்று சொன்னாலே எழுத்துப் பயிற்சி முக்கியம். பலருக்கு அனுபவம் இருந்தாலும் எழுத முடிவதில்லை. தலித்துகளில் எழுத் வருபவர்களுக்கு இலக்கியப் பயிற்சி இருக்க வேண்டும். அவர்கள் படித்து வேலைக்கு வரும்போது கூடவே மத்திய தர வர்க்கத்தின் குணங்களும் வ்ந்துவிடும். ஆக இந்தப் படிப்பாளிகள் எழுதக் கூடியது அசலான தலித் இலக்கியமாக இருக்குமா என்கிற கேள்விக்கு இடம் உண்டு. இருந்தாலும் தலித் ஒருவரால் தன்னுடைய மக்கள் குறித்துச் சரியாக எழுத முடியும் என்பதை நாம் ஏற்றுக் கொள்ளலாம். இலக்கிய உத்திகள் சரியாக வரவில்லை என்றெல்லாம் நாம் சொல்ல வேண்டாம். முதலில் அவர்கள் எழுதட்டும். தலித் படிப்பாளிகள் மூலமாகத் தலித்துகள் பற்றி விரிவாக எழுதட்டும். தொடர்ந்து எழுதி எழுதி இலக்கியப் பக்குவம் வரட்டும். இவர்களும் தலித் கலை இலக்கியம் படைக்க முடியும்.

இன்னொன்று, தலித் இலக்கியத்தை இலக்கிய ஈடுபாடுள்ள யாரும் எழுத முடியும். தலித்துகள்தான் எழுத வேண்டும் - மற்றவர்கள் எழுத வேண்டாம் என்று சொல்வது ஒரு கொலையாளி உடைய வாழ்க்கையை ஒரு கொலையாளிதான் எழுத முடியும் - ஒரு பெண்ணின் வாழ்க்கையை ஒரு பெண்தான் எழுத முடியும் என்பது போன்ற பிரச்சினையாகப் போய்விடும். கோட்பாட்டுக் குழப்பம் ஏற்படும்.

**● காந்தியத்தை மார்க்சியவாதிகள் மறுக்கிற போக்கு சரியா? காந்தியத்தின் இன்றைய தேவை என்ன?**

காந்தியைப் பொறுத்தவரையில் அவர் இயந்திரங்களை முழுதாக மறுக்கவில்லை. விஞ்ஞானத்தின் விளைவு முதலாளிகளுக்குப் போய்ச் சேர்வதிலும் காந்திக்கு உடன்பாடில்லை. இன்றைய கிராமங்கள் சுற்றுப்புற இயற்கைச் சூழல் அழிந்து கொண்டு வருவதைத் தடுப்பதில் காந்தியத்திற்கு அர்த்தமிருக்கிறது. மரபு ரீதியான தொழில்களை சாதி ரீதியாக பிரிப்பது காந்திக்கு உடன்பாடு இருந்தாலும் நாம் அதை மறுத்தாக வேண்டும். காந்தி சொன்ன பஞ்சாயத்து என்கிற அம்சத்தைச் சரியான அர்த்தத்திலேயே பார்க்கலாம். இயற்கை மருத்துவத்தை வற்புறுத்தினார். இவற்றை நாம் காந்தியின் பெயர் சொல்லாமலே எத்தனையோ வடிவங்களில் வளர்த்தெடுக்க முடியும். காந்தியின் தலைமையிலான விடுதலைப் போராட்டத்தை லெனின் ஏற்றுக் கொண்டதாகச் சொல்கிறார்கள். இன்றைய உலகச் சூழலில், சுற்றுச்சூழல் நாசம் என்கிற நிலையில், மக்கள் மத்தியிலுள்ள முரண்பாடுகளை, நட்பு முரண்பாடுகளாகப் பாவித்து அதை எப்படித் தீர்ப்பது என்கிற இடத்தில் காந்தியை நாம் பொருட்படுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது.

**● தமிழகத்தின் பண்பாட்டு நெருக்கடிகளென நீங்கள் எவற்றை மதிப்பீடுகிறீர்கள்?**

தமிழ்நாட்டில் பல்வேறு வகையான இயக்கங்கள் இருக்கின்றன. இந்த இயக்கங்களுக்கிடையே கடுமையான கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. எதிரியை எதிர்கொள்கிற அளவுக்கு நம்முடைய இயக்கங்கள் தமக்குள் இருக்கிற வேறுபாடுகளைக் குறைத்து, பலப்படுத்தக் கூடிய அம்சங்களைப் பலப்படுத்தி ஒருங்கிணைந்த போராட்டம் என்பது நமக்குத் தேவையாயிருக்கிறது. ஆனால் நிலைமை இப்போது அப்படியில்லை. மார்க்சியம், அம்பேத்காரியம், பெரியாரியம், தலித்தியம், பெண்ணியம், தமிழியம் எல்லாமே தனித்தனியாக ஆளுக்கொரு பக்கம் துண்டுபட்டு வேறுபட்டு

முரண்பட்டிருப்பதில் அர்த்தமில்லை. இவ்வியக்கங்கள் எல்லாவற்றிலும் மக்கள் விடுதலைக்கான அம்சங்களின் இழைகள் உள்ளன. இந்த எல்லாப் போக்குகளையும் ஒருங்கிணைக்கிற ஒரு மையத்தை நாம் கண்டுபிடிக்க வேண்டும். அப்படிக் கண்டுபிடிக்கும்போது சோஷலிஸ சமதர்மம்தான் இவைகளுக்குள் ஓடுகிற பொதுவான இழை என புரிந்து கொள்ள முடியும்.

**● "நீங்கள் பார்ப்பன ஆதரவாளர்" என்ற விமரிசனம் பற்றி ...?**

பார்ப்பனியம் என்றால் என்ன வரையறையை வைத்துள்ளார்கள் என்பது முதல் விஷயம். அடுத்தது இந்திய வரலாற்றில் பார்ப்பனியம் எல்லாக் காலத்திலேயும் ஒரே வடிவத்தில் இல்லை. பல்வேறு வடிவங்களிலும் மாறி வந்துள்ளது என்பதையும் கவனிக்க வேண்டும். அடுத்தது சமதர்மம் என்கிற ஆதாரத்திலிருந்து உலகளாவிய பல பிரச்சினைகளை நாம் பார்க்க வேண்டும். பார்ப்பனியம் என்கிற ஒற்றை முனையில் நம்முடைய எதிர்ப்பைக் குவிக்கிறபோது மற்றவைகளெல்லாம் நம் கவனத்திலிருந்து தப்பி விடும். சுரண்டலும், ஒடுக்குமுறையும் எந்த வடிவத்தில் இருந்தாலும் நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். பார்ப்பனியம் சுரண்டலாய் ஒடுக்குமுறையாய்ச் செயல்படுமென்றால் அதில் எனக்கு உடன்பாடில்லை. தவிரப் பார்ப்பனியம் ஏன்பது அதிக அளவில் கருத்தியல்தான். இதைவிட வலிமையுள்ள பொருளியல் மற்றும் அரசியல் சக்திகள் இருக்கின்றன. இவ்விரண்டையும் இணைத்து எதிர்ப்பது என்பதுதான் எனது அணுகுமுறை. ஒன்றை மட்டும் பிரித்து எதிர்ப்பது என்பது வளமான அணுகுமுறையல்ல. பார்ப்பனர்கள் என்று சொல்லி எதிரணிக்குத் தள்ளி எதிரியைப் பலப்படுத்துவதைக் காட்டிலும், ஆரோக்கியமான முறையில் விவாதிப்பதன் மூலம் அவர்களை நமது அணிக்குக் கொண்டு வருவதே மக்கள் விடுதலையை நம்பக் கூடியவர்கள் செய்கிற காரியமாக இருக்க முடியும். இவர்கள் யாரும் இந்துத்துவத்திற்குக் கொடி தூக்கவில்லை. பாபர் மசூதி தகர்ப்பை நியாயப்படுத்தவில்லை.

கவிதையின் நுட்பமான விஷயங்களைப் பற்றிச் சொல்வதெல்லாம் பார்ப்பனியம் என்றால் கணிதம், இயற்பியல் போன்றவற்றின் நுணுக்கமான ஆய்வுகளுக்கெல்லாம் பூணூல் போட்டுப் பார்க்க முடியுமா? ஒரு கோட்பாட்டைப் பற்றிய சரியான புரிதலின்மையையே இது காட்டுகிறது.

**சுபமங்களா**

ஆகஸ்டு 1995